ரகுநாதன்

# கன்னிகா

மீனாட்சி புத்தக நிலையம்

# கன்னிகா

## ரகுநாதன்



மீனாட்சி புத்தக நிலையம்
60, மேலக் கோபுரத் தெரு, மதுரை-1

கிளை: 228, திருவல்லிக்கேணி நெடுஞ்சாலை, சென்னை-5

முதற் பதிப்பு—மே 1950
இரண்டாம் பதிப்பு—மார்ச் 1958
மூன்றும் பதிப்பு—செப்டம்பர் 1963
நான்காம் பதிப்பு—அக்டோபர் 1980

மீனாட்சி—168



விலை ரூ. 7-00

**KANNIKA**
Tamil Novel
By **RAGUNATHAN**
(C) Smt. Ranjitham Ragunathan
Fourth Edition, October, 1980
160 Pages
10 pt. letters
18 × 12.5 cms
11.6 Kg. D/C
Indonesian White Printing; supplied by Hindusthan Paper Corporation
Box Board binding
B. M S. Printers, Madras-5
Call No. O, 31, 3N 237, K : MO

**MEENAKSHI PUTHAKA NILAYAM**
60, West Tower Street, Madurai-625 001

Branch: **228, Triplicane High Road, Madras-600005**

## பதிப்புரை

ஆசிரியர் ரகுநாதனைத் தமிழகம் நன்கு அறியும். அவரது நாவல்களும், கதைகளும், கட்டுரைகளும், கவிதைகளும் தமிழ் வாசகர்களின் மனத்தைப் பெரிதும் கவர்ந்தவை. புதுமையும் முற்போக்கும் நிறைந்த கதைகளை எழுதும் இந்த எழுத்தாளர் நம் நாட்டின் தலைசிறந்த கதாசிரியர்களில் ஒருவராகத் திகழ்கிறார். நீண்ட இடைவேளைக்குப் பிறகு இவரது கருத்துச் செறிவுமிக்க, படிக்கப் படிக்க இன்பம் தரும், படைப்புக்களைத் தமிழ் இலக்கிய நண்பர்களுக்கு வழங்கும் நற்பேறு எங்களுக்குக் கிட்டியதில் பெருமகிழ்ச்சி கொள்ளுகிறோம்.

ஆசிரியர் ரகுநாதனின் 'கன்னிகா' என்ற இந்த நாவலை முதலில் சக்தி காரியாலயத்தார் வெளியிட்டனர். நல்லதமிழ் நூல்களை அறிமுகப்படுத்திய சக்தி காரியாலயத்தார்க்கும் ஆசிரியருக்கும் இதயபூர்வமான நன்றி கூறி, இந்நூலின் இப்பதிப்பை எங்கள் வெளியீடாக உங்கள் முன் பெருமையுடன் சமர்ப்பிக்கின்றோம்.

மதுரை
1—10—80

செ. செல்லப்பன்

# குறிப்பு

இந்தக் கதையின் மூலக் கருத்தைச் சிறு கதையாக எழுதிப் பார்த்தேன். திருப்தி யில்லை. எனவே அடி முடி தொட்டு நாவ லாக்கி எழுதினேன். அதுதான் 'கன்னிகா.'

பெண்களின் பருவகாலம் பற்றிக் கொக்கோகம், இலக்கண விளக்கப் பாட்டியல் முதலியவற்றில், வெவ்வேறு வித மான வயது வரையறை காணப்படுகிறது. எனவே நான் சௌகரியத்துக்காகவும், தெளி வுக்காகவும் ஐந்தைந்து ஆண்டுகளாக வகுத் துக் கொண்டிருக்கிறேன்.

மே. '50

ரகுநாதன்

# பேதை

இனையர் பலர்புகழ ஈங்கொருத்தி, முத்தில்
புனையும் சிறுதொடிக்கைப் பூவை;—கனமுகில்நேர்
ஆடாத தோகை; அலராத புண்டரிகம்;
பாடாத பிள்ளைப் பசுங் கிள்ளை;—சூடாத்
தளிராத சூதம்; தழையாத வஞ்சி;
குளிராத திங்கள் குழவி;— அளிகள்
இயங்காத தண்கா; இறங்காத தேறல்;
வயங்காத கற்பக வல்லி—தயங்கிணர்க்
கூழைச் சுருள்முடிக்கும் கூடுவதும் கூடாதாம்
ஏழைப் பருவத்து இளம்பேதை !

— குலோத்துங்க சோழன் உலா

## 5 - 10

''கமலீ!''

''..........''

''கமலீ! ஏ கமலீ!''

''எதுக்காம்?''

''எல்லாம் ஆச்சுதா?''

''ஆகாமலென்ன?''

''சரி சரி. நீ சமையல் பண்ணிப் போடறதுக்குள்ளே ஒரு மூச்சு தூக்கம் போட்டு எழுந்திருக்கலாம் போலிருக்கே!''

''போடுங்களேன்!''

''சரிதான், இப்படி இருந்தா?''

''எப்படி இருந்தா?''

''ஏண்டி, எதிர்த்தா பேசறே?''

''என்ன 'டீ'யா, இனிமே டீன்னு...''

''பொஞ்சாதியை டீன்னு கூப்பிடாமெ—''

''அப்படிக் கூப்பிடக் கூடாது!''

''கூப்பிட்டா?''

''நானும் 'டா'ம்பேன்.''

''எங்கே? அதையும்தான் பார்ப்போம். ஒண்ணுக்கு ஒம்பது டீ சொல்றேன். டீ! டீ! டீ! டீ!...''

''ராமா! நானும் 'டா'ன்னிடுவேன்.''

''டீ! டீ! டீ!''

''டா! டா! டா!''

அந்தத் தம்பதிகள் இருவரும் விழுந்து விழுந்து சிரித்தார்கள். சிரிப்பை அடக்க முடியவில்லை.

''நீ அசல் பொஞ்சாதி மாதிரியே பேசிட்டியே!'' என்றான் அவள் 'கணவன்'.

''நீ மட்டும் என்னவாம்?'' என்று குணங்கினாள் அந்த 'மனைவி'.

அந்தக் கணவனுக்குப் பன்னிரண்டு வயது; மனைவிக்கு ஒன்பது வயது. கமலுவும், ராமுவும் பால்யத் தோழர்கள். எனவே, அவர்கள் 'அப்பா—அம்மா' விளையாட்டு விளையாடிக் கொண்டிருந்தார்கள். இருவரும் வயிறு வலிக்கச் சிரித்து ஓய்ந்தவுடன், கமலு தன் சாமான்களை அடுக்க ஆரம்பித்தாள்.

''என்ன, விளையாட வேண்டாமா?''

''இன்னும் என்ன விளையாட!''

''இங்கே வா, சொல்றேன்'' என்று ரகசியமாக அவளைத் தன் பக்கத்திலே கூப்பிட்டான் ராமு. கமலு நெருங்கிச் சென்றாள்.

''கமலீ! கமலீ!''

அது அம்மாவின் குரல். அடுக்களையிலிருந்து கமலாவின் அம்மா கூப்பிட்டாள். அந்தக் குரல் ராமுவுக்கும், கமலுவுக்கும் குறுக்கே விழுந்து வழி மறித்தது.

''அம்மா கூப்பிடறா. நான் வர்ரேன்'' என்று ஓடினாள் கமலு.

''இந்தா கமலீ! வா'ன்னா.''

''அப்புறம்'மா.''

''சரி சரி. அப்புறம்'மா வா. உனக்குப் புதுப்புது விளையாட்டெல்லாம் சொல்லித் தாரேன்'' என்றான் ராமு.

கமலு பின்னிவிட்ட ஜடை சாட்டை மாதிரி சொடுக்கித் துள்ள, பால் பற்களின் சிரிப்பு வெடிக்க ஓடி மறைந்தாள். ராமு அவள் சென்ற திசையையே வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்தான்.

## 2

கமலு சிறுமி. பால்யத்தின் பேதைமை மறைந்தும் மறையாமலிருக்கும் சிறுமி; அழகிய சிறுமி. அந்த அழகுக்குக் காரணம் அவள் அம்மா. அவள் அம்மா ஒரு ரதி: கமலா ரதிக் குஞ்சு!

கமலுவுக்கு இப்போது எட்டு முடிந்து ஒன்பதாவது வயது நடந்துகொண்டிருந்தது. ஒடிசலான உடல். வயதுக்குத் தக்க வளர்ச்சி என்று சொல்ல முடியாது. என்றாலும், சுண்டினால் முறிந்து விழும் முளைக்கீரைத் தண்டைப் போன்ற துவட்சியும், மெதுவும் நிறைந்த தேகம். கண்கள் நாவல் பழம் போலப் பளபளத்தன; எனினும் கறை படியாத கண்கள். உதடுகள் சிவப்புத்தான்; இருந்தாலும் பவளத்தின் துண்டச் சிவப்பில்லை; மங்கிய ஒளிக் கீற்றுத்தான். புருவங்கள் வில்லாய் வளைந்தவை; எனினும் பூமயிர் கறுக்கவில்லை. மாம்பழக் கதுப்பைப்போல் பளபளக்கும் நெற்றி. தடிப்பு அறியாமல், தொய்ந்து மெதுவேறித் துவளும் எலிமயிர்க் கூந்தல். இதெல்லாம் மேலோட்டமாகத் தெரியும் லக்ஷணங்கள்.

அதிலும், அவள் தாய் அவளுக்குத் தலைவாரிப் பூ முடித்து, கண்ணுக்கு மை தீட்டி, நெற்றிக்குப் பொட்டிட்டு அனுப்பி விட்டால், ஒரு பாலதேவதைப் பதுமைபோல விளங்குவாள் கமலா. கையெடுத்துக் கும்பிடலாம் போலிருக்கும். அத்தனை தெய்வீக அழகு; திருஷ்டி விழும் சௌந்தர்யம்.

அவள் கண்ணுக்கு இனிமை தரும் அழகிதான். என்றாலும், கமலு கொம்பு முளைக்காத மான்குட்டி. கட்டுலையாத

மலர் மொக்கு; கணு வெடிக்காத கரும்பு; பட்டை தீட்டாத ரத்தினம்; உலை புகாத தங்கம்; முளை விடாத வித்து—அவள் ஒரு பேதை.

பேதையென்று சொல்லும்போது பிரெஞ்சுக் கதாசிரியன் பால்சாக் எழுதிய அந்தக் கதை—

இரண்டு குழந்தைகள். ஒரு சிறுவன்; ஒரு சிறுமி. இருவரும் முதன்முதலாக, ஆதாம் ஏவாள் படத்தைப் பார்க்கிறார்கள். ஆதாமும் ஏவாளும் பிறந்த மேனியாக நிற்கிறார்கள். சித்திரங்களில் வழக்கமாக இடம் பெறும் அரசிலை கூட இல்லாத கோலம். அந்த ஆதிப் பெற்றோர்களை அந்தப் பையன் வெறித்துப் பார்க்கிறான். பிறகு அந்தச் சிறுமியைப் பார்த்து, ''இவர்களில் யார் ஆதாம், யார் ஏவாள்?'' என்று கேட்கிறான்.

''அதெப்படிச் சொல்ல முடியும்? அவர்கள் அடையாளம் கண்டு கொள்ள உடையா உடுத்தியிருக்கிறார்கள்?'' என்கிறாள் சிறுமி.

இருவருக்கும் ஆதாம் யார், ஏவாள் யார் என்று தெரியவில்லை—இதுதான் கதாம்சம்.

உடை உடுத்தியிருந்தாலன்றி பால் பேதம் கண்டறிய முடியாத குழந்தைகளின் பேதைமையை எவ்வளவு லகுவாக விளக்கிவிட்டான், இந்தக் கதாசிரியன்!

இன்று கமலு அந்த அளவுக்குப் பேதை அல்ல. என்றாலும் அந்தப் பேதைமை குடிகொண்டிருந்த காலமும் உண்டு. சூழ்நிலையும், காலமும் மனித வர்க்கத்தின் பகுத்தறிவு என்றும் விலக்கப்பட்ட கனியைக் கொடுக்குமுன்னர், அவளிடம் இருந்த அந்த அப்பழுக்கற்ற பேதைமையை எப்படி விளக்க முடியும்? அது சொல்லில் அடங்காத சூத்திரம்.

அந்தச் சிறு வயதில்...

## 3

ஒரு சம்பவம்.

அப்போது அவளுக்கு மனிதர்கள் ஏன் ஆடையணி கிறார்கள் என்றுகூடத் தெரியாத இளம் பருவம். அறிவு பதியாத அவளது பிஞ்சு மனத்தில் அதைக் கணித்தறியச் சக்தியும் கிடையாது. அவள் வீட்டுக்கு யாராவது அன்னியர்கள்—ஆண்கள் வந்தால், அவள் அம்மாவோ, வீட்டைவிட்டு வெளிச் செல்லாத அக்காவோ வந்தவர் களோடு நேருக்கு நேர் நின்று பேசாமல், வீட்டுக்குள் சென்று கதவுக்குப் பின்னால் மறைந்து கொண்டோ, சுவரைப் பார்த்துக் கொண்டோ பேசுவதை அவள் கவனித்திருந்தாள். அவர்கள் ஏன் இப்படி ஓடி ஒளிகிறார்கள்? ஆண்கள் வந்தால், அன்னியர்கள் வந்தால் முகத்தைக் காட்டக் கூடாதா என்ன? —என்றெல்லாம் பிஞ்சு மனத்தின் எல்லையில் கேள்விகள் முளைத்தன.

உடனே தீர்மானம் பண்ணிவிட்டாள்: ''இனி யாராவது வந்தால் நானும் முகத்தைக் காட்டக் கூடாது!''

ஒருநாள் அவள் அப்பாவைத் தேடி ஒருவர் வந்தார். அவர் வரும்போது முற்றத்தில் பாண்டி கீறி, நொண்டி யடித்துக் கொண்டிருந்தாள், கமலு.

வந்தவர் கமலுவைப் பார்த்து, ''கமலீ! அப்பா எங்கே?'' என்று கேட்டார்.

கமலு இரு கைகளாலும் முகத்தை மூடிக் கொண்டாள்.

''அதற்குள் உனக்கு வெட்கம் வந்துட்டதாடி?'' என்று சொல்லிக் கொண்டே, முகத்தை மூடிய கைகளை விலக்கினார், வந்தவர்.

கமலுவுக்கு என்ன செய்வதென்று தெரியவில்லை. பீதியும் பயமும் கலந்து மிஞ்சும் வெட்க உணர்ச்சி குடிகொண்டது.

முகம் குப்பென்று சிவந்தது. கேட்ட கேள்விக்குப் பதில் சொல்ல வாய் வரவில்லை. திக்குமுக்காடிப் போய், பதில் சொல்ல அம்மாவாவது, அக்காவாவது பக்கத்தில் இருக்கிறார்களா என்று திருகத் திருகப் பார்த்தாள். ஒருவரையும் காணோம்.

"சொல்லடி! வெளியே போயிருக்கிறாரா?"

கமலுவுக்கு முகத்தைக் காட்டிக்கொண்டு நிற்க முடியவில்லை. அவள் மனசில் பதிந்த அந்த உண்மை தலை தூக்கியது. உடனே விறுட்டென்று அணிந்திருந்த கவுனை முகத்துக்கு மேல் தூக்கி முகத்தை மூடிக்கொண்டாள்! உடம்பிலே கவுன் அணிவது முகத்தை மறைக்கத்தான் என்று நம்பினாள். அதனால், மற்றக் கவலையில்லை.

வந்தவர் அவள் நின்ற கோலத்தைக் கண்டு சிரிசிரியென்று சிரித்தார்.

கமலு பயந்துபோய் உள்ளே ஓடிவிட்டாள்!

இதுதான் கமலுவின் பேதைமை. இந்தப் பேதைமையில் தான் தெய்வீக அழகு இருப்பதாகக் கவிஞர்கள் கூறுகிறார்கள். ஆனால், அது யாருக்குத் தெரியும்? எனினும், இந்தப் பேதைமையின் அறிவின் கறை படியப் படிய பேதைமை மறைந்து கொண்டேதான் வந்தது! பிள்ளைப் பருவத்தின் பேதைமை மறைவதை எப்படிச் சொல்வது? அறிவு எப்படிப் படிகிறது?.........

## 4

போன வருஷம் ஊரிலிருந்து அவள் அத்தை வந்திருந்தாள். வரும்போது, கமலுவுக்கு வர்ணம் தடவிய மரச் சப்புச் சாமான்கள் வாங்கி வந்திருந்தாள். கமலுவின் தம்பிக்கு ஒரு குதிரைப் பொம்மையையும் வாங்கி வந்திருந்தாள். அந்தக் குதிரைப் பொம்மை பார்ப்பதற்கு மிகவும்

அழகாயிருந்தது. குதிரைப் பொம்மையைக் கண்டதும், கமலு அந்தப் பொம்மை தனக்குத்தான் வேண்டும் என்றும், செப்புச் சாமான்களை அவள் தம்பி எடுத்துக் கொள்ளட்டும் என்றும் பிடிவாதம் பிடித்தாள். அவள் தம்பியோ 'எனக்குக் குதிரைதான் வேண்டும்; செப்பு வேண்டாம்' என்று அழுதான்.

அத்தை பார்த்தாள்.

''அவரவருக்கு வாங்கி வந்ததை அவரவர்களே வைத்துக் கொள்ளுங்கள். கமலீ! பெண் பிள்ளைக்குக் குதிரையெல்லாம் எதற்கு? நீ செப்புச் சாமான் வைத்து விளையாடு, போ'' என்றாள்.

—அப்படியானால், பெண் பிள்ளைகள் குதிரைப் பொம்மை வைத்து விளையாடக் கூடாதா? செப்பு வைத்துத்தான் விளையாட வேண்டுமா? செப்பு வைத்துக்கொண்டு எப்படி விளையாடுவது? அன்று எதிர்த்த வீட்டு லல்லு விளையாடிக் கொண்டிருந்தாளே!

உடனே கமலு அவளைத் தேடி ஓடினாள்.

லல்லு அந்தச் செப்பையெல்லாம் பார்த்துப் பிரமித்துப் போனாள். ''ஏதடி இந்தச் செப்பெல்லாம்? அழகாயிருக்கே!'' என்றாள்.

''அத்தை குடுத்தா'' என்று பெருமையோடு சொன்னாள் கமலு.

''சரி சரி. தா. எங்க வீட்டிலே சிறு வீடு கட்டியிருக்கு. வா, சோறு பொங்கி விளையாடலாம்'' என்று கூப்பிட்டாள் லல்லு.

— பெண்கள் சோறு பொங்கித்தான் விளையாட வேண்டுமா? அப்படியானால், அம்மா தினம் தினம் சோறு பொங்குகிறாளே! அதெல்லாம் விளையாட்டுதானா? சின்னப் பிள்ளைக்குச் சின்னச் செப்பு; பெரிய பிள்ளைக்குப் பெரிய செப்பு! அப்படித்தானா?...

"என்னடி, விளையாட வந்தே. சும்மா இருக்கியே. இந்த மண்ணைத் தெள்ளித்தா" என்றாள் லல்லு.

அன்று முதல் லல்லுவும், கமலுவும் செப்புச் சட்டிகளில் சோறு பொங்கி விளையாட ஆரம்பித்தார்கள்.

## 5

உலகில் அம்மாவும் அப்பாவும் கூடத்தான் விளையாடுகிறார்கள். எல்லோரும் விளையாடுவதைத் தவிர வேறு ஒன்றும் செய்யவில்லை என்று நினைத்தாள் கமலு. உடனே தானும் அவர்களைப் போலவே விளையாட ஆரம்பித்துவிட்டாள்.

சிறு வீடு கட்டி, அதில் சிறுசோறு பொங்கி விளையாடும் போது, அதைத் தின்பதற்கு அப்பாவும் அம்மாவும் வேண்டாமா? அந்த அம்மா அப்பா ஸ்தானத்தை அவளது விளையாட்டுப் பொம்மைகள் நிரப்பின. போன மாதம் அவர்கள் வீட்டுக்குத் தச்சு வேலை செய்ய வந்தவன் அவளுக்கு கருங்காலிக் கட்டையில் இரண்டு மரப்பாச்சிகளும் செதுக்கிக் கொடுத்திருந்தான். லல்லுவும், கமலுவும் அந்த மரப்பாச்சிகளையே அப்பா-அம்மாவாக்கி விட்டார்கள்.

இரண்டும் ஒரே மாதிரியான மரப்பாச்சிகள். பால் பேதம் கண்டறிய முடியாத உருவங்கள். கண்டறியும் வகையிலும் தச்சன் செய்து கொடுக்கவில்லை; கொடுத்திருந்தாலும், அந்தச் சின்னஞ்சிறுசுகளுக்குத் தெரிந்திருக்காது. எனவே இன்று அப்பாவாயிருக்கும் மரப்பாச்சி நாளை அம்மாவாகி விடும்; இன்று அம்மாவாயிருக்கும் மரப்பாச்சி நாளை அப்பாவாகிவிடும்; சமயத்தில் அதே மரப்பாச்சி சப்பரத்தில் ஏறி வரும் சாமியாகவும் இருக்கும்.

அப்பா மரப்பாச்சி சிறு வீட்டின் கூடத்திலே படுத்துக் கிடக்கும்; அம்மா மரப்பாச்சி அடுப்பங்கரையிலே படுத்துக் கிடக்கும். கமலுவும் லல்லுவும் ஆளுக்கொருவராக அப்பா

அம்மாவாகப் பாவித்துக் கொண்டு விளையாடுவார்கள். தெரு மண்ணைக் குழைத்தெடுத்துத் தோசை சுடுவாள் கமலு. தோசையை ஊற்றும்போது தன் வாயினால் 'சுர்' என்று சொல்லிக் கொள்வாள். உடனே கூடத்திலிருக்கும் அப்பா மரப்பாச்சியின் சார்பாக லல்லு பேசுவாள்.

''என்னடி, குழந்தை அழறது தெரியலெ'' என்பாள் லல்லு. பிறகு, அங்குள்ள குழந்தை மரப்பாச்சியின் பிரதி பலிப்பாக, 'கீச் கீச்' சென்று அழுதும் காட்டுவாள்.

உடனே கமலு தோசையையெல்லாம் போட்டுவிட்டு ஓடி வந்து, அந்தக் குழந்தை மரப்பாச்சியை வைத்துக் கொண்டு, ''கண்ணே அழாதே! அழாதேடா. அப்பாட்டெச் சொல்லி உனக்கு அல்வா வாங்கித் தாரேன். தூங்குடா. தூங்கு தூங்கு'' என்பாள். பிறகு தனக்குத் தெரிந்த தாலாட்டுப் பாட்டு ஒன்றும் பாடுவாள். பாட்டு ஒன்றும் தெரியா விட்டால், வெறுமனே பாடுகிற மாதிரியாவது முனகுவாள்.

இப்படியெல்லாம் அவள் விளையாடிய போதிலும், அவளுக்கு எது ஆண் மரப்பாச்சி, எது பெண் மரப்பாச்சி என்று தெரியவில்லை; தெரிய விரும்பவில்லை; அந்த நினைப்பே இல்லை.

ஒரு நாள் கமலுவின் அக்கா இந்த மரப்பாச்சி விளையாட்டைப் பார்த்தாள்.

''ஏண்டீ கமலீ! இந்த அம்மாவும், அப்பாவும் அம்மண மாகவா இருப்பார்கள்! வெட்கமாயில்லே! ஒரு சட்டை போட்டா என்ன?'' என்று சொன்னாள்.

உடனே அவளுக்கு ஒரு புது உண்மை புலப்பட்டது.

''சரி சரி, அப்படீன்னா, நீயே ஒண்ணு தச்சிக்குடு அக்கா'' என்றாள் கமலு.

அக்கா அந்த இரு மரப்பாச்சிகளுக்கும் துண்டுத் துணி களில் வேட்டியும், சேலையும் கட்டிவிட்டாள். அம்மா மரப்

பாச்சிக்கு பாசி மணிகளைக் கோத்து நகைகளும் பண்ணிப் போட்டாள்.

அன்று முதல் கமலு விளையாடும் போது அம்மா மரப் பாச்சியும், அப்பா மரப்பாச்சியும் ஸ்தானம் மாறிக் கொள்ள வில்லை. ஏனெனில் அப்பா என்றால் வேட்டி கட்டிக் கொண் டிருக்க வேண்டும், அம்மா என்றால் சேலை கட்டியிருக்க வேண்டும் என்று தீர்மானித்து விட்டாள்.

## 6

அன்றொரு நாள் லல்லு விளையாட வரவில்லை. கமலு வெகுநேரம் காத்திருந்து பார்த்தாள். பிறகு தானே போய் அவளைக் கூட்டிக்கொண்டு வரலாம் என்று எதிர்த்த வீட்டுக்குப் போனாள்.

அங்கு யாரோ அழுவது மாதிரி இருந்தது. லல்லுவை அவள் அம்மா அடித்தாளா? ஆனால், அது லல்லுவின் சப்தமாக இல்லை. அவள் அம்மாவே அழுத மாதிரி இருந்தது. லல்லுவின் அம்மா ஏன் அழுகிறாள்? பெரியவர்களும் அழுவார்களா?... பெரியவர்கள் அழுது அவள் பார்த்ததில்லை. எனவே அவ ளுக்குத் தன்னையறியாமல், ஒரு பயம் மனசில் எழுந்தது. இருந் தாலும் அங்கிருந்து ஓடவில்லை; ஓடக் கால்கள் துணியவில்லை.

''லல்லு!'' என்று பயந்துபோய்க் கூப்பிட்டாள்.

லல்லு ஓடிவந்தாள்.

''ஏண்டி, விளையாட வரல்லே?''

''எனக்கு...எனக்கு ஒரு தம்பி வரப்போறான்!'' என்று லல்லு விக்கி விக்கிச் சொன்னாள்.

''தம்பியா? தம்பி வரதை நீ பார்த்தியா?'' என்று கேட்டாள் கமலு. அவளுக்கு எல்லாமே புதிராயிருந்தது. தனக்குத் தம்பி வந்ததை அவள் பார்த்ததே இல்லை. தம்பி

எங்கிருந்து வந்தான், எப்போது வந்தான் என்றெல்லாம் அவளுக்கு ஒன்றும் தெரியாது. அப்போது அவள் பள்ளிக் கூடம் கூடப் போகாத சிறுமி.

''நான் பாக்கலெ. வந்தவுடனே காட்டறேன்னு பாட்டி சொன்னு!'' என்றாள் லல்லு.

கமலுவுக்கு மனசில் ஏதோ உறுத்தியது. உடனே வீட்டுக்கு ஓடிவந்தாள். நேரே அம்மாவிடம் ஓடினாள்.

''அம்மா அம்மா. நம்ம தம்பி எங்கேருந்து வந்தான்?'' என்று அவசரம் அவசரமாகக் கேட்டாள்.

அம்மா திடுக்கிட்டுப்போய் விட்டாள்.

''ஏன்?''

''இல்லெ. லல்லுவுக்கு இன்னைக்கி ஒரு தம்பி வரப்போரு ளும். அதுதான் கேட்டேன்.''

அம்மாவுக்கு என்ன பதில் சொல்வதென்றே தெரிய வில்லை.

''வந்து . தம்பியை ஒரு காக்கா கொண்டுவந்து கொடுத் தது'' என்றாள் தாய்.

''காக்காவா? அப்போ என்னை...?''

''உன்னையும் அந்தக் காக்காதான் கொண்டு வந்து கொடுத்தது'' என்றாள்.

கமலு ஒரு க்ஷணம் கண்ணை உருட்டி விழித்து விரலைக் கடித்துக் கொண்டாள்.

''அந்தக் காக்கா எங்கேம்மா?''

''நம்ம மாடியிலே இருக்கு!''

''மாடியிலா?''

''ஆமா, உங்க அப்பாதான் அந்தக் காக்கா!'' என்று சிரித்துக்கொண்டே சொன்னாள், அம்மா.

கமலுவும் சிரித்தாள். ''என்னம்மா! இருந்திருந்து அப்பாவைப் போய் காக்காங்கிறீயே. இவர் என்ன கறுப்பாவா இருக்கார்?'' என்று கேட்டாள்.

சிறிது நேரம் யோசித்துவிட்டு, ''சரி, அப்படீன்னா, லல்லுவோடெ அம்மா அழுவானேன்?'' என்று கேட்டாள் கமலு.

''உனக்கெதற்கு? யார் அழுதா என்ன? சிரிச்சா என்ன? நீ பாட்டுக்கு விளையாடப்போ'' என்று செல்லக் கோபத்தோடு விரட்டி விட்டாள் தாய்.

கமலுவுக்கு எல்லாம் புதிராகவே இருந்தன; அவளுக்கு அந்த உண்மை புலப்படவில்லை. என்றாலும் மனசில் அந்தச் சம்பவத்தின் கறை படிந்து விட்டது.

## 7

கமலுவுக்குத் தானும், தன் தம்பியும் எங்கிருந்து வந்தோம் என்ற புதிர் விளங்காமலே போய்விட்டது. காலக்கிரமத்தில் அவள் மனசில் அந்த எண்ணத்தின் உறுத்தல் தேய்ந்து மழுங்கிப் போயிருந்தது. இருந்தாலும் அந்தப் பருவமே எதையும் தெரிந்து கொள்ளத் துடிக்கும் பருவம். தனக்குப் புரியாத முறையில் தன்னைச் சுற்றியுள்ளவர்கள் நடந்துகொள்ளும்போது, அவர்கள் ஏன் அப்படி நடக்கிறார்கள் என்று தெரிய விரும்பும் குறுகுறுப்பு ஏற்படும் வயது அது. கமலுவுக்குப் பிறவியின் ரகசியம் மட்டும் விளங்காமற் போகவில்லை; அதுபோன்று எத்தனையோ புரிபடாத, அறிவுக்கு எட்டாத ரகசியங்கள்.

கமலுவின் அக்கா வயது வந்த பெண். வீட்டுக்குள் அடங்கிக் கிடப்பதனால், அந்தச் சிறைவாசத்துக்கு விடுதலை

யாக, கலியாணத்தை எதிர்நோக்கித் தவம் கிடக்கும் யுவதி.

ஒரு நாள்—

கமலா பெண்களுக்குரிய மாதாந்திர அவஸ்தைக் குள்ளாகி, வீட்டு முற்றத்தில் ஒரு உலக்கையைப் பக்கத்திலே போட்டு உட்கார்ந்திருந்தாள். அவள் அப்படி உட்கார்ந்திருப் பதைக் கமலு எத்தனையோ தடவை பார்த்திருக்கிறுள். ஆனுல் இப்போதோ எதையும் தெரிந்துகொள்ள விரும்பும் இதயத் துடிதுடிப்பு.

அக்கா ஏன் இப்படித் தனியே போய் உட்கார்ந்துவிட் டாள்? வீட்டு வேலையெல்லாம் அம்மா ஒருத்தியே ஒண்டி யாய்ப் பார்க்கிறுளே! அக்காவுக்கு என்ன? அடிக்கடி இப்படிப் போய் இருந்து விடுகிறுளே! அம்மாவும் இதைக் கண்டிக்கக் காணுேமே!...

கமலுவுக்கு ஒன்றுமே புரியவில்லே. நேரே அக்காவிடம் போனுள்.

''ஏன் அக்கா, இப்படி உக்காந்திருக்கே? உடம்புக்கு என்ன? காய்ச்சலா?''—உடம்புக்கு ஏதாவது வந்தால், அது காய்ச்சலாகத் தானிருக்கும் என்பது அவள் எண்ணம். காய்ச்சலேத் தவிர வேறு எந்த நோயையும் அவள் கண்ட தில்லே.

அக்காவுக்குப் பதில் சொல்லவே கஷ்டமாக இருந்தது.

''ஆமாம்!''

கமலு ஒரு கணம் சிந்தித்தாள்.

''இல்லே. நீ பொய் சொல்றே. 'காய்ச்சல்'னு அம்மா மருந்து குடுப்பாளே. நீ மருந்து ஒண்ணும் சாப்பிடலியே!'' என்று கேட்டாள்.

''நீ விளேயாடப் போயிருந்தப்போ சாப்பிட்டேன்!''

''இல்லையில்லே! அப்படின்னு, நீ சாதமும் சாப்பிடறியே! காய்ச்சல் வந்தா, அம்மா சாதம் குடுக்க மாட்டாளே!'' என்று மேலும் கேட்டாள் கமலு.

அக்காவுக்கு என்ன பதில் சொல்வதென்று தெரியவில்லை. திகைத்தாள்.

''இல்லே, கமலீ! எனக்கு நிசம்மாவே காய்ச்சல்தான்!'' என்று திகைத்துப்போய்ச் சொன்னாள்.

''பொய்! எங்கே, உன் நெத்தி சுடுதான்னு பார்க்கிறேன்!'' என்று உலக்கையின் எல்லையைத் தாண்டி உள்ளே நுழைந்தாள் கமலு!

''கமலீ! இதோ பாரு. இங்கே வரப்பிடாது.''

''ஏன்? நெத்தியைப் பார்க்கப்பிடாதா?''

''இல்லெ. நீ என்னைத் தொடக் கூடாது!''

கமலாவுக்குப் புதிர் மேலும் அதிகமாயிற்று. அக்காவுக்குக் காய்ச்சல் இருப்பதாகத் தெரியவில்லை. மருந்தும் சாப்பிடவில்லை; சாப்பாடும் சாப்பிடுகிறாள்; சிரித்துப் பேசுகிறாள்... ஆனால், தொடக்கூடாது என்கிறாளே! ஏன்?...

கமலு கொஞ்ச நேரம் உதட்டைப் பிதுக்கிக்கொண்டு யோசித்தாள். அவளுக்கு எதுவும் புரியவில்லை.

''நான் தொடத்தான் செய்வேன்!'' என்று முன்னேறினாள். அவளுக்கு அந்தப் புதிரை விடுவிக்க வேறு மார்க்கம் தோன்றவில்லை.

''கமலீ! சொன்னாத் தெரியாது. தொடக்கூடாதுன்னா—''

''அப்படீன்னா, நீ என்ன பறைச்சியா?'' அவர்கள் வீட்டு வயலில் வேலை பார்க்கும் குடியானவப் பெண் வந்தால், கமலு அவளைத் தொடக்கூடாது என்று அவள் அம்மா சொல்லியிருந்தாள். அக்காவையும் தொடக் கூடாதென்றால்—

''ஆமாம், நான் பறைச்சிதான்!'' என்றாள் அக்கா.

தான் சொன்ன உண்மையை ஒப்புக் கொண்டுவிட்டாள் என்று அறிந்ததும், கமலுவுக்கு ஒரே உற்சாகம். உடனே அக்காவைப் பார்த்துச் சிரித்தாள்.

''ஐயையோ! அக்கா பறைச்சியாமே!'' என்று கை கொட்டிச் சிரித்தாள்.

அவள் அக்காவுக்கு மனசில் ஏதோ உறுத்தியது. தங்கை தன் முன்னால் வந்து வேண்டாத முறையில் அட்டகாசம் பண்ணுவதைக் கண்டாள். மேலும், அவளுக்கு உண்மையை மறைக்கத் தெரியாமல் திக்குமுக்காடும் நிலைமை ஏற்பட்டது எரிச்சலைத்தான் தந்தது. இருந்தாலும் அவள் தன் தோல்வியை ஒப்புக்கொள்ளவில்லை.

''நீயும் ஒரு நாள் இப்படி பறைச்சி ஆகத்தானே போறே!'' என்றாள் அக்கா.

இதைக் கேட்டதும், கமலுவுக்குப் புதிர் விடுபெற்ற மாதிரித் தெரிந்த பொய்த் தெளிவு மறைந்து, மீண்டும் மனசில் புகை மண்டியது.

'என்ன! நானும் ஒருநாள் இப்படியாகி விடுவேனா? ஏன்? எதற்காக?'— இதெல்லாம் அவளுக்குப் புரியவில்லை. எக்காரணம் கொண்டும் அவளுக்கு 'பறைச்சி'யாவதற்கு இஷ்டமே இல்லை. இருந்தாலும், அவள் அக்கா ஏன் இப்படிச் சொல்கிறாள்? அவளுக்குப் புரியாத விஷயத்தைச் சொல்கிறாளே!

இதையெல்லாம் புரிந்துகொள்ள அல்லது அந்தப் புதிரிலிருந்து தப்பிக்க ஒரே ஒரு வழிதான் தென்பட்டது. ஓவென்று அழுது கொண்டு அம்மாவிடம் ஓடினாள்.

''ஏண்டி அழறே!''

''இதோ பாரம்மா. அக்கா என்னை பறைச்சி ஆயிடு வேன்னு சொல்ரு'' என்று விக்கி விக்கிச் சொல்லிக் கொண்டே அழுதாள். தாய்க்கு ஒன்றும் புரியவில்லை.

''நீ ஒண்ணும் ஆகமாட்டேடி, கண்ணு!'' என்று கூறி, அவளுக்கு ஒரு முறுக்கு கொடுத்தாள், அவள் தாய்.

கமலுவுக்கு முறுக்கு கையில் வந்ததுமே அழுகையெல்லாம் பறந்தோடிவிட்டது. உடனே முறுக்கைக் கடித்துக் கொண்டு முற்றத்துக்கு ஓடிவந்தாள். அக்காவைப் பார்த்து கை விரலால் வக்கணை காட்டிக் காட்டி முறுக்கைத் தின்ருள்.

அக்கா தனக்குப் புரியாத விஷயத்தைச் சொல்லி விட்டதை நினைத்து, தன் பழியை அப்படித் தீர்த்துக் கொண்டாள் கமலு. என்ருலும், அந்த சம்பவத்தின் எண்ணம் அவள் மனசில் மூலையில் பேதைமையை இடித்துத் தள்ளிக் கொண்டு போய் அமர்ந்து கொண்டது.

## 8

பின்னுல் ஒரு நாள் கமலுவின் அம்மா அவளை ஒரு கல்யாண வீட்டுக்குக் கூட்டிக் கொண்டு போனுள். அக்காவும் கூட வந்திருந்தாள். கல்யாண வீட்டுக் கோலாகலம் எல்லாம் கமலுவுக்கு ஒரே வேடிக்கையாயிருந்தது. அழகாக ஜோடிக்கப் பெற்ற பந்தல், ஒளி வீசும் காந்த விளக்குகள், தோரணங்கள் எல்லாம் கண்ணைக் கவர்ந்தன. மேலும் வந்திருந்தவர்கள் பட்டும் பட்டாடையும் உடுத்தி, நிறைய நகைகள் அணிந்து திரிவதைக் கண்டு அதிசயப்பட்டாள் கமலு. அத்துடன் பாயாசத்தோடு சாப்பாடு . . . . .

கமலுவுக்கு இதெல்லாம் பிடித்துப் போயிருந்தன; ஆனுல், இதையெல்லாம்விட அவளை மிகவும் கவர்ந்தது அந்தத் திருமண வைபவம்தான்.

மணப்பெண் குனிந்த தலை நிமிராமல், மண மேடையை வலம் வந்து உட்கார்ந்தாள். பக்கத்திலே மாப்பிள்ளை உட்கார்ந்திருந்தார். இருவரையும் பொம்மை மாதிரி அலங்கரித்து, பூமாலை எல்லாம் சூட்டியிருந்தார்கள். புரோகிதர் ஏதேதோ சொன்னார். மேளமும், பாண்டு வாத்தியமும் குலவையிட்டன. மண மேடையைச் சுற்றி நின்ற அனைவரும் மணமக்களை ஏதேதோ சொல்லிச் சிரிக்க வைத்தார்கள். அப்புறம் தாலி கட்டினார்கள். ஒரே குதூகலம்!

பிறகு மணமகளும், மணமகனும் பூம்பந்து எறிந்தார்கள்; பல்லாங்குழி விளையாடினார்கள்; நலங்கு ஆடினார்கள். யாரோ ஒரு பெண் பாட்டுப் பாடினாள். மாப்பிள்ளையும் பெண்ணும் ஊஞ்சலிலிருந்து ஆடினார்கள். அந்தச் சமயம் ஒரு குறும்புக்காரப் பெண் மாப்பிள்ளை வேட்டியையும், பெண்ணின் சேலையையும் முடிபோட்டு விட்டாள்! இருவரும் எழுந்திருக்கும் போது—

எல்லோரும் சிரித்தார்கள். கமலுவும் சிரித்தாள். அவளுக்குப் பள்ளிக்கூடத்தில் படித்த எலியும் தவளையும் சிநேகமான கதை ஞாபகத்துக்கு வந்தது. தானும் ஏதோ புரிந்து கொண்டவள் மாதிரி விழுந்து விழுந்து சிரித்தாள்.

அவளுக்கு எல்லாம் ஒரே வேடிக்கையாயிருந்தது; ஆனந்த மயமாயிருந்தது.

இந்தப் பெரியவர்கள்தான் எப்படியெல்லாம் விளையாடுகிறார்கள்? அம்மாவும் அப்பாவும் சோறு பொங்கி விளையாடுகிறார்கள்! இருந்தாலும், இந்த விளையாட்டுக்கு வருமா? இது பார்க்கப் பார்க்க எவ்வளவு நன்றாயிருக்கிறது! எல்லோரும் அல்லவா விளையாடுகிறார்கள்! அந்தப் பெண்ணுக்கு நிமிர்ந்து பார்க்கத் தெரியாதா என்ன? இருந்தாலும் அவள் ஏன் தலையைக் கவிழ்ந்து கொண்டிருக்க வேண்டும்? மாப்பிள்ளையாக இருந்தாரே, அந்த மாமா—அவர் அன்னிய மனிதர் என்று முகத்தைக் காட்டக் கூடாது என்றிருந்தாளா? அப்படி

யானால், அவள் ஏன் முகத்தை மறைக்கவில்லை? அம்மா! அந்த மாமி தலையிலே எத்தனை பூ! கழுத்திலே தான் எத்தனை நகை!.. ......

கமலுவின் இளம் மனத்தில் இந்த மாதிரியான நினைவோட்டங்கள் கொப்புளித்துப் பெருகின. அவளுக்கு அந்தக் கல்யாண விளையாட்டு ரொம்பவும் பிடித்துப் போயிற்று.

'நாமும் அப்படி விளையாடினால் என்ன?' என்று யோசித்தாள் கமலு.

மறுநாள், அவள் லல்லுவைக் கண்டதும், ''என்ன லல்லு! நீ கல்யாணம் பாத்திருக்கையா?'' என்று கேட்டாள்.

''ஓ, பார்த்திருக்கேனே. எங்க மாமாவுக்குப் போன வருஷம் கல்யாணம் நடந்தப்போ, நானும் போயிருந்தேனே!'' என்றாள் லல்லு.

''சரி, எதுக்கடி இந்தக் கல்யாண விளையாட்டு விளையாடுகிறார்கள்?''

''எதுக்கா? கல்யாணம் பண்ணின பொண்ணு மாப்பிள்ளைதான் அப்புறம் அப்பா அம்மா ஆவாங்கடி, கமலீ!''

''அப்படீன்னா, நம்ம அப்பா அம்மா கூட, இந்த விளையாட்டு விளையாடி இருப்பாங்க. அப்படித்தானே?''

''ஆமா ஆமா.''

''சரி, நீ உங்க அப்பா அம்மா பொண்ணு மாப்பிள்ளையா இருந்ததைப் பார்த்திருக்கியோ?''

லல்லு சிரித்தாள். ''நான் பார்க்கலே. நீ மட்டும் பார்த்தியோ?''

கமலு யோசித்தாள்; யோசித்துப் பார்த்தாள். ஞாபகத்துக்கே வரவில்லை. பிறகு, ''எங்க தம்பி வந்ததையே நான் பாக்கலியே. அப்பா அம்மா கல்யாணம் பண்ணிக்கிறதை

எப்படிடீ பார்க்க முடியும்?'' என்றாள். 'ஒரு வேளை அப்பா அம்மா கல்யாணத்தில் நான் ரொம்பச் சின்னப் பிள்ளையாக, அப்பா என்னைப் படம் எடுத்திருக்கிறாரே—ஊர்ந்து விளையாடுகிற மாதிரி, அவ்வளவு சின்னப் பிள்ளையாய் இருந்திருப்பேன்' என்று நினைத்துக் கொண்டாள் கமலு.

''சரி, லல்லு! பாத்தியா. அப்படீன்னா, நீ எனக்குப் பொண்ணு மாப்பிள்ளை விளையாட்டு சொல்லித் தரத்துக்குள்ளேயே, அப்பா அம்மா விளையாட்டு கத்துக் குடுத்திட்டியே!'' என்று புகார் கூறினாள், கமலு.

''அதற்கென்னடி, விளையாடினால் போறது. சரி, உன் மரப்பாச்சியை எடுத்துக்கிட்டு வா'' என்றாள், லல்லு.

கமலு ஓடிப்போய் தன் மரப்பாச்சிகளை எடுத்து வந்தாள். அன்று முதல், அப்பா அம்மா மரப்பாச்சிகள் இரண்டும் 'பொண்ணு—மாப்பிள்ளை'களாக மாறிவிட்டனர். லல்லுவும், கமலுவும் அந்த மரப்பாச்சிகளைச் சிங்காரித்து விளையாடுவார்கள். இருந்தாலும் மரப்பாச்சிகள் விளையாடுமா? எனவே பெண்ணின் சார்பாக, கமலுவும், மாப்பிள்ளையின் சார்பாக லல்லுவும் நடிப்பார்கள். பிறகு கல்யாண வீட்டு விருந்து. விருந்துக்குரிய சரக்கு பொரிகடலையாகவாவது, சர்க்கரைத் துண்டாகவாவது இருக்கும். அதை இருவரும் வீட்டிலுள்ள அனைவருக்கும் கிள்ளிக் கிள்ளிப் பங்கிட்டுக் கொடுப்பார்கள்.

வீட்டிலுள்ளவர்கள் 'என்னடி இது' என்று விசாரித்தால், 'இன்னைக்கி என் மரப்பாச்சி ரெண்டுக்கும் கலியாணம்' என்று பெருமையோடு சொல்லிக் கொள்வாள் கமலு.

## 9

ஆனால், காலம் வளர வளர அறிவின் கறை அவள் மனசில் மெது மெதுவாகப் படர்ந்து வந்தது. இப்போதெல்லாம் கமலுவுக்கு மரப்பாச்சிகளை வைத்து விளையாடு

வதில் இஷ்டமில்லை. உயிரில்லாத மரக்கட்டைப் பொம்மைகளுக்கு உயிரூட்டி, அதற்கு மண்ணைக் குழைத்து தோசையாகச் சுட்டு விளையாடும் அந்தப் பேதைமை, எல்லாப் பொருள்களையும் தன் இஷ்டத்துக்குத் தக்கவாறு உயிர் மாற்றி, உருமாற்றி விளையாடும் அந்தத் தெய்வீகப் பேதைமை, கறை படிந்துவிட்டது. எனவே அந்த விளையாட்டு அவளுக்குச் சுவாரசியப்பட்டு வரவில்லை; அவளுக்கு மட்டும் அல்ல; லல்லுவுக்கும் அதில் பிடிப்பற்றுப் போயிற்று.

இந்தச் சமயத்தில்தான் லல்லுவுக்கு ஒரு யோசனை உதித்தது. ''இனி நாமே 'பொண்ணு மாப்பிள்ளை'யாக இருந்து விளையாடினால் என்ன?'' என்பதுதான். அப்படியும் விளையாடிப் பார்த்தார்கள். ஆனால், அறிவின் கறை அவர்களுக்கு அந்த விளையாட்டிலும் ருசி கொடுக்கவில்லை. மாப்பிள்ளை—அதாவது ஆண் என்றால் ஆணாகத்தான், வேட்டி கட்டிய ஆணாகத்தான் இருக்கவேண்டும், பெண் என்றால் அம்மாவைப்போல் சேலை கட்டிய பெண்ணாகத்தான் இருக்கவேண்டும் என்று அவர்களது அறிவு கூறியது. பேதைமை மங்கிப் போய்விட்டது.

இந்தச் சமயத்தில்தான் ராமு அவர்களது விளையாட்டில் கலந்து கொள்ள வந்தான்; அவர்களும் சேர்த்துக் கொண்டார்கள். சேர்த்துக்கொள்ளும்படி அறிவு தூண்டியது.

அன்று முதல் லல்லு, கமலு, ராமு மூவருமாகச் சேர்ந்து விளையாட ஆரம்பித்தார்கள்.

கமலு தலையிலே அரளிப் பூவைச் சூடி, புதுமணப் பெண்ணைப்போல், ஒரு காலை முழங்காலிட்டு, தலை கவிழ்ந்து அடக்க ஒடுக்கமாய் உட்கார்ந்திருப்பாள்; பக்கத்திலே ராமு புது மாப்பிள்ளையைப் போல் நிமிர்ந்து கம்பீரமாக உட்காருவான். லல்லு கல்யாணத்தை நடத்தி வைப்பாள். பூவரசு இலையில் பீப்பி செய்து வாசிப்பாள். பிறகு நலங்கு விளையாடுவார்கள்; பூம்பந்து எறிவார்கள்; பல்லாங்குழி விளையாடுவார்கள்.

எல்லாம் விளையாட்டுத்தான். பெரியவர்கள் செய்வதெல்லாம் விளையாட்டுத்தான் என்ற நினைப்பில் அவர்களைப்போல் தாங்களும் நடந்துகொள்ள வேண்டும் என்ற இளம்பிள்ளைக் குறுகுறுப்பில் விளைந்த விளையாட்டுத்தான். அந்த விளையாட்டுக்கு வேறு விகற்பமான அர்த்தமே கற்பிக்க முடியாது. விளையாட்டு உணர்ச்சியின் குதூகலத்தைத் தவிர வேறு விதமான உணர்ச்சிப் பரவசங்களுக்கு அதில் இடம் கிடையாது.

இப்படித்தான் அன்றும் கமலுவும் ராமுவும் அப்பா அம்மா விளையாட்டு விளையாடிக் கொண்டிருந்தார்கள். அந்தச் சமயத்திலேதான் கமலுவின் அம்மா கூப்பிட்டு விட்டாள்.

மாலை வந்தது.

கமலு ராமுவைத் தேடி ஓடினாள். 'அவன் இன்றைக்கு புதுப்புது விளையாட்டெல்லாம் சொல்லித் தருகிறேன் என்றானே!' புதிது புதிதான விஷயங்களைத் தெரிந்துகொள்ளத் துடிக்கும் அந்த இளம் மனம் அவளை இழுத்துக்கொண்டு போயிற்று

''ராமு! டே, ராமு!''

ராமு வந்தான்.

''என்ன விளையாடுவமா?''

''என்ன விளையாட?''

''வா, சிறு வீட்டிலே போய் விளையாடலாம்.''

''இந்தா பாரு, கமலி! அது வேண்டாம். இங்கே வா, உனக்குப் புது விளையாட்டு சொல்லித் தாரேன்.''

ராமு அவளைக் கூட்டிக் கொண்டு போய்க் கட்டிலில் உட்கார வைத்தான்; பிறகு தானும் அவள் பக்கத்தில் உட்கார்ந்து கொண்டான்.

''கமலி! இப்படித் திரும்பு. உனக்கு ஒரு முத்தம் தரட்டுமா?'' என்று மெதுவாகக் கேட்டான்.

''முத்தமா? இதென்ன விளையாட்டு. நான் வரலை'' என்றாள் கமலு.

''பின்னே! அம்மா அப்பா விளையாட்டுன்னு...''

"இதுவா விளையாட்டு?"

கமலுவுக்கு ஒன்றும் புரியவில்லை. திகைத்தாள்.

ராமுதான் பேசினன்: "கமலீ! அன்னைக்கி எங்க அப்பா, அம்மாவை முத்தம் கொடுத்தார். நான் பார்த்தேன்."

கமலுவுக்கு நம்பவே முடியவில்லை. அவள் அப்படிப் பார்த்ததில்லை. அப்பா தம்பியை முத்தமிடுவார்; அம்மா தன்னை முத்தமிடுவாள்; ஆனல் அம்மாவும், அப்பாவும்—

"சே! நீ பொய் சொல்றே!" என்றாள் கமலு. பிறகு ஒரு கணம் யோசித்துவிட்டு, "பெரியவங்க முத்தமிட்டு நான் பார்த்ததே இல்லை" என்றாள்.

"பார்த்ததில்லையா? வா, காட்றேன்" என்று மாடிக்குக் கூட்டிக்கொண்டு போனன் ராமு.

மாடியில் அவன் அப்பா வாங்கிப் போட்டிருந்த வெளி நாட்டுச் சினிமாப் பத்திரிகைகளைப் புரட்டிக் காட்டினன். அதில் பெரியவர்களே ஒருவருக்கொருவர் அணைத்து முத்த மிட்டுக் கொண்டிருந்தார்கள்.

கமலுவுக்கு எல்லாம் ஒரே அதிசயமாக இருந்தது.

"சரி, இப்ப தரட்டுமா?" என்றான் ராமு.

"ம்" என்றாள் கமலு.

## 10

கமலு வீட்டுக்கு வந்தாள்.

அவள் மனசில் ராமு சொன்ன விஷயமும், அந்தப் படமுமே நின்றன. இதென்ன இது? பெரியவர்களுமா முத்த மிடுவார்கள்! ஆச்சரியமாய்த்தானிருக்கிறது. முத்தமிடுவதால் என்ன பயன்? அம்மா என்னை முத்தமிடும்போது சந்தோஷமா யிருக்கிறது! முத்தம் கொடுப்பதில் சந்தோஷம் ஏற்படுமா? எனக்கு ஒன்றும் ஏற்படவில்லையே!...

முத்தமிடுவதில் இன்பம் இருக்கிறதா, இல்லையா என்று அவளுக்குத் தெரியாது. அவள் தானே தன் கையில் முத்த மிட்டுப் பார்த்தாள்; கடித்தும் பார்த்தாள். ஒன்றும் இல்லை!

அவளுக்கு மனசு குறுகுறுத்தது.

ராமுவும் கமலுவும் அந்தக் குறுகுறுப்பில்தான் விளையாடி னார்கள். அது காம உணர்ச்சியல்ல; அதை உணர்ந்து கொள்ளும் பருவமும் இருவருக்கும் கிடையாது. இருந் தாலும், தாங்கள் கண்டவற்றை, பெரியவர்கள் விளை யாட்டைத் தாங்களும் விளையாட வேண்டும், அதில் என்ன இருக்கிறது என்று தெரிந்துகொள்ள வேண்டும் என்ற பிள்ளை மனப் பித்தலாட்டம்தான்.

கமலு அன்று விளையாடிய புது விளையாட்டைப் பற்றியே சிந்தித்துக் கொண்டிருந்தாள். அந்தப் புதுமையில் ஒரு இனிமை இருப்பதாகத் தோன்றிற்று; அந்த வயதே அப்படித் தான். நாளுக்கு ஒரு புதுமை, நாழிகைக்கு ஒரு புதுமை இருக்க வேண்டும்—அதாவது வளரத் துடிக்கும் அறிவுக்கு உணவு வேண்டும்...

அந்தச் சமயம் அவள் அம்மா வந்தாள்.

''என்னடீ கமலீ, இத்தனை நாழி எங்கேடி போயிருந் தாய்?''

''ராமுவோடெ விளையாடப் போயிருந்தேன்.''

''அவனோடெ என்னடீ விளையாட்டு?''

''அப்பா அம்மா விளையாட்டு.''

அவள் தாய் திகைத்துப் போனாள்.

''இனிமே அவனோடு விளையாடப் போகக் கூடாது. தெரியுமா? சமையப் போகிற வயதாச்சு! ஆண்பிள்ளையோட என்னடீ விளையாட்டு?'' என்று கூறிவிட்டுப் போனாள் அம்மா.

அம்மா சொன்ன புது விஷயம் அவளுக்குப் புரியவில்லை; என்றாலும் மனசில் பதிந்துவிட்டது.

# பெதும்பை

பேதை குணம்பாதி, மங்கைப் பெண்குணத்தில் பாதிகலந்
தோது பருவம் உறு பெதும்பை—காதல் எனும்
வித்து அங்குரித்து, வளர்மென்பூஞ் சிறு கொடிக்கு,
சித்தம் கொழு கொம்பாம் செய்கையினுள்;—
மெய்த்தவங்கள்
ஈட்டினும், ஈசன் அருள் எய்தி முடிப்பது போல்
கூட்டி முடிக்கும் குழலினுள்;—நாட்ட நுதல்
ஏற்கும் எம்மான் கைம்மான் இனமோ என மருண்டு
பார்க்கும் புதிய மருள் பார்வையாள்;—சீர்க் கமலன்
'இவ்வளவு செய்தோம். இனி நிகர் இலாத எழில்
அவ்வளவு பூரித்து அமைப்பதனுக்கு—இவ்வாறே' என்று
ஏல, தன் சிந்தையுள்ளே எண்ணி முடிக்கு, நிகழ்
காலத்தமைந்த முலைக் கன்னிகையாள்!

—கடம்பர் கோயில் உலா

# 10 - 15

'கமலீயா இது! எவ்வளவு உயரம் வளர்ந்துவிட்டாள்!''

ஊரிலிருந்து வந்த அத்தை கமலுவைப் பார்த்தவுடன் பிரமித்துப் போய் மூக்கில் விரலை வைத்தாள்.

''அப்படியா?'' என்று அதிசயித்தாள் கமலுவின் தாய். ''நீங்கள் இத்தனை நாள் கழிச்சுப் பார்ப்பதனால், வளர்த்தி தெரிகிறது. நான் இங்கேயே இருப்பதனால், தெரியாமலே போச்சு'' என்றாள்.

''இது வளரும் வயசுதானே!''

''வயசுதான் வளருது. ஹூம். எப்போ பார்த்தாலும் சிடு சிடுன்னு எரிஞ்சுதான் விழுதா.''

''எல்லாம் அப்படித்தான் இருக்கும். அந்தக் காலத்திலே நீ விழுந்தது எனக்குத் தெரியாதா என்ன? கமலீ உன் மகள் தானே!'' என்றாள் அத்தை.

இருவரும் வாய்விட்டுச் சிரித்துக் கொண்டார்கள். இருவர் மனமும் தங்கள் இளமைக் கால நினைவுகளில் ஒரு கணம் தேங்கித் திரும்பியது.

''எங்கே இந்த வருஷமே அவள் அக்காவுக்குத் துணையா, ஆகிவிடுவாளோ என்றிருக்கிறது'' என்றாள் தாய்.

''ஆகவேண்டியதுதானே!'' என்று வக்கணை குறையாமல் பதில் சொன்னாள் அத்தை. பிறகு, ''ஆண் வளர்த்தி அவரைக் காய்; பெண் வளர்த்தி பீர்க்கங்காய்! எங்க பாலு அன்னைக்கி இருந்த மேனி அழியாமல் இருக்கான். கமலீ அவனுக்கு இளையவள்தான். இருந்தாலும், அவனை மிஞ்சி வளர்ந்து விட்டாள்'' என்று சொல்லிவிட்டு, பக்கத்திலிருந்த தன் மகனைப் பார்த்தாள்.

பாலு அத்தையின் மகன்; வயது பதினைந்து இருக்கும்; கமலுவுக்கு அவன்தான் முறை மாப்பிள்ளை. அவனும் தன் தாயோடு வந்திருந்தான்.

''சரி, கமலீயை எங்கே? அதுக்குள்ளே ஓடிவிட்டாளா?''

கமலு இவர்கள் பேச்சையெல்லாம் பக்கத்து அறையிலிருந்து கேட்டுக்கொண்டிருந்தாள். அம்மாவும், அத்தையும் தன்னைப்பற்றி என்ன பேசுகிறார்கள் என்ற குறுகுறுப்பு. அத்தை வந்தவுடன் கமலு உடனே அங்கு நிற்காமல் ஓடி வந்துவிட்டாள். அவள் ஓடிவந்தது அத்தைக்காகவா? பின்னே?—பாலுவுக்காகவா?

பாலு அவள் அத்தான். முன்பெல்லாம் அத்தை ஊருக்கு கமலு போயிருந்தபோது, பாலுவும் அவளும் எவ்வளவு விளையாட்டு விளையாடி இருக்கிறார்கள்! பாலுவைக் குனிய வைத்து, கமலு ஆனைச் சவாரிகூடப் பண்ணியிருக்கிறாள். இப்போது அவனைக் கண்டவுடன் ஏன் ஓடிப்போகவேண்டும்?

வெட்கமா?

அது அவளுக்கே புரியவில்லை. இருந்தாலும் பாலுவை வாவென்றுகூடக் கேட்காமல், இப்படி வந்து ஒளிந்துகொள்ளலாமா? அவன்தான் என்ன நினைத்துக்கொள்வான்? ஒருவேளை நான் அவனோடு டூ விட்டுவிட்டேன் என்று நினைப்பானோ? நான் ஏன் டூ விடவேண்டும்?

சே! பாலுவை வாவென்று கேட்கவேண்டும்! ஏன் கேட்க வேண்டும்? எப்படிக் கேட்கவேண்டும்?...

பேதைமை நழுவியோடிய அந்த வாலை மனத்தில், அறிவு சரக்கூடம் வகுத்து வேலியிட்டது. சம்பிரதாய வரன் முறையெல்லாம் அவளுக்குப் பெரிதாய்த் தோன்றின. எல்லாவற்றிற்கும் மேலாக, அவன் இருக்கும் இடத்துக்கு மனம் தாவித் தாவி ஓடினாலும், கால்கள் ஒரு அடிகூட முன்னேறாத விபரீதத்தையும் அவள் உணர்ந்தாள். 'நான்

போனுல் என்ன? போவதற்கு என்ன வெட்கம்?... ஆம். வெட்கம்தான். அப்படியானுல், அம்மாவும் அக்காவும் அன்னியர் யாராவது வந்தால், முகம் கொடுத்துப் பேசாதது வெட்கத்தின் காரணமாகவா? பாலு எனக்கு அப்படி அன்னியனுகவா போய்விட்டான்?'

கமலுவுக்கு அங்கு வெகு நேரம் இருக்க முடியவில்லை. அதிலும், அத்தை 'கமலீயை எங்கே?' என்று தேடிய பிறகும், அவளால் அங்கு இருக்க முடியவில்லை. உடனே துணிந்து எழுந்து சென்ருள். கூடத்து வாசலில் போய் நின்று கொண்டாள்.

''டே, பாலு! கூடத்திலே இருந்துட்டியே! உள்ளே வாயேண்டா!'' என்று ரொம்பவும் உரிமையோடு கூப்பிட்டாள். அப்படிக் கூப்பிடுவதன் மூலம் தன் அன்பை அழுத்திச் சொன்னுள்.

அதற்குள் அவள் அம்மா குறுக்கிட்டுப் பேசிவிட்டாள்: ''என்னடீ கமலீ! அவனை என்ன 'அடாபுடா' என்கிருய்? நாளைக்கு உனக்கு வரப்போகிற புருஷனுக்கும். மரியாதையாக் கூப்பிடு!''

கமலுவுக்கு உடனே தைரியமெல்லாம் பறந்தோடிவிட்டது. மனத்தில் வெட்கமும் அறிவும் குழம்பிக் குழம்பி உருண்டன. அப்படியானுல், பாலுவை மரியாதையாகக் கூப்பிட வேண்டுமா? 'மரியாதையாய்' என்ருல், அவன் எனக்கு அன்னியமாய்ப் போய்விட்டானு? அன்னியர்களைத்தானே மரியாதையாய்க் கூப்பிடுகிறேன்! ஆனுல், அம்மா சொன்ன அந்த விஷயம்? அவன் எனக்கு......

கமலுவுக்கு வெட்கம் பிடுங்கித் தின்றது. உடனே உள்ளே ஓடிவிட்டாள்.

''வயசு வந்தா, வெட்கமும் தானு வந்துடறது'' என்ருள் அத்தை.

கமலு வீட்டு மூலையிருந்த ஒரு அறைக்குள் போய் அமர்ந்து கொண்டாள்: 'நான் ஏன் ஓடிவந்தேன்? வளர்ந்து விட்டதாலா?'

அத்தையும் அம்மாவும் கமலுவின் 'வளர்த்தி'யை உணர்ந்திருந்ததைவிட, அந்த உண்மையைக் கமலுதான் மிகவும் துல்லியமாக அணுவுக்கணு உணர்ந்திருந்தாள். ஆம். அந்தப் பருவமே தன்னை உணரும்—உணரத் துடிக்கும் பருவம்.

காலத்தைப்போல் சிறந்த சிற்பியை எங்குமே காண முடியாது. வளர்ந்து வரும் பொருள்களுக்கு மெருகு தீட்டி, பட்டை பிடித்து அழகு ஊட்டுவதும், தேய்ந்து சாகும் பொருள்களை அதன் உருமாற்றி, அழகுத் தத்துவத்தை அழிவு குலைத்து விடாதபடி பார்த்துக் கொள்வதுமான சிற்பத் திறன் காலத்துக்குத்தான் உண்டு. குருத்து விரித்து மடலாகும் பருவத்திலுள்ள அந்தக் குமரியிடம் காலம் இயற்றிய மாறுதல்கள்—

கமலு இப்போது எவ்வளவோ மாறிவிட்டாள்.

அவள் இப்போது சிறு வீடு கட்டி, அப்பா—அம்மா விளையாட்டு விளையாடும் சிறுமியல்ல; அன்னியர்கள் வந்தால் கவுனை எடுத்து முகத்தை மூடும் பேதையல்ல. அவள் இப்போது ஒரு வாலைக் குமரி.

அவள் அங்கங்களிலே பளபளப்பும், மினுமினுப்பும் மெருகேறியிருந்தன. ராக ஆலாபனத்தின் சஞ்சார கதியைப் போல், அங்கங்களின் வளர்ச்சி மெழுகைத் தடவி, மெது லூட்டியதுபோல மினுங்கியது. கை விரல்கள் வெள்ளரிப் பிஞ்சைப்போல் நீண்டு வளர்ந்திருந்தன. பூநிறச் செம்மை மறைந்து புருவக் கீற்றுக்கள் கருமை எய்திருந்தன. தலைமயிர் கருமையும் மினுமினுப்பும் பெற்று, வாலடித்துத் திரும்பும் விலாங்கு மீனைப்போல் துவண்டது. சரியாக வார்க்கப் படாததுபோல் தோன்றிய இளம் குழந்தை உதடுகளின் மந்தாரத் தன்மை மறைந்து, ஒளியும் நிழலும் துண்டாகத் தெரியும்படி, சிவப்பும் துடிப்பும் ஏறி, எல்லைக் கோடு வகுத்

திருந்தது. கால்கள் பழைய துள்ளு நடையை மறந்து, தரையில் பதிந்து பதிந்து நடந்தன. காலைக் கவ்விக் கிடக்கும் பாதசரம் பாதங்களின் நீளத்தை அளவிட்டுக் காட்டியது. பாவாடை பாதம் வரையிலும் படர்ந்து அலை வீசிற்று. தலையணைக்கு உறையிட்டது போலிருந்த மேல் சட்டை இப்போது அங்கங்களின் வளர்ச்சியைப் பிடித்தெடுத்துக் காட்டியது.

இந்த வளர்ச்சியை நாளுக்கு நாள் கமலு உணர்ந்து வந்தாள். ஆனால் அவளது மனத்தின் வளர்ச்சிதான் அவளுக்கும் புரிபடாத ரகசியமாயிருந்தது.

—நான் ஏன் இப்படி வளர்கிறேன்? அதிகமாய்ச் சாப்பிடுகிறேனா? இல்லையே! இப்போது எனக்குச் சாப்பாடே அவ்வளவாகப் பிடிக்கவில்லையே! அம்மா என்னை எத்தனை தடவை சத்தம் போட்டிருக்கிறாள்? தினம் தினம் நான் ஏன் முரண்டுத்தனம் பண்ணியே சாப்பிடப் போகிறேன்? இந்த முரண்டுத்தனம் எங்கிருந்து வந்தது?— இதெல்லாம் அவளுக்கும் புரியவில்லை.

அவள் வளர்ச்சியை அவளே கவனிக்கும்போதுதான் இந்த மன மாறுதல்களும் ஏற்பட்டு வந்தன. போன வருஷம் அவளுக்குத் தைத்த சட்டையெல்லாம் இப்போது போடவே முடியவில்லை. அக்காவும், அம்மாவும் போன தீபாவளிக்குத் தைத்த ரவிக்கையையே போட்டுக் கொண்டிருக்கும்போது, கமலுவுக்குப் பொங்கலுக்குத் தைத்த சட்டைகூட, சிறிதாய்ப் போய்விட்டது. 'அப்படியா நான் வளர்ந்துவிட்டேன்?...'

அதை அவளே உணர்ந்தாள். தன் உடம்பில் மட்டு மட்டுமல்லாமல் மார்பில் ஏற்பட்டு வரும் வளர்ச்சியையும் அவள் உணர்ந்தாள். அதைக் கண்டு ஊமை கண்ட கனவைப் போல், தன் மனசுக்குள்ளாகவே மறுகினாள். இந்த வளர்ச்சியை எண்ணி, தனிமையில் காரண காரியமில்லாமல் கண்ணீர் வடித்தாள். யார் என்ன பேசினாலும் சிடுசிடு என்று எரிந்து விழுந்தாள். தன்னுடம்பில் வெளியில் சொல்ல முடியாத மாற்றங்கள் ஏற்பட்டு வருவதைக் காணக் காண

அவளுக்கு சங்கோஜம் தன்னையறியாமலே குடி புகுந்தது. குளிக்கப் போனால், பாவாடையை மார்புவரை உயர்த்திக் கட்டிக்கொண்டாள்; பாத்ரூம் கதவைச் சாத்திக்கொண் டாள்.

'ஏன் இதெல்லாம்? என் வளர்ச்சி பிறருக்குத் தெரியக் கூடாதா?' அவள் சிந்தித்தாள். தன்னைப் போலவே தன்னோ டொத்த பெண்களுக்கும் இந்த வளர்ச்சி இருக்கிறதா என்று கவனித்தாள். அதன் மூலம் அவளுக்குச் சாதகமான விடை கிடைத்தாலும், மனச் சமாதானம் இல்லை. தன் மார்பில், தனக்குப் புதுப்பல் முளைக்கும்போது ஏற்பட்ட தினவைப்போல் ஒரு புது உணர்ச்சி ஏற்படுவதை அவள் உணர்ந்தாள். 'ஏன் இப்படி ஏற்படுகிறது? இது ஏதாவது நோயா? அந்த மாதிரி ஒரு நோயைப் பற்றி அவள் கேள்விப்பட்டதுகூட இல்லை. இதை அம்மாவிடம் சொன்னால் என்ன? எப்படிச் சொல்லு வது?'

ஒருநாள் ராத்திரி அவள் தன் தலையணை முழுவதையும் கண்ணீரால் நனைத்தாள்.

மறுநாள் அம்மாவிடம் துணிந்து சொல்லிவிட்டாள்: ''அம்மா, எனக்கு நெஞ்செல்லாம் வலிக்குதம்மா!'' இதைச் சொல்வதற்குள் அவள் திக்குமுக்காடிப் போய்விட்டாள்.

அம்மாவுக்கு ஒன்றும் புரியவில்லை.

''ஏதாவது சளி பிடிச்சிருக்கும். பச்சைத் தண்ணீரில் குளிக்காதே என்றால் கேட்டால்தானே!''

கமலுவுக்கு உடனே எரிச்சல் வந்தது. ''சளி ஒண்ணும் புடிக்கலெ. வந்து...வலிக்குதின்னு!'' என்றாள்.

அவள் அம்மாவுக்கு அதுவும் புரியவில்லை; புரிந்தாலும் அவள் அதை எப்படிச் சொல்ல முடியும்?

''சரி சரி, ஒண்ணுமில்லெ. போ'' என்றாள்.

ஆனல், பக்கத்தில் நின்ற அக்கா அதை உணர்ந்து கொண்டாள். தன் இளமைத் துன்பத்தை அவள் இன்னும் மறந்து விடவில்லே.

''கமலீ! இங்கே வாம்மா.''

கமலு அக்காவிடம் போனுள்.

''கமலீ! அம்மாவிடம்போய் இதெல்லாம் கேட்கலாமோ? எல்லாம் அப்படித்தானிருக்கும். சரி, இந்தத் தாவணியைக கட்டிக்கோ'' என்று தன் தாவணி ஒன்றை எடுத்துக் கொடுத்தாள்.

அன்று முதல் கமலு தாவணி கட்ட ஆரம்பித்தாள். தாவணி கட்டியிருப்பதில் அவளுக்கு ஏதோ ஒரு நிவர்த்தி இருப்பதைப் போல் தோன்றியது. ஏனெனில் காரண காரிய மறியாமல் பள்ளிக்கூடம் செல்லவே முரண்டு பிடித்த கமலு தாவணி கட்டியபின் பள்ளிக்கூடம் போவதைப் பற்றிக் கவலே கொள்ளவில்லே. அதன் பின்னர் அவளுக்குச் சிரிப்புக்கூட வந்தது. சின்னப் பிள்ளேயாயிருக்கும்போது, அவள் பாவாடை கட்டுவது முகத்தை மறைக்கத்தான் என்று எண்ணினுளே, அதை நினேத்துச் சிரித்தாள். இப்போது அவள் எதற்காகத் துணியணிகிருேம் என்று அறிந்துகொண்டாள். அந்தத் தாவணி அதை அவளுக்குக் கற்றுக் கொடுத்தது.

இப்போது அவள் இளஞ் செடியல்ல; பச்சை முகை கட்டி, என்ருே ஒரு நாள் திடீரென்று மலரத் தயாராயிருக்கும் பருவ காலக் கொடி.

## 2

காய் மரம் பூ மரம்
நெல்லி நெறிஞ்சி மரம்
நெல்லுச் சோறு காச்ச மரம்
காச்சிச் சொரிஞ்ச மரம்
கட்டழகி இட்ட மரம்

பத்துத்துக்குச் சித்திரை பாண்டப்பா
பதிபதியாக் கொப்பரை வேண்டப்பா
ஓயக் கழச்சிக்கு
ஒண்ணும் ரெண்டும் சில்லரை
வேணுமின்னு வாங்கிக்கோ
வேண்டாட்டா தூரப் போ.

எதிர்த்த வீட்டுத் திண்ணையில் லல்லுவும் வேறு பெண்களும் கல்லெறிந்து அம்மானை ஆடிக் கொண்டிருந்தார்கள். அவர்கள் விளையாடும்போது பாடும் பாட்டின் சப்தம் கமலுவுக்குக் கேட்டது.

கமலு எழுந்து எதிர்த்த வீட்டுக்கு ஓடினாள்.

''லல்லு, நானும் வரேண்டி!''

கமலுவும் அவர்களோடு விளையாட உட்கார்ந்தாள்.

முதலில் லல்லு கற்களை உயர எறிந்து பிடித்து விளையாட ஆரம்பித்தாள் :

ஓரி சினுக் கெடுத்தா
ஓராளுத் தண்ணியிலே
தண்ணிக் கரையிலே
தாழ்ந்த மணலிலே
நல்ல கொடியிலே
புள்ளைக்கு ரெண்டு
புலமபித் தவிக்கிரு.

ஒவ்வொரு கல்லாக எடுத்து முடித்தவுடன் லல்லு இரண்டிரண்டாக எடுக்க ஆரம்பித்தாள் !

ஈரிரண்டு எடுக்கவே
இலந்தம் பழுக்கவே
குழந்தை சமையவே
கொட்டுச் சத்தம் கேக்கவே.

இந்தப் பாடலைப் பாடி முடித்ததும், கமலு திகைத்துப் போனாள். ''லல்லு, லல்லு'' என்று ஆத்திரமாகக் கூப்பிட்டாள்.

''ஏண்டி?''

''கொஞ்சம் நில்லேன்!''

''எதுக்கு? தப்பாட்டம் ஆடிட்டேனா?''

''இல்லை. சமையறதுன்னா என்னடீ?'' அவள் மனசில் அம்மா முன்னே சொன்ன வார்த்தைகள் சாகாமல் பதுங்கிக் கிடந்தன. அதற்கு அவள் மனம் தன்னையறியாமலே இத்தனை நாள் விளக்கம் தேடிக் கொண்டிருந்தது. ஆனால், அன்று அவள் அந்தக் கேள்வியைக் கேட்டவுடன், அங்கிருந்த பெண்களெல்லாம் விழுந்து விழுந்து சிரித்தார்கள். 'இந்த விஷயம் அவளுக்குத் தெரியவில்லையே' என்ற அங்கலாய்ப்பில் பிறந்த சிரிப்பல்ல. அவர்களுக்கும் அது தெரியாது. இருந்தாலும், இந்தக் கேள்வியைக் கமலு கேட்கலாமா?

''என்ன லல்லு, சொல்லேன்'' என்றாள் கமலு.

''எனக்கென்னடி தெரியும்?''

''தெரியாமலா, பாடுவே?''

''என்னமோ விளையாட்டுக்குப் பாட்டு. இந்தப் பாட்டுக்கெல்லாம் எனக்கு அர்த்தம் தெரியாது. வேணுமின்னா, நாளை வாத்தியார்கிட்டே போய்க் கேளு.''

இதைச் சொன்னவுடன் அவர்கள் மீண்டும் சிரித்தார்கள். கமலுவுக்கு அவர்கள் சிரிப்பதைக் கண்டு, கோபங் கலந்த வெட்கம்தான் வந்தது. அந்தக் கோபத்தில் அங்கிருந்த கழற்சிக் கற்களையெல்லாம் உலைத்தெறிந்து விட்டாள்.

''அடேயப்பா! எவ்வளவு கோபமடி உனக்கு!'' என்றாள் லல்லு.

''பின்னே சொல்லுன்னா—''

லல்லு விழித்தாள். அப்போது பக்கத்திலிருந்த ஒரு பெண் ''கமலு, நான் சொல்லட்டுமாடி'' என்ருள். பிறகு, அவள் கமலுவைப் பக்கத்தில் கூப்பிட்டு, ''சமையவே'ன்னு—'' என்று ஆரம்பித்து, காதுக்குள் ஏதோ ரகசியமாய்ச் சொன்ஞள். அதைக் கேட்ட கமலு பிரமித்துப் போஞள்.

''அப்படியா? இல்லே, நீ பொய் சொல்றே.''

''இல்லேடி. அப்படித்தான்!''

''அப்படீன்ஞ, எங்க அக்கா அடிக்கடி தூரப் போய் உட்கார்ருளே, அது?''

''அதுவும் அப்படித்தான்.''

''மாசா மாசமா?''

''ஆமா ஆமா.''

அந்தப் பெண் இதைச் சொல்லி முடித்தவுடன் அவர்கள் மீண்டும் ஒரு முறை சிரித்தார்கள். பிறகு லல்லு மீண்டும் கற்களைப் பொறுக்கினுள்.

''இனிமே விளையாடலாமாடி?''

''ம்.''

லல்லு மூன்ருவது ஆட்டத்துக்குத் தயாராஞள் :

முக்கட்டு தக்கெட்டு
முருங்கை பதினெட்டு
எண்ணிப் பார்த்தா
இருபத்தி எட்டு!

ஆஞல், கமலுவுக்கு இப்போது விளையாட்டிலேயே கவனமில்லை. அந்தப் பெண் சொன்ன ரகசியத்திலேதான் மனம் திரிந்தது. 'அப்படியென்ருல், அக்கா சொன்னதெல்லாம் பொய்தாஞ? ஏன் அப்படிச் சொன்ஞள்? எனக்குத் தெரியக் கூடாது என்பதற்காகவா? இப்படி இருந்தால், கஷ்டமாக இராதா? மாசா மாசமும் இந்தக் கஷ்டம் தாஞ? நாஞம்

இப்படித்தான் கஷ்டப்பட வேண்டுமா? இல்லையே. அக்கா கஷ்டப்படுவதாகத் தெரியவில்லையே!...'

அவள் மனம் இந்தச் சிந்தனையில் அலைக்கழிந்தாலும், அவள் முகம் தனக்குத் தெரியாத ஒரு விஷயத்தைத் தெரிந்து கொண்ட தெளிவினால் பிரகாசித்தது. என்றாலும், அவள் மனசில் புதிதாக ஒரு கேள்வி முளைத்தது: 'பெண்கள் மட்டும் ஏன் இப்படியாக வேண்டும்? இதற்கு அர்த்தமென்ன? என்ன காரணம்?.. '

இதற்கு விடை அவளுக்கு அங்கு கிடைக்கவில்லை.

## 3

'இன்று ஏன் லல்லு பள்ளிக்கூடம் வரவில்லை?'

பள்ளிக்கூடம் விட்டு வரும் வரையிலும், கமலுவுக்கு இந்தக் கேள்வி மனசில் உறுத்தியது. பள்ளிக்கூடம் விட்டு வீட்டுக்கு வந்ததும் லல்லுவைப் போய்ப் பார்க்க வேண்டும் என்று நினைத்துக்கொண்டாள். 'லல்லுவுக்கு உடம்புக்குச் சரியில்லையா?'

கமலு தன் வீட்டுக்கு வருமுன்பே, தெருவில் எங்கோ மேளச் சத்தம் கேட்டது. நெருங்கி வந்ததும், அந்தச் சப்தம் லல்லுவின் வீட்டுக்குள்ளிருந்துதான் வருகிறது என்பதைத் தெரிந்து கொண்டாள். லல்லுவின் வீட்டிற்குள் ஆட்கள் போகவும் வரவுமாக இருந்தார்கள். 'அங்கு என்ன விசேடம்? லல்லு கூடச் சொல்லவில்லையே! பந்தல் ஒன்றும் காணோமே.' கமலுவுக்கு ஒன்றும் புரியவில்லை.

வீட்டுக்குள் வந்து புத்தகங்களை மேஜையில் வைத்தாள். சுற்றும் முற்றும் பார்த்தாள். ஒருவரையும் காணோம். நேரே அடுக்களைக்குப் போனாள். அங்கு அக்கா மட்டும் சமையல் செய்து கொண்டிருந்தாள்.

''அம்மா எங்கே, அக்கா?''

''லல்லு வீட்டுக்குப் போயிருக்கிறாள்.''

கமலு ஒரு கணம் யோசித்துவிட்டு, ''லல்லு வீட்டிலே என்னக்கா விசேடம்?'' என்றாள்.

''என்ன விசேடமா? லல்லு பெரிய மனுஷியாய்ட்டா!''

''அப்படீன்னா?''

''சமைஞ்சிட்டாடி!'' என்று சிரித்துக் கொண்டே சொன்னாள் அக்கா. கமலுவுக்கு ஒரே ஆச்சரியமாயிருந்தது.

''கமலீ! போ. லல்லுவைப் போய்ப் பார்த்துட்டுவா. உன் சிநேகிதியாச்சே'' என்றாள் அக்கா.

மறுகணம் கமலு அங்கு நிற்கவில்லை. நேராக லல்லு வீட்டில் போய்த்தான் நின்றாள்.

அங்கு வாசலில் கூடத்துத் திண்ணையில், மேளம் வாசித்துக் கொண்டிருந்தார்கள். நிறையப் பேர் அங்கு உட்கார்ந்திருந்தனர். லல்லுவின் அப்பா அவர்களுக்குச் சந்தனம், வெற்றிலை பாக்கு, பழம், சீனி எல்லாம் வழங்கிக் கொண்டிருந்தார். லல்லுவுக்கு இதை யெல்லாம் பார்த்தா.., ஒரே வேடிக்கையாயிருந்தது.

அவள் உள்ளே சென்றாள்.

உள்ளே விளக்கு முன்னால், லல்லுவைப் 'பொண்ணு' மாதிரி அலங்கரித்து வைத்திருப்பதைப் பார்த்தாள். தலை நிறையப் பூ; கழுத்து நிறைய நகைகள்; பூமாலை

கமலு பிரமை பிடித்தாற்போல் எல்லாவற்றையும் வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்தாள். 'லல்லுவுக்கு ஏன் இந்த அலங்காரம்? பெரிய மனுஷியானால், இப்படியெல்லாம் அலங்கரிப்பார்களா? கல்யாணப் பெண் மாதிரி உட்கார வைத்திருக்கிறார்களே. லல்லு கல்யாணப் பெண் ஆகி விட்டாளா?'

அங்கிருந்த பெண்களின் கசமுசப்பு அவளை அதிக நேரம் சிந்திக்கச் செய்யவில்லை. அதற்குள் லல்லுவின் அம்மா கமலுவைப் பார்த்துவிட்டாள்.

''லல்லு, கமலுவைக் காணுமின்னியே. இதோ வந்திருக்கா, பாரு'' என்று சொல்லி, கமலுவைக் கூப்பிட்டாள்.

கமலு லல்லுவின் பக்கம் போனுள்.

அப்போது லல்லுவின் தாய், கமலுவைப் பார்த்துக் கொண்டே, ''கமலீ! உன் சினேகிதி உட்கார்ந்துட்டா. இனிமே, நீ எப்போ உட்காரப் போறியோ?'' என்று சிரித்துக்கொண்டே சொன்னுள்.

அதற்குள் பக்கத்திலிருந்த வேருெருத்தி, ''கமலீயும் என்னம்மா வளர்ந்துட்டா. இப்பவோ, இன்னும் சித்த நேரமோன்னுதான் இருக்கா'' என்ருள்.

கமலுவுக்கு இந்தப் பேச்சைக்கேட்டு மனசுக்குள்ளாக வெட்கம் பிடுங்கித் தின்றது. இருந்தாலும், இந்தக் கோலாகலத்தையெல்லாம் இருந்து பார்க்க வேண்டும் என்ற ஆசை அவளை அந்த இடத்தை விட்டு விரட்டாமலிருந்தது.

வந்த பெண்கள் எல்லாம் லல்லுவின் தாயைப் பலவிதமாய் விசாரித்தார்கள். கமலு தன் செவியைத் தீட்டிவைத்துக் கொண்டு அத்தனை பேச்சையும் காதில் வாங்கிக் கொண்டிருந்தாள்.

''என்ன, உங்களுக்குப் பேரன் புறந்திருக்கானு?''

''மகராஜி, நல்லா இருக்கணும். தலைப்புள்ளே ஆண் பிள்ளையாகப் புறக்கட்டும்.''

''லல்லுவை எந்த மாராசன் கட்டிக்கப் போருனே?''

''இவளுக்கு இனிமேலா புறக்கப்போருன்? எந்தத் திசையிலோ புறந்து வளர்ந்துக்கிட்டுதானிருப்பான்.''

''வேறே திசையென்ன? அவள் அத்தை மகன்தான் அழகு சுந்தரமா இருக்கானே!''

கமலுவும் வெற்றிலே பாக்கு பூ எல்லாம் பெற்றுக் கொண்டு வீட்டுக்குத் திரும்பி வந்தாள். அவள் மனசில் லல்லுவின் வீட்டில் நடந்த பேச்சு வார்த்தைகள் அனைத்தும் வளையமிட்டன. 'வந்தவர்கள் அனைவரும் அவள் பெரிய மனுஷியானதைப் பற்றி விசாரியாமல், வேறு எப்படி யெல்லாமோ விசாரித்தார்களே! பேரன் பிறந்தானு? அப்படி யென்றால், லல்லுவின் குழந்தைதானே, அவள் அம்மா வுக்குப் பேரன்! லல்லுவுக்குக் குழந்தையா? இல்லையே! இல்லை. குழந்தை பெறப்போகிறாளா?'

அவளுக்கு அந்தப் புதிர் விளங்கவில்லை.

கமலு தன் அறிவையெல்லாம் பிரயோகித்து அந்த விஷயத்தைப் புரிந்துகொள்ள முனைந்தாள். தான் படித்த பாடங்கள், கதைகள் முதலியவற்றின் மூலம் பல விஷயங்களை ஞாபகப்படுத்திப் பார்த்தாள்.

—''கதைகளில் குழந்தை எப்படிப் பிறந்ததாகச் சொல் கிறார்கள்? நான் எப்படிப் படித்தேன்? 'அந்த ராஜகுமார னுக்கும் ராஜகுமாரிக்கும் கல்யாணம் சிறப்பாக நடந்தது; அடுத்த வருஷம் அவர்களுக்கு சொர்ண விக்ரகம் போல ஒரு ஆண் குழந்தை பிறந்தது'... 'தசரத மகாராஜாவுக்கு மூன்று மனைவியர்கள். அவர்களுக்கு வெகு நாளாகப் புத்திர பாக்யம் இல்லாமலிருந்தது. கடைசியில் ஒரு முனிவர் மாங்கனி கொடுத்தார். அதைத் தசரதர் தம் மனைவியருக்குப் பங்கிட்டுக் கொடுத்தார். சில நாட்களில் மனைவியர் மூவரும் கர்ப்பம் தரித்தார்கள். பிறகு ராமன், லக்ஷ்மணன், பரதன், சத்ருக்கனன் நால்வரும் பிறந்தார்கள்'...'அந்த மகாராஜா கல்யாணம் பண்ணி, பல வருஷங்கள் கழித்தும், தம் பட்டத்தை வகிக்க, ஒரு இளவரசன் இல்லையே என்று வருந்தினர். உடனே வேருெருத்தியை மணந்து கொண்

டார்'...'குந்திதேவிக்கு துர்வாச முனிவர் ஐந்து மந்திரங்களை உபதேசித்தார். குந்தி அவற்றைப் பரீட்சித்துப் பார்க்க எண்ணி, சூரிய மந்திரத்தைச் சொன்னாள். சூரியன் வந்து, அவளுக்கு அழகான ஒரு குழந்தையைக் கொடுத்தார். குந்தி கல்யாணமாவதற்குள்ளே கையில் குழந்தை வந்து விட்டதை எண்ணி, அந்தக் குழந்தையை யாருக்கும் தெரியாமல், ஒரு பெட்டியில் வைத்து ஆற்றில் விட்டு விட்டாள்'...

''எத்தனை கதைகள்? இந்தக் கதைகளிலிருந்து நான் என்ன தெரிந்து கொண்டேன். குழந்தை மந்திரத்திலும் மாங்காயிலும்தான் வருகிறதா? அதை எந்தக் கதையிலும் சொல்லவில்லையே. நான் சிறுமியாயிருக்கும்போது, அம்மா என்னைக் காக்கா கொண்டு வந்து தந்தது என்று சொல்லி ஏமாற்றிவிட்டாள். எந்தக் கதையிலும் காக்கா வரக் காணோமே. ஆனால், 'கர்ப்பம் தரித்து, குழந்தை பிறந்தது' என்று கதை சொல்கிறதே. அப்படியென்றால் என்ன?...''

கமலு யோசித்து யோசித்துப் பார்த்தாள்.

''ஆனால், எல்லாக் கதைகளிலும் கல்யாணம் ஆனபின்னர் தான் குழந்தை பிறந்ததாக இருக்கிறது. ஆனால், குந்தி?... அப்படியானால், கல்யாணம் ஆவதற்கு முன்பும் குழந்தை பிறக்குமா? பிறந்தால் அந்தக் குழந்தையை ஆற்றில் விடுவானேன்? அது தப்புக் குழந்தையா?...''

அந்தச் சமயம் கமலாவுக்கு அங்கு—லல்லுவின் வீட்டில்—நடந்த மற்ற பேச்சுக்களும் நினைவு வந்தன. லல்லுவின் கல்யாணத்தைப் பற்றியும் அவர்கள் பேசினார்கள்.

—''அப்படியானால், லல்லுவுக்குக் கல்யாணமாகப் போகிறதா? கல்யாணம் ஆகும் அளவுக்கு அவள் பெரியவள் ஆகிவிட்டாளா? கல்யாணமானவுடன் அவளுக்குக் குழந்தை பிறக்குமா?

—''ஆனால், இந்த விசேடம்? கல்யாணத்துக்கு அவள் தயாராகி விட்டாள் என்பதற்காவா? அப்படியானால், பெரிய மனுஷியாவது குழந்தை பெறுவதற்குத்தானா?...''

கமலுவுக்குத் தன் ஆராய்ச்சியின் மூலம் எவ்வளவோ விஷயங்கள் புரிந்துவிட்டன. என்றாலும், தன் முடிவு சரியா தப்பா என்பதெல்லாம் அவளுக்குத் தெரியாது. என்றாலும், இயற்கை வளரும் வயசில் தப்பைச் சொல்லிக் கொடுப்பதில்லை.

## 4

கமலு தன் அறிவைச் சுற்றுச் சார்பினாலும், தான் படிக்கும் பழைய கதைகள், புதுக் கதைகள் மூலமாகவும் வளர்த்துக் கொண்டாள். கதைகளிலிருந்து எவ்வளவோ நல்ல விஷயங்களையும் தெரியாத விஷயங்களையும் கற்றுக்கொள்ளலாம் என்று தோன்றியவுடன் கதைப் புத்தகங்களை விழுந்து விழுந்து படிக்க ஆரம்பித்தாள்.

அவளுடைய ஆர்வத்தை ஒரு சின்னச் சம்பவம் அதிகப் படுத்திவிட்டது.

வழக்கம்போல், கமலு தன் சிநேகிதிகளுடன் பள்ளிக் கூடம் போயிருந்தாள். அவளது வீட்டு வாழ்வில் எத்தனையோ மாறுதல்கள் ஏற்பட்டிருந்தது போல், பள்ளி வாழ்விலும் அவளுக்கு மன மாறுதல் ஏற்பட்டிருந்தது. இப்போதெல்லாம் யாரும் தனக்குத் துணையாக வராமல், பள்ளிக் கூடத்துக்குள் எங்கும் சுற்றமாட்டாள். தன்னோடு படிக்கும் பையன்களை எதிரே சந்திக்க நேர்ந்தாலோ, கூசி நடுங்குவாள். ஆண்களைக் கண்டால், இந்த வெட்க உணர்ச்சி ஏன் தலை தூக்குகிறது என்று அவளுக்குத் தெரியவில்லை. தன் உடம்பிலேற்படும் மாறுதலைப்போல், இதுவும் மன மாறுதல் தான் என்று தெளிவுபடுத்திக் கொண்டாள்.

அன்று அவள் பள்ளிக்கூடம் சென்றிருந்தாள்.

உபாத்தியாயர் தமிழ்ப் பாட்டு வகுப்பு நடத்திக் கொண்டிருந்தார். ஆண்டாள் பாசுரத்தில் ஒரு பகுதி அந்த வகுப்புக்குப் பாடம். ஆண்டாள் வெண்சங்கைப் பார்த்து கண்ணனின் அதரச் சுவையைக் கரைந்துருகிக் கேட்கும் பாட்டு :

கருப்பூரம நாறுமோ?
கமலப்பூ நாறுமோ?
திருப் பவளச் செவ்வாய்தான்
தித்தித் திருக்குமோ?

உபாத்தியாயர் இந்தப் பாட்டைச் சொல்லிக் கொடுத்து, அர்த்தமும் சொன்னர். ''ஆண்டாளுக்கு ஆண்டவன்மேல் தீராத காதல்; எனவே, அவர் கையிலிருக்கும் பாஞ்சசன்யம் என்ற சங்கைப் பார்த்து, 'அவர் உன்னை வாயில் வைத்து, சங்கநாதம் செய்வாரே. அப்போது நீ அந்தச் சிவந்த வாயின் ருசியை, மணத்தை அறிந்திருப்பாயே. அது கற்பூர வாசனையா? தாமரை மணமா? ருசி என்ன, தித்திப்பா?' என்று கேட்கிருளாம்'' என்று விளக்கினர்.

பையன்கள் சும்மா இருப்பார்களா?

''அதெப்படி சார், வாய் தித்திக்கும்?'' என்ருன் ஒருவன்.

''எல்லாம் காதலில் விளைந்த கற்பனை!'' என்ருர் உபாத்தியாயர்.

உடனே ஒரு பையன் ''காதல்'னு என்ன சார்?'' என்ருன்.

''அதைப்பத்தி உனக்கு இப்ப என்னடா கவலை? உன் அத்தை மக, பெரியவளான பிறகு பார்த்துக்கலாம்'' என்ருர் உபாத்தியாயர்.

பையன்கள் எல்லோரும் எதையோ புரிந்து கொண்டவர்கள் மாதிரி சிரித்தார்கள்.

உபாத்தியாயர், ''போதும். பதவுரை எழுதுங்க'' என்று ஆரம்பித்தார்: ''கருப்பூரம் : கர்ப்பூரம், நாறுமோ : வீசுமோ,

கமலப்பூ : கமலமாகிய தாமரைப்பூ, நாறுமோ : வீசுமோ, திரு : அழகிய ....''

பையன்கள் எல்லோரும் பாடத்தை எழுதினார்கள் கமலுவும் எழுதிக்கொண்டாள். ஆனால், அந்தப் பாட்டைக் கேட்டது முதல், அவளுக்கு ஒரு நிவர்த்தி ஏற்பட்டது. தன் மனசில் அர்த்தம் புரியாமல் கிடக்கும் ஏக்கத்தின் பிரதிபலிப்பாக அந்தப் பாட்டு தென்பட்டது.

வீட்டுக்கு வந்ததும் அந்தப் பாட்டைத் திரும்பத் திரும்பப் படித்துப் பார்த்தாள். 'ஆண்டாள் என்னைப் போலத்தான் ஏங்குகிறாள்? ஆண்டவனுக்காக. நானும் ஏங்குகிறேன். யாருக்காக?'

யாருக்காக?

இந்தக் கேள்வி அவளுக்கு அந்த வயசில் மனசில் தோன்றினாலும் புரியாத கேள்வி. என்றாலும் ஆண்டாளின் ஏக்கத்தில் பங்கு கொண்டாள். 'சங்கைப் பார்த்து ஏன் கேட்கிறாள்? அவன் வாய் தித்தித்திருந்தால், அதைச் சங்கு சொல்லுமா? சங்கு சொன்னால், ஆண்டாள் என்ன செய்வாள்? அந்த வாயின் தித்திப்பை இவளும் அனுபவிப்பாளா? எப்படி?... அதாவது ..அதாவது, அவள் ஆண்டவனை முத்தமிடத் துடிக்கிறாளா?...'

முத்தம் என்ற வார்த்தை ஞாபகம் வந்ததும் அவளுக்குப் பழைய ஞாபகமெல்லாம் மனசில் சூழ்ந்தது. 'முன்னே ராமு முத்தமிட்டானே. அது? அவன் சொன்னதுதான் சரி. பெரியவர்களும் முத்தமிடுவார்கள். முத்தம் தித்தித்திருக்குமா? எனக்கு அப்படி இல்லையே! ஒரு வேளை பெரியவளானால் இருக்குமோ?.. '

இப்படியெல்லாம் அவள் மனம் தானறிய முடியாத இன்பக் கனவுகளில் திரிந்தது. ஆனால், இந்தக் கனவுகளுக்குப் போக்கிடம்? அதன் காரணம்?—அது அவளுக்குத் தெரியவில்லை.

ஆனால் அன்று முதல் அவள் மனம் கதைகளில் மட்டு மல்லாமல், கவிதைகளிலும் பதிய ஆரம்பித்தது. தன்னை உணர்ந்து கொண்ட அந்தப் பெதும்பை உள்ளம் தன்னை அறியாமல் தன் மனதில் ஏற்படும் தவிப்பை, அங்கலாய்ப்பைப் புரிந்து கொள்ள புத்தகங்களையும் கவிதைகளையும் நாடியது. தனது பிரதிபிம்பத்தைக் கதைகளிலும், கவிதைகளிலும் வரும் பாத்திரங்களோடு ஒட்டி வைத்துப் பார்த்து, அவர் களோடு சுற்றித் திரிந்து, தன் ஏக்கத்தைத் தணிக்க, மறைக்க அவள் முயன்றாள்.

இதனால், கமலு குளிப்பதைக் கூட மறந்துவிட்டு, புத்த கங்கள் படிப்பதில் முனைந்து விடுவாள். ஒரு நாளைக்கு ஒரு புத்தகம் படித்து முடிப்பாள். அவள் அம்மா வந்து சத்தம் போட்டு எழுப்பினால் ஒழிய எழுந்திருக்க மாட்டாள்.

''என்னடி, வர வர ஒரே சோம்பேறியாப் போயிண் டிருக்கே?'' என்பாள் தாய்.

''இல்லேம்மா. இன்னும் பத்தே பக்கம் இருக்கு. படிச்சி முடிச்சிட்டு வந்துடறேன்'' என்பாள் கமலு.

இந்த வயதில் எதையும் விரும்பிப் படிப்பதைப் போல் எந்த வயதிலும் யாரும் படிப்பதில்லை. கமலு படித்தாள்; தன் மனத்தின் தவிப்புக்கு, வளரத் துடிக்கும் அறிவுக்குப் புகலிடம் தேடித் தேடிப் படித்தாள். நிறையப் படித்தாள்.

என்றாலும் அவளுக்கு லல்லுவின் விசேடத்தன்று மனசில் தோன்றிய பல கேள்விகளுக்கு அந்தப் புத்தகங்களில் தெளி வான விடை கிடைக்கவில்லை: 'கல்யாணம் பண்ணுவானேன்? கல்யாணம் பண்ணிய பிறகு குழந்தை ஏன் பெறவேண்டும்? குழந்தை பெறும்போது வலி இருக்குமோ? இல்லையென்றால், அன்று லல்லுவுக்குத் தம்பி பிறந்தபோது, அவள் அம்மா சிரிப்பதற்குப் பதில் அழுவானேன்? அவ்வளவு கஷ்டப்பட்டுக் குழந்தை பிறப்பானேன்? குழந்தை பெறுவது கஷ்டமான

காரியமானல், கல்யாணம் ஏன் பண்ணவேண்டும்? ஒருவேளை கல்யாணம் என்பது ஆண்டாள் சொல்வது போல, தித்திப்பாய் இருக்குமோ? அந்தத் தித்திப்புக்குப் பெயர் என்ன?...'

கமலுவுக்கு மனசில் கேள்விக்குமேல் கேள்விதான் விழுந்து முளைத்ததே தவிர, விடை ஒன்றுகூடத் தட்டுப்படவில்லை.

தன்னை உணரும் உள்ளம் அந்த ஒன்றுக்காகத் தவித்துக் கொண்டிருந்தது.

## 5

ஒரு நாள்—

கமலுவுக்குத் தன் மனசில் கிடந்து தவிக்கும் அந்தப் புதிருக்கும் விடை ஒருவாறு தெரிய நேர்ந்தது.

அன்று அதிகாலையில் தெருவில் ஒரே கூச்சலாயிருந்தது. அந்தக் கூச்சலைக்கேட்டு, கமலுவின் சோம்பேறித் தூக்கம்கூட, பறந்தோடி விட்டது.

எழுந்திருந்து வந்தாள்.

தெரு மூலையில் ஒரே கூட்டமாயிருந்தது. இரண்டு போலீஸ் தொப்பிகளும் கூட்டத்தின் நடுவே தெரிந்தன. ஏதாவது சண்டை சச்சரவோ என்று யோசித்தாள் கமலு. அதற்குள் அந்தக் கூட்டத்திலிருந்து கமலுவின் சிநேகிதி ஒருத்தி ஓடிவந்தாள்.

கமலு அவளைக் கூப்பிட்டு, ''ஏண்டி, என்னடி கூட்டம்?'' என்றாள்.

''யாரோ ஒரு குழந்தையைப் பெத்து, குப்பைத் தொட்டியிலே போட்டுட்டாளாம்!''

'குழந்தை' என்றதுமே கமலுவுக்குக் கால்கள் அங்கு தரிக்கவில்லை. அவள் மனம் அந்த ரகசியத்தைத்தானே தேடித் திரிந்து கொண்டிருந்தது!

கமலு அங்கு போய்ச் சேர்ந்தாள்.

ஒரு செக்கச் சிவந்த அழகான குழந்தை தூங்குவதுபோல் குப்பைத் தொட்டியில் கிடந்தது. அதன் பக்கத்தில் இரண்டு போலீஸ்காரர்கள் நின்று கொண்டிருந்தார்கள்; ஒரு பெண் விக்கி விக்கி அழுது கொண்டிருந்தாள்.

வந்தவர்கள் போனவர்கள் ஏதேதோ பேசினுர்கள். கமலு அவர்கள் பேசுவதையெல்லாம் கவனித்தாள்.

''என்னய்யா! குழந்தைக்கு உசுரிருக்குதா?''

''உசுரா? எமன் இதோ நிக்கிறப்போ, உசுரு தரிக்குமா? புள்ளெ செத்துப் போச்சு!'' என்முன் போலீஸ்காரன்.

கமலுவுக்கு நெஞ்சு துணுக்கென்றது; அவள் சாவைப் பார்த்ததில்லே. அதிலும் ஒரு குழந்தை—இத்தனே அழகான குழந்தை—சாவதைப் பார்த்ததில்லே.

''புள்ளேயைப் பெத்து எறிய மட்டும் தெரியுதே. உன் கள்ளப் புருஷனேக் கட்டி யணேக்கயிலே, தெரியாமப் போச்சோ?''

''ஒரு கல்யாணத்தைப் பண்ணிட்டு, குடியும் குடித்தன முமா இருந்தா, இந்த வம்பு எதுக்கு?''

''கள்ளப் பிள்ளேயா? சரிதான்.''

''இப்ப அழுது என்னம்மா பண்ண? அன்னேக்கி ஆசைப் படறப்போல்'லெ நினேச்சிருக்கணும்.''

''ஒம் புருஷன் யாரு?''

''இது புருஷனில்லாம, பெத்த புள்ளே ஐயா.''

கமலுவுக்கு அங்கு வெகு நேரம் நிற்க முடியவில்லே. அந்தக் குழந்தை செத்த பிறகும் அழகாகத்தானிருந்தது; என்ருலும் அந்தக் குழந்தையைப் பார்க்கப் பார்க்க அவளுக்கு என்னவோ ஒரு பயம் மனசில் எழுந்தது. அந்தத் தாயை,

திமிர்ந்து பார்த்தாள். அவளைப் பார்த்தால், அந்த ஜனங்கள் சொல்வதுபோல் 'திருடி'யாகத் தோன்றவில்லை. அவளைப் பார்ப்பதற்கே பரிதாபமாயிருந்தது.

கமலு பயந்துபோய் வீட்டுக்கு ஓடி வந்துவிட்டாள்.

என்றாலும் அவள் மனசு நிலைகொள்ளவில்லை. அந்தச் சம்பவத்தைத் திருப்பித் திருப்பி அலசிப் பார்த்தது. அந்த ஜனங்கள் பேசிய வார்த்தைகள் மனசில் ரீங்காரித்தன!

'இப்படியெல்லாம் நேரும் என்று தெரிந்தால், அவள் குழந்தை பெறுவாளா? குழந்தையைப் பெற்று ஏன் கொன்றாள்? புருஷனில்லாமல் பெற்றாளா? யாரோ கள்ளப் புருஷன் என்கிறார்களே! அவன் யார்? அவனை இவள் கட்டியணைத்தாளா? ஏன்?...'

அந்தச் சமயம் அவளுக்கு ராமு காட்டிய படங்கள் ஞாபகத்துக்கு வந்தன.

'அப்படியானால், இவன் முத்தமும் இட்டிருப்பாள். எதற்காக? தித்திக்குமென்றா? அந்தத் தித்திப்புக்கு ஆசைப் பட்டாளா? ஆண்டாள்கூடத்தானே ஆசைப்பட்டாள்! ஆனால், கல்யாணத்துக்கு முன்பு அந்தத் தித்திப்புக்கு ஆசைப் பட்டாலும், அதைத் தின்று பார்க்கக்கூடாதா? அது குற்றமா?'

அவளுக்குத் தித்திப்பு என்றதும் பழைய சம்பவம் ஞாபகத் துக்கு வந்தது. அவள் அம்மா கட்டியரிசிப் பண்டம் செய்து உறியிலே வைத்திருந்தாள். கமலுவுக்கோ கட்டியரிசி என்றால் ரொம்பப் பிரியம். அம்மா இல்லாத சமயம் பார்த்து, பெஞ்சைப் போட்டு ஏறி ஒரு உருண்டையை எடுத்து ரகசிய மாகத் தின்றுவிட்டாள். அந்த ஆசையை அவளால் தடுக்க முடியவில்லை. இருந்தாலும், அது திருட்டுத்தானே!

ஆசை, ஆசை!

'இந்தப் பெண்ணும் அப்படித்தான் திருடிவிட்டாளா? அவ்வளவு தூரம் இவள் ஆசைப்பட்டுவிட்டாளா? அம்மா வந்து கட்டியரிசி தருவதற்குள் நான் திருடித் தின்றதுபோல், இவளும் அவள் அம்மா அப்பா கல்யாணம் பண்ணுவதற்குள்ளாக, கல்யாணத்தைத் திருடிவிட்டாளா? ஆமாம், கட்டியரிசியானாலும், கல்யாணமானாலும் திருட்டு திருட்டுத்தான்.'

இப்படி யோசித்தவுடன் அவளுக்குக் கல்யாண வைபவக் காட்சியெல்லாம் ஞாபகம் வந்தது: 'ஆம், ஆசைப்படலாம். ஆனால், தெய்வ சாட்சியாக, ஊரார் சாட்சியாக, தீப லட்சுமி சாட்சியாக. ஆனல், இப்படித் திருட்டுத்தனமாகக் கல்யாணம் பண்ணக்கூடாது.'

அவள் மனத்தில் இரண்டு உண்மைகள் புலனாயின.

—கல்யாணம் புனிதமான கைங்கரியம்; அதைத் திருடக் கூடாது.

—மனம் ஏக்கம் பிடித்துத் தவிப்பதற்குக் காரணம்: ஆசை.

அவள் மனத்தில் ஓரளவு நிம்மதி பிறந்தது.

## 6

சில நாட் கழித்து, லல்லு வீட்டுக்கு விளையாடப் போயிருந்த கமலு அழுதுகொண்டே வந்தாள்.

அதைப் பார்த்த அவள் அம்மா ''ஏண்டி, அழுகிறாய்?'' என்றாள்.

கமலு என்ன சொல்வதென்று தெரியாமல், ''நான்... நான் 'பறைச்சி'யாய்ட்டேம்மா'' என்றாள்.

''என்னது, பறைச்சியா?''

''இல்லேம்மா, உனக்குப் பேரன் புறந்திருக்காம்மா'' என்றாள் பக்கத்தில் நின்ற அக்கா.

அம்மாவின் முகம் மலர்ந்தது.

# மங்கை

புடையோத ஞாலம் எலாம் போர்மதனன் வேதக்
கிடை ஓதுவிக்கும் ஒரு கிள்ளை;—விடமும்
வளரும் கொடுங் கொலையும், வஞ்சனையும், பொய்யும்,
களவும் குடிபுகுதும் கண்ணாள்;—எளிதேனும்
சீலவுததி அமுதும் செழும் பாகும்
பாலும் உதவும் பணிமொழியாள்;—மால்உதவு
மிக்க திருவழகின் வெள்ளத்து எழுந்த இரு
மொக்குள் அனைய முலையினாள்;—மைக்குழலில்
பூவின்மிகு பொறையாள்; பூணாரமென் முலையாள்;
நோவ அடியிட்ட நுண்ணிடையாள்;—ஆவிபெற
ஆர்வம் உளதாக ஆடவர் தன்மேல் வைத்த
பார்வை அறியும் பருவத்தாள்.

—ஏகாம்பர நாதருலா.

# 15 - 20

சுற்றும் பாழ் வெளியாய்த்
தோற்றமிலாச் சூனியத்தில்
பற்றிப் படர வெணும்
பகற் கனவு மனக் கொடிதான்
வற்றி நினைவழிய
வாடியுணர் வொழிய
மற்றுமொரு வழியின்றி
மயங்கி விழும் என்துயரம்!

பத்திரிகையில் இந்தப் பாட்டு வெளிவந்திருந்தது. நேரம் போகாமல் தவித்துக் கொண்டிருந்த கமலா இந்தப் பாட்டைப் படித்துப் பார்த்தாள்.

'இதென்ன பாட்டு?'

அவள் மனம் சலித்துக் கொண்டது. தன் மனத்தின் குழப்பத்தைப் போலவே இதுவும் ஒரு குழப்பமா? அவள் பத்திரிகையை அலுத்துப் போய் விட்டெறிந்தாள். என்றாலும் அவளை அறியாமல், மனத்தில் விழுந்த சிக்கலை அவிழ்க்கப் பாடு படும் அவளது உள் மனத்தில் கேள்விகள் சுரந்தன: பாழ் வெளியில், சூனியத்தில் படருவதாவது? படர்வதற்குக் கொழுகொம்பு வேண்டாமா? கொழுகொம்பு இல்லையென்பதற்காக வளரும் கொடி படராமல் இருக்க முடியுமா; அப்படிப் படர்ந்தால் வாடத்தான் செய்யுமா? மனமும் அப்படி வாடுமா? அதுதான் துயரமா?

மனத்தின் பாதாளச் சுனையில் ஊறிச் சுரந்த கேள்வி வெள்ளம் வெளிமனத்தின் கரையில் மோதி அலை துளும்பிற்று. கமலா மீண்டும் சிந்தித்தாள். பத்திரிகையை மீண்டும் எடுத்துப் படித்துப் பார்த்தாள்.

'—ஆம், என் மனமும் இப்படித்தானே இருக்கிறது? அர்த்தமற்றுக் கனவு காணும் என் மனம் ஏன் இப்படித் தவியாய்த் தவிக்கிறது? என் மனம் எங்கு படர எண்ணுகிறது? ஏன் இந்தச் சூன்யத் தன்மை? ஏன் இந்தத் தனிமை உணர்ச்சி?

---

தன் மன நிலையோடு சம்பந்தப்படுத்திப் பார்த்தபோது' அந்தப் பாட்டில் அவளுக்கு ஓரளவு தெளிவு ஏற்பட்ட மாதிரித் தோன்றியது. தன் மனத்தில் உருவமற்று, தெளிவற்று உறுத்திக் கொண்டிருக்கும் அந்தப் புரியாத உணர்ச்சிக்கு இந்தப் பாட்டில் ஏதோ உருவம் கண்டு விட்டதுபோல், கமலா உணர்ந்தாள். உள்ளத்தின் உணர்ச்சிக்கு உருவம் அமைப்பதுதான் கவிதையா? அப்படியானால், இது யாருடைய உள்ளத்தின் பிரதிபலிப்பு? அந்த 'மகராஜி' யார்?

கமலா பெயரைப் பார்த்தாள். அந்தக் கவிதையை எழுதியது ஒரு மகராஜி அல்ல; மகராஜா!

'சுகுமாரன்'

அந்தப் பெயரை அவள் மனம் தன்னுள் சொல்லிச் சொல்லிப் பார்த்துக் கொண்டது. 'இதைப் பாடியது ஒரு ஆண்தானா? ஆணுக்கும் இந்த மாதிரித் தனிமை உணர்ச்சி உண்டா? இல்லை. இது வேறு உணர்ச்சியா?'

எது எப்படியாயினும், கமலாவின் மனசில் அந்தப் பாட்டும், அந்த மகராஜன் பெயரும் நிலைபெற்று விட்டன. அந்தப் பாட்டைப் பாடப் பாட ஒரு நிவர்த்தி, நெஞ்சின் அழுத்தம் குறைந்தது மாதிரி ஒரு நிம்மதி அவளுக்குத் தட்டுப் பட்டது.

கமலாவின் மனசில் இந்தச் சூனிய உணர்ச்சி ஏற்படு வானேன்? அதன் காரணம்—

கமலா இப்போது அறிவறியாப் பேதையல்ல; அறிந்து கொள்ளத் துடிக்கும் பெதும்பையும் அல்ல. அவள் தன்னை அறிந்து கொண்ட மங்கை.

மங்கைப் பருவத்தின் பூரண சௌந்தர்யமும் அவள் உடம்பில் பொங்கிப் பிரவகித்தது. சந்தனத்தில் கடைந்தெடுத்து மெருகேற்றியதுபோல, அங்கங்களில் எழிலும் மிடுக்கும் ஏறியிருந்தன. எடுப்பும் நிமிர்வும் இங்கிதமும் கொண்டு உடல் வளர்ச்சி பெற்றிருந்தது. தலை மயிர் நீண்டு வளர்ந்து கன்னியாகுமரிக் கருமணலைப்போலக் கருமையும் மினுமினுப்பும் கொண்டிருந்தது. புருவக் கீற்றுக்கள் வளைந்து ஒடிந்து உணர்ச்சி பாவங்களை உணர்த்தின. கண்கள் அகன்று, கரு மணிகள் கறுத்து, நிலை கொள்ளாமல் ஓடியாடின. புதிய ரத்தமும், புதிய ஜீவனும் குடிகொண்ட அங்க அவயவங்கள் சட்டை உரித்த பாம்பைப்போல் ஒளி தந்தன. கன்னக் கதுப்புக்கள் வழவழப்புப் பெற்று, கோமேதகத்தின் ஒளிச் சிதறலைப் போல் அழகேறியிருந்தன. மார்பகம் அகன்று, இடை சிறுத்து உள்வாங்கி காம்பீர்யம் தந்தது. இளமையின் பெருமிதம் நெஞ்சகத்தில் பொங்கிப் புளகித்து, தலையாட்டம் கொடுக்காத பம்பரக் காய்போல, கிறக்கமும் எடுப்பும் கொண்டு இறுமாந்து நின்றது. நடையில் நளினமும் லாகவமும் வளைந்து நிமிர்ந்தன. அவள் கண்கள் தேவபாஷை பேசின; அவள் நடையலங்காரம் பூமிக்குப் புளகம் தந்தது; அவள் எழில் இயற்கைக்குக் கர்வம் ஊட்டியது.

மொத்தத்தில் அவள் நவராத்திரிக் கொலுவில் அமர்ந்த அம்மன் விக்ரகத்தைப்போல், கண்ணுக்குக் காட்சியாக, மனத்துக்கு நிறைவாக விளங்கினாள்.

கமலா இப்போது பருவ கால யுவதி; பூத்த மலர்.

பூ மலர்ந்தால், மணம் வீசும்; மகரந்தம் சிந்தும்; செந்தேன் துளிக்கும். ஆனால், மலர்ந்த பூ வாடுமுன்னே மகரந்தம் பயனடைய வேண்டும். அதற்கு வண்டின் வரவு வேண்டும். வண்டை வரவேற்க, தேன் வேண்டும். இல்லையென்றால் மகரந்தம் கொட்டிப்போய்விடும். இந்தக் கவலை, விசாரமெல்லாம் கமலாவுக்கு இல்லாவிட்டாலும், இயற்கையன்னைக்கு உண்டு. மலருக்கு இதயம் இல்லை; கமலாவுக்கு

இதயம் உண்டு. எனவேதான் இந்த ஆத்ம வாதனை; தனிமை உணர்ச்சி; வண்டை வரவேற்கும் மலருள்ளம் படைத்த கமலாவிடம் இயற்கை நிகழ்த்தும் வேதனை; தாய்மைப் பக்குவத்தை எய்திய உடம்பின் தவிப்பு அது.

அந்தத் தவிப்பினால், அவள் மனம் துணை நாடித் திரிந்தது; படரத் துடித்தது. ஆனால் எங்கு படருவது? அதைப் புரிந்து கொள்ள முடியாததால்தான் கமலா தவித்தாள். நான் என்ற தத்துவத்தைக் கண்டறிந்த வேதாந்திகள் தம் ஜீவாத்மாவைப் பரமாத்மா மீது படரவிடத் துடிப்பதுபோலத்தான் கமலாவும் துடித்துக் கொண்டிருந்தாள். கமலா தன்னை உணர்ந்து கொண்டாள். தன்னில் பிறரைப்போல் அறிவும் இதயமும் மட்டுமல்லாமல், வேறொன்றும் — அதாவது பெண்மை, அதன் ஜீவ தத்துவமான தாய்மை ஒன்றும்—இருப்பதையும் அவள் ஓரளவு உணர்ந்து கொண்டாள். இந்த உணர்ச்சி அவள் அறிவுக்குத் தெரியாவிட்டாலும், இதயத்துக்குத் தெரியும். எனவேதான் தனிமை உணர்ச்சி அவளிடம் தலைதூக்கியது.

தனிமை உணர்ச்சி பெருகப் பெருக அவள் மனம் சூன்யமாவதுபோல் தோன்றியது. என்னவோ தான் எந்தவிதத் துணையுமின்றி, நிர்க்கதியாய், திக்குத் தெரியாத காட்டில் திகைத்து நிற்பது போன்ற பிரமை. அதனால் வாழ்க்கையில் வெறுப்பு, கசப்பு. 'நான் ஏன் பிறந்தேன்? இப்படிக் கஷ்டப் படத்தானா?' என்ற விரக்தி மனப்பான்மை. இந்தக் கோளாறுகள் எல்லாம் இயற்கையின் சூழ்ச்சி.

வெளித்தோலைக் கிழித்தெறியாமல் விதை முளைவிட முடியாது; எனவே முளைவிடும் அந்த வளர்ச்சியில் வேதனை இருக்கத்தான் செய்யும். கமலா வளர்ந்து கொண்டிருந்தாள்; அதனால் வேதனைப்பட்டாள். தனிமையைப் போக்க எண்ணி, யாராவது ஒருவரின் துணையை விரும்பினாள். அந்த உணர்ச்சியிலிருந்து தப்பிக்க, தான் யாரிடமாவது புகலடைய விரும்பினாள்.

''நான் யாருடைய துணைக்காக ஏங்குகிறேன்?''

கமலாவின் மனம் சிந்தித்தது:

'அம்மா—அப்பா—அக்கா—லலிதா .....'

'இவர்களெல்லாம் எனக்குத் துணையில்லையா? இவர்களிடம் நான் அன்பு கொள்ளவில்லையா? அம்மா என்னோடு அன்பாகப் பேசுகிறாள்; அக்கா பேசுகிறாள். அப்பா பேசுகிறார். ஆனால், அவர்கள் அன்பில் நான் ஏன் கலந்து விட முடியவில்லை? நானும்தான் அன்பு காட்டுகிறேன். ஆனால், அந்த ஒட்டுறவில் என் தனிமையுணர்ச்சி சாகவில்லையே! அப்படியானால், நான் எந்த விதமான அன்புக்காகத் தவிக்கிறேன். பக்தியா? பாசமா? நட்பா?...

அப்போது அவளுக்குத் தன் உபாத்தியாயர் சொன்ன விஷயம் ஞாபகத்துக்கு வந்தது. ஆண்டாள் ஆண்டவனைக் காதலித்தாள்!

காதல்!

'தான் விரும்பும் அன்பு காதலா? அந்த அன்பில்தான் என் தனிமை நீங்குமா? நான் யாரைக் காதலிப்பது? யாரைக் காதலிக்கிறேன்?...'

அந்தக் கேள்விக்கு அவளால் பதில் காண முடியவில்லை. வெறுங்காற்றில் கைவீசிய கதையாகப் போய்விட்டது.

2

நாட்டியராணி மனோரமாவுக்கு அப்போது பெரும் புகழ். அன்று மாலை அவளது நாட்டியக் கச்சேரி நடக்க இருந்தது.

''கமலா, மனோரமா டான்சுக்கு வருகிறாயா?''

அப்பா கூப்பிட்டதும், கமலா தடையே சொல்லவில்லை. வீட்டில் இருந்து பொழுது போகாமல் தவித்துக் கொண்

டிருந்த கமலாவுக்கு எங்காவது போய்விட்டு வந்தாலாவது நிம்மதி ஏற்படாதா என்றிருந்தது. உடனே புறப்பட்டு விட்டாள்.

கொட்டகையில் ஒரே கூட்டம். தனிமை உணர்ச்சியில் வெந்து கொண்டிருந்த கமலாவுக்கு, கூட்டமும் கும்மாளியும் ஓரளவு நிம்மதி தந்தது. என்றாலும் மனத்தைப் பரிபூரணமாக இழந்துவிட்டு, சொக்கிக் கிடக்க வேண்டும் என்றிருந்தது.

''நாட்டியம் எப்போதப்பா ஆரம்பம்?''

''ஆறரைக்கு.''

ஆறரை அடிக்க பத்து நிமிஷங்கள்தான் இருந்தன. இருந்தாலும், கமலாவுக்கு நிலை கொள்ளவில்லை. பொறுமையிழந்து புழுங்கித் தவித்தாள். அந்தப் பத்து நிமிஷ காலமும் முன்னேறுமலே ஸ்தம்பித்து நிற்பது போலத் தோன்றியது.

நாட்டியம் ஆரம்பமாயிற்று.

பளபளக்கும் பட்டுப் பட்டாவளி உடுத்தி, ஒளிக் காந்தம் மின்வெட்ட, அங்க அசைவில் ஒயில் காட்டி ஆடினுள் மனோரமா. ரசிகர் குழாம் தலையை ஆட்டியாட்டி அந்த நாட்டியத்தை ரசித்தது. ஜதி, அலாரிப்பு எல்லாம் நடக்கும்போது, கமலாவுக்கு அதில் ஈடுபாடு இல்லை. இருந்தாலும் ஒளி மயக்கத்திலும் வர்ண ஜாலத்திலும் மனத்தை லயிக்க விட்டிருந்தாள்.

கடைசியாக, நாட்டிய ராணி பதம் பாடியாட ஆரம்பித்ததும், கமலா நிமிர்ந்து உட்கார்ந்தாள். அவளுக்குப் பாட்டு என்றுல் போதும். நல்ல ஈடுபாடு. கண்ணை இமை தட்டாமல் பார்த்துக் கொண்டிருந்தாள்.

அது பாரதியின் கண்ணன் பாட்டு.

கனவு கண்டதிலே—ஒருநாள்
கண்ணுக்குத் தோற்றுமல்
இனம் விளங்கவில்லை—எவனே
என்னகம் தொட்டு விட்டான்!

பாட்டும் அபிநயமும் பருந்தோடு நிழலாக ஒன்றி முயங்கிச் செல்ல, ஆடினுள் மனோரமா. கமலா தன்னை மறந்து அந்தப் பாட்டில் ஈடுபட்டாள். அவள் மனம் இதயத்தை விட்டுக் கழன்று போய், மேடைமீது நின்ற மனோரமாவின் அங்க அசைவுகளோடு ஒன்றியாடுவதாக ஒரு பிரமை. கமலாவின் உள்ளமும் ஆடிக்கொண்டிருந்தது. அந்தப் பாட்டு அவள் மனசில் உறைந்து போய் விட்டது.

நாட்டியம் முடிந்து வீட்டுக்கு வந்தனர்.

அன்றிரவு கமலாவுக்குத் தூக்கமே பிடிக்கவில்லை. வெகு நேரம் புரண்டு புரண்டு படுத்துக் கொண்டிருந்தாள். தூங்க வேண்டும் என்று உடல் விரும்பினாலும், கண்கள் மூடவில்லை. இதயமோ தன் தவிப்புக்கு ஏதோ விடை கண்டுபிடித்துவிட்ட மாதிரி துள்ளிக் குதித்தது. மனத்துக்குள் தெளிவாகத் தெரிந்தும், வெளியே சொல்ல வராத ஏதோ சூட்சுமத்தைப் போல, அவள் மனம் துறுதுறுத்தது. அவள் மனசில் அந்தப் பாட்டு, அந்த நடனம் எல்லாமே நிறைந்து நின்றது. அவள் வாய் தன்னையறியாமலே அந்தப் பாட்டை முணுமுணுத்தது. தானும் எழுந்திருந்து அந்த மாதிரி ஆடியும் பார்க்க வேண்டும் போலிருந்தது. இந்த உணர்ச்சி ஏன், எதற்கு ஏற்படுகிறது என்பது அவளுக்குத் தெரியவில்லை.

இரவு வெகு நேரம் கழித்து எங்கோ ஒரு தலைக் கோழி கூவும் சமயத்தில்தான் அவள் மனமும் உடம்பைப் போல் ஓய்ந்தது. பாட்டை வாய்க்குள் முணுமுணுத்துக் கொண்டிருந்த கமலாவுக்குத் தூக்கம் எப்படி வந்ததென்றே தெரியாது.

நல்ல தூக்கம்.

கமலா அலங்காரமான ஆடையணிகள் பூண்டிருந்தாள். உடம்பெல்லாம் பற்பல நகைகள் மின்னின. எங்கிருந்தோ ஒரு புது ஒளிவெள்ளம் அவள்மீது பாய்ந்து பரவியது. மருதோன்றி தீட்டிய பாதங்களில் சலங்கை கலீரென ஒலித்தது. கைவளை

கலகலத்தது. அவள் நாட்டியமாடினுள். அந்தப் பாட்டுக்கு அபிநயமும் பிடித்துப் பார்த்தாள்.

'எவனே என்னகம் தொட்டுவிட்டான்!'

திடீரெனச் சிரிப்பு கலகலத்தது.

கமலா ஆட்டத்தை நிறுத்தினுள்.

''யாரது?''

''நான்தான்!''

''யார் நீ?''

''எவனைப் பாடினயோ, அவன்தான்!''

கமலா ஓடோடியும் சென்று அவனைக் காண முயன்ருள். ஏதோ தெளிவற்ற புகை மண்டலம் உருத் திரிப்பது போலத் தோன்றியது. கூர்ந்து கவனித்தாள். ஒன்றும் சரியாகத் தெரியவில்லை.

''யாரது? ராமுவா?''

சிரிப்பு.

''பாலுவா?''

சிரிப்பு.

''இல்லை. சுகுமாரனு?''

மீண்டும் பலத்த சிரிப்பு,

கமலா திடுக்கிட்டு விழித்தெழுந்தாள். அந்தக் கனவு கலைந்து வீட்டது. உடம்பில் உண்மையிலேயே நாட்டிய மாடியது போன்ற அசதி தட்டியது. மேலெல்லாம் வியர்த்துக் கொண்டிருந்தது. அவளுக்குக் கனவு முற்றும் மறந்து போக வில்லை. ஏதோ தெளிவற்ற நினைவைப்போல், அந்தக் கனவை மீண்டும் கற்பனை பண்ணிப் பார்த்தாள். அதில் சுகமிருந்தது. ஒரு கணம் சிரித்துக் கொண்டாள்.

மீண்டும் கண்ணை மூடினுள்; தூக்கம் வரவில்லை.

'கனவில் நான் என்ன கண்டேன்? யாரோ வந்த மாதிரி இருந்ததே. வந்தது யார்? பதிலுக்கு ஏன் ஒரே சிரிப்பு? நான் என்ன கேட்டேன்? யாராரையோ கேட்டேனே! பாலுவா? ராமுவா? சுகுமாரனா? யார் இந்தச் சுகுமாரன்? இவர்கள்தான் எனக்குத் தெரிந்தவர்கள் என்பதற்காகக் கேட்டேனா? இல்லையென்றால், ஏன் அந்தச் சிரிப்பு? வந்தது யார்?......'

நாட்டியம் பார்த்துவிட்டு வந்த நினைப்பில் எழுந்த கனவு என்று அவள் ஒதுக்கிவிடவில்லை. தன் புதிருக்கு அந்தக் கனவில் விடை கிடைக்குமாவென்று பார்த்தாள். ஒன்றும் தெரியவில்லை. ஆனால், வந்தது யாராயினும் சரி.—அவன் ஒரு ஆண்—இதை மட்டும் அவள் உணர்ந்து கொண்டாள்.

'ஆண்தான் பெண்ணின் இதயத்தைத் தொடுவானா? அப்படியானால், என் இதயத்தை யார் தொடுவார்கள்? ஆண்டாள் இதயத்தைக் கண்ணன் தொட்டானா?...

—'ஒரு ஆண் பெண்ணைத் தொடலாமோ?...'

தொடலாமோ, இல்லையோ? தொட்டால் சுகமிருக்கும் போலத் தோன்றியது. 'என்னைத் தொட்டவன் எவன்?...'

சே! ஒரு கனவை வைத்துக் கொண்டு இத்தனை மனக் கோட்டையா? நேற்று நான் நாட்டியம் பார்க்கவே போயிருக்கக் கூடாது. போகப் போய்த்தானே இந்த எண்ணமெல்லாம்?...

கமலா தன் மனத்தையே ஏமாற்றப் பாடுபட்டாள்.

## 3

மாடியிலுள்ள ஜன்னலிலிருந்து கமலா சிந்தித்துக் கொண்டிருந்தாள். உயரமான ஜன்னல் ஆனதால், தூரத்திலுள்ள வயல் வெளியும், அதையொட்டி ஓடும் வாய்க்காலும் கண்ணுக்குக் குளுமை தந்தன. என்றாலும் கமலாவுக்குக் கண்தான் அந்தக் காட்சியில் பதிந்திருந்ததே தவிர,

கருத்து அந்தத் தனிமை உணர்ச்சியால் நொந்து சுருண்டு புழுவாய்த் துடித்தது.

'நான் ஏன் இப்படி பித்துப் பிடித்ததுமாதிரி இருக்கிறேன்? எந்த வேலையைத் தொட்டாலும், புத்தகத்தைப் படித்தாலும் மனம் ஏன் அதில் ஒட்டாமல் எரிந்து எரிந்து விழுகிறது? இந்தத் தனிமை எங்கிருந்து வந்தது? ஏன் வந்தது? நான் மட்டும்தானு, இப்படிக் கஷ்டப் படுகிறேன்? லல்லுவும் என் வயதுப் பெண் தானே! அவளுக்கும் இந்த மாதிரியான வெறுமை உணர்ச்சி கிடையாதா? அவளைப் பார்த்தால், உற்சாகமாயிருப்பதுபோலத்தான் தோன்றுகிருள். உண்மையில் உற்சாகமாய்த்தான் இருக்கிருளா? இல்லாவிட்டால் அதுவும் ஒரு பிரமையா?'

லலிதாவின் நினைவு வந்ததும், கமலாவுக்கு மேலும் அங்கிருக்கப் பிடிக்கவில்லை; மாடியை விட்டு இறங்கி, லலிதாவைப் போய்ப் பார்க்க எண்ணிஞள். அவளோடு பேசிக்கொண்டிருந்தாலாவது தன்னை மறக்க முடியாதா என்று ஒரு ஆசை.

கமலா லலிதாவின் வீட்டுக்குச் சென்ருள்.

''லல்லு எங்கே, மாமி?''

''மாடியிலே பரீட்சைக்குப் படிக்கிறு'' என்ருள் லல்லுவின் அம்மா.

'பரீட்சையா? பள்ளிக்கூடத்தில் இப்போது ஒன்றும் பரீட்சை கிடையாதே. பின் ஏன் லல்லு பரீட்சைக்குப் படிப்பதாகச் சொன்ஞள்? தான் படிப்பதை யாரும் தொந்தரவு பண்ணக் கூடாது என்ரு? இல்லை—லல்லு பரீட்சை என்று பொய் சொல்லிவிட்டு, வேறு ஏதாவது...'

கமலாவுக்கு மனசில் அர்த்தமற்ற சந்தேகம் முளைவிட்டது. சந்தேகம் கிளம்பியதுமே அவள் நடை மந்தப்பட்டது, அரவம் காட்டாமல், மாடிப்படிகளில் ஏறிஞள். தான் வருவது லலிதாவுக்குத் தெரிந்துவிடக் கூடாது என்று கவலை. ஏன் அந்தக் கவலை? லலிதா என்னதான் செய்கிருள் என்று பார்க்க வேண்டும் என்ற குறுகுறுப்பு.

மாடியில் லலிதாவின் அறை சாத்தப் பட்டிருந்தது. கமலா முதலில் கதவைத் தட்டவில்லை. இடைவெளி வழியாகப் பார்த்தாள். உள்ளே லலிதா கட்டிலில் குப்புறப் படுத்துக்கொண்டு, பாதங்கள் இரண்டும் முகட்டை நோக்கி உயர்ந்திருக்க, கைகளைக் கன்னத்தில் ஊன்றிக் கிடந்தாள். 'லலிதா படிக்கிறாளா? இல்லை—'

கமலா மெதுவாகக் கதவைத் தட்டினாள்.

லலிதா திடுக்கிட்டு எழுந்தாள். எதையோ எடுத்துத் தலையணைக்கு அடியில் மறைத்து வைத்தாள்.

''யாரது?''

''லல்லூ!''

''யார், கமலீயா?''

லலிதா எழுந்து வந்து கதவைத் திறந்தாள். கமலா அறைக்குள் சென்றாள். இருவரும் முதலில் ஒன்றும் பேசவில்லை. இருவர் மனத்திலும் இருந்த கள்ளம் வாயை மூடிவிட்டது.

''ஏண்டி, கதவைப் பலமாத் தட்டினா, என்ன?''

''ஏன்?''

''மெதுவாத் தட்டினவுடனே பயந்துவிட்டேன்!''

''பயந்துட்டியா?''

''ஆமாம். அம்மாவோ, அப்பாவோன்னு பயந்துட்டேன்.''

''அவர்கள் வந்தால் என்ன?''

''வந்தால் என்ன?'' என்று லலிதாவும் திருப்பிச் சொல்லி விட்டுப் படுக்கைக்குப் போனாள். கமலாவுக்குச் சந்தேகம் வலுத்தது.

''நீ என்ன பண்ணிக் கொண்டிருந்தாய்?''

"படித்துக் கொண்டிருந்தேன்."

"பள்ளிக்கூடப் பாடமா?"

"ஆமாம்."

"அதை மறைச்சி வச்சிப் படிப்பானேன்?"

லலிதாவின் பாடு சங்கடமாய்ப் போய்விட்டது.

"நீ பாத்தியாடி?"

"ஆமா."

அதற்குள் தலையணைக்கடியிலிருந்து மண்ணுண்ணிப் பாம்பு போலத் தலையை நீட்டிக் கொண்டிருந்த புத்தகம் கமலாவின் கண்ணில் பட்டுவிட்டது. விறுட்டென்று அந்தப் புத்தகத்தை எடுத்தாள்.

"இதைத்தான் படித்துக் கொண்டிருந்தாயா?"

கமலா அந்தப் புத்தகத்தைப் பார்த்தாள். பெயரை வாசித்தாள்: 'மன்மத விலாசம்.'

"இதென்னடி புத்தகம்?"

"போய்க் கதவைச் சாத்திட்டு வா; காட்றேன்" என்றாள் லலிதா.

'அப்படி இதிலென்ன ரகசியம் இருக்கிறது' என்று யோசித்துக்கொண்டே கமலா கதவைச் சாத்திவிட்டு வந்தாள். பிறகு இருவருமாக அந்தப் புத்தகத்தைப் புரட்டிப் பார்த்தார்கள்.

அதில் என்னென்னவோ புதுப்புது விஷயங்கள் எல்லாம் எழுதியிருந்தன. காதல், காமம், ஆண் பெண் சுகவாழ்க்கை, பிரவிடைக்காலம், கர்ப்பச் சின்னங்கள், இல்லற இன்பம்... எத்தனையோ விஷயங்கள். கமலா என்னென்ன விஷயங்களைப் பற்றித் தெரிந்துகொள்ளத் துடித்தாளோ, அதைப்பற்றியெல்லாம் அதில் எழுதப்பட்டிருந்தது. மேலும், அதில் சிருங்கார லீலைச் சித்திரங்களும், ஆண் பெண் உறுப்புக்களின் விளக்கப் படங்களும் இருந்தன.

கமலாவுக்கு அதிலுள்ள விஷயத்தைப் பார்ப்பதைவிட, அந்தப் படங்களைப் பார்ப்பதில் பரபரப்பும் கூச்சமும் பயமும் ஏற்பட்டன. நெஞ்சு படபடத்தது.

''இதென்னடி, இது? அசிங்கமா—''

''இதிலென்னடி அசிங்கம்?''

''இதையெல்லாமா எழுதறது? படம் போடுறது?''

''பின்னே நீயும் நானும் எப்படித் தெரியறது?''

கமலா மீண்டும் மௌனமானாள். அவள் வாய்தான் அப்படிப் பேசிற்றே ஒழிய மனத்தில் அந்த விஷயங்களைப் பற்றியெல்லாம் தெரிந்துகொள்ள இனம் தெரியாத ஆசையும் ஆத்திரமும் இருந்தன.

''லல்லு! இதை நானும் ஒருதடவை படிச்சிப் பாத்துட்டுத்தரேனே!''

கமலா இந்தக் கேள்வியைக் கேட்டுவிட்டு லலிதாவின் முகத்தைப் பார்த்தாள். லலிதா ஒருகண நேரம் யோசித்து விட்டுப் பதில் சொன்னாள்.

''இல்லெ. நான் இதைத் திருப்பிக் கொடுக்கணும்.''

''உன்னிது இல்லையா?''

''இல்லெ.''

''பின்னே?''

''ராமு கொடுத்தான்.''

''ராமுவா?''

கமலா யோசித்துப் பார்த்தாள். லலிதாவும் கமலாவும் பள்ளிக்கூடத்துக்குச் செல்லும்போதும், பள்ளிக்கூடத்தில் இருக்கும்போதும் ராமுவுடன் மட்டுமல்ல, எந்த ஆண் பிள்ளையுடனும் பேசியதில்லை. பெரியவர்கள் ஆனபிறகு ஆண்பிள்ளைகளோடு பேசக்கூடக் கூடாது என்று நினைத்திருந்தாள் கமலா.

மேலும், ஆண்களைக் கண்டாலே சொல்லமுடியாத வெட்க உணர்ச்சி தலையைக் குனிய வைத்துவிடும். ஆனால், லலிதா வுக்கு இந்தப் புத்தகத்தை, இந்த 'அசிங்கமான' புத்தகத்தை ராமு கொடுத்தான் என்றால், ராமுவும் லலிதாவும் பேசு கிறார்கள் என்றுதானே அர்த்தம். அவர்கள் பேசுவதைக் கமலா பார்த்ததில்லை. அப்படித் தனக்குத் தெரியாமல் அவர்கள் எங்கு பேசுகிறார்கள், என்ன பேசுகிறார்கள்.....?

கமலா லலிதாவிடம் இந்த விஷயத்தை எப்படிக் கேட்ப தென்று தெரியாமல், அர்த்தமற்றுப் புத்தகத்தைப் புரட்டிக் கொண்டிருந்தாள். புத்தகத்தினுள்ளிருந்து ஒரு காகிதம் விழுந்தது. கமலா அதை எடுத்துப் பிரிக்கப்போனாள்.

''கமலீ! அதைக் கொண்டா. நீ பார்க்க வேண்டாம்.''

''ஏன்?''

''இல்லை, வந்து...''

லலிதாவுக்கு அதற்குமேல் பேச வாய் வரவில்லை. மௌனமானாள். கமலாவுக்கும் ஒன்றும் ஓடவில்லை. இரு வரும் சில நிமிஷ நேரம் மௌனமாயிருந்தனர். கமலாவுக்கு லலிதா தன்னிடம் எதையோ மறைக்க எண்ணுகிறாள் என்று தோன்றியது. தனது உயிர்த் தோழியான லலிதாவா இப்படி—

லலிதா அவளை அதிக நேரம் சிந்திக்க விடவில்லை. பெரு மூச்செறிந்துவிட்டுப் பேச ஆரம்பித்தாள்: ''கமலீ! உன்னிடம் கூடச் சொல்லாமல் மறைத்து வைத்திருந்தேனடி. ராமுவுக் கும் எனக்கும் பழக்கம் ஏற்பட்டு ரொம்ப நாள் ஆகிறது. எப்படி ஏற்பட்டதென்றே சொல்ல வரவில்லை. தேர்த் திருவிழா வந்ததே, அப்போ நாங்கள் ஒருவரை யொருவர் பார்த்தோம். அப்புறம், ராமுவை எப்போ பார்த்தாலும் பார்க்கணும் போலவே இருந்தது. ராமுவும் அப்படித்தான். எப்படியாவது தினம் தினம் என்னைப் பார்க்காமல் இருக்க ராமுவுக்கும் முடியவில்லை.''

''இதென்னடி பழக்கம்?''

''போடி பைத்தியம்! தெரியாதது மாதிரி கேக்கிறியே. ராமு என்னைக் காதலிக்கிருண்டி!'' என்று வெட்கத்தோடு சொன்னுள் லலிதா.

''அப்போ, நீயும் அவனை—''

''ம்'' என்ருள் லலிதா.

கமலா என்ன பேசுவதென்று தெரியாமல் மேல் முகட்டைப் பார்த்தாள். பிறகு, ''லல்லு, காதலிக்கிறதுன்னு, கஷ்டமாயிருக்கிறதாடி?''

''ஒருவரையொருவர் புரியும் வரையிலும் கஷ்டம்தான்.''

''இப்போ?''

''நீ பொல்லாதவளடி.''

கமலாவும் லலிதாவும் அதன்பின்னர் குசுகுசுவென்று ஏதேதோ பேசிக்கொண்டனர். கமலாவுக்கு லலிதா சொல் லும் விஷயங்களெல்லாம் புதிதாகவே இருந்தன; அதைக் கேட்கக் கேட்க நெஞ்சு படபடத்தது.

கமலா லலிதாவின் ரகசியத்தைக் காப்பாற்றுவதாகச் சொல்லி விட்டு வீடு வந்து சேர்ந்தாள்.

வீட்டுக்கு வந்த பொழுதிலிருந்தே அவள் மனசில் பற்பல எண்ணங்கள்; தெளிவற்ற கற்பனைகள். லலிதாவும், ராமுவும் காதலர்களாக எப்படி இருப்பார்கள் என்று கற்பனை பண்ணிப் பார்த்தாள். அந்த எண்ணம் வரும்போதெல்லாம் அவளுக்கு லலிதா வைத்திருந்த புத்தகத்திலுள்ள காட்சிகள்தான் மனசில் தெரிந்தன.

''சே! இப்படியா?''

அவளால் அந்தச் சிருங்காரக் காட்சிகளைத் தாங்கமுடிய வில்லை: 'காதல் என்ருல் இப்படித்தான் இருக்குமா? ஆனும்

பெண்ணும் ஒருவரையொருவர் அணைத்துக்கொள்வதுதான் காதலா?'

கமலாவுக்குத் தெளிவு ஏற்படவில்லை. ஆண்டாளின் பாட்டையும், பாரதி பாட்டையும் கேட்டு, காதலைப்பற்றி என்னென்னவோ அலங்காரமான கற்பனைகள் பண்ணியிருந்த கமலாவுக்கு அந்தப் புத்தகத்திலுள்ள சித்திரங்கள் ஆபாச மானதாகப் பட்டன. இருந்தாலும், அந்தப் புத்தகத்தை மேலோட்டமாகப் பார்த்ததிலேயே அவள் எத்தனையோ புது விஷயங்களைத் தெரிந்துகொண்டாள். ஆணும் பெண்ணும் ஒன்று கூடுவதற்காகவே ஆண்டவன் காதல் என்ற உணர்ச்சியை உண்டாக்குகிறான் என்று அதில் எழுதியிருந்தது. ஆனால், அந்தச் சித்திரங்களைப் பார்த்தபின், லலிதாவின் காதலைக் கேட்டபின், கமலாவுக்கு அந்தக் காதலை ஏன் கள்ளத்தனமாகப் பரிமாற வேண்டும் என்ற சிந்தனை எழுந்தது. கள்ளத்தனமாகக் காதல் கொள்வதென்றால், காதல் கொள்வது தப்பா? அது பாவமா? கடவுள் பாவத்தையா உண்டாக்குகிறார்?

கமலாவுக்குக் காதல் என்பது ஆண் பெண் உறவுதான் என்ற ஞானம் பிறந்துவிட்டாலும், அதில் உடலுக்கும் உள்ளத்துக்கும் உள்ள சம்பந்தம் புரியவில்லை. அதைப்பற்றி அவள் தன் சொந்த அறிவைக் கொண்டு எவ்வளவுதான் கணக்குப் போட்டுப் பார்த்தாலும் திட்டவட்டமாகப் புரிந்து கொள்ளும் அளவுக்கு விடை கிடைக்கவில்லை.

ஒருநாள் காலை கமலா எழுந்திருக்கும்போது அவள் வீட்டில் நாலைந்து பெண்கள் கூடி நின்று குசுகுசுவென்று பேசிக் கொண்டிருந்தார்கள். கமலா அவர்கள் என்னதான் பேசுகிறார்கள் என்று காது கொடுத்துக் கேட்டாள். லலிதாவைப் பற்றித்தான் ஏதோ பேசிக் கொண்டிருந்தார்கள்.

லலிதாவின் பெயரைக் கேட்டதுமே கமலா துள்ளியெழுந்தாள்.

''லல்லுவுக்கு என்னம்மா?''

''அவள் அந்தத் துக்கிரிப்பயல் ராமுவோடு ஓடிப் போய்ட்டா.''

''ஓடிப் போய்ட்டாளா?''

கமலா திகைத்துப் போனாள். 'அவர்கள் இருவரும் ஏன் ஓட வேண்டும்? இங்கே இருப்பது அவர்களுக்குக் கஷ்டமாயிருந்ததா? ரகசியமாகக் காதலிப்பது சங்கடமாயிருந்ததா? அவர்கள் காதலிப்பது இங்குள்ளவர்களுக்குத் தெரியக்கூடாது என்று எண்ணினார்களா? ஓடிப்போனால் மட்டும் தெரியாமல் போய்விடுமா?'

என்ன இருந்தாலும் லலிதா ஓடிப்போய்விட்டாள் என்று எண்ணும்போது, அவள் ஏதோ தப்புச் செய்துவிட்டாள் என்றே கமலாவுக்குப் பட்டது.

மேலும், அங்குக் கூடியிருந்த பெண்கள் பேசிய பேச்சும் கமலாவுக்கு இந்த எண்ணத்தைத்தான் உண்டாக்கியது.

''இருந்திருந்து இப்படிச் செய்வாளா? அவங்க குடும்பக் கௌரவம் என்ன? அந்தஸ்து என்ன? அத்தனையையும் ஒரு நொடியிலே பாழாக்கிட்டாளே, பாவி!''

''அவளைச் சொல்லி என்ன குத்தம்? எல்லாம் வயசு படுத்துற பாடு. காலா காலத்திலே ஒரு கல்யாணத்தைப் பண்ணி வைக்காமே !''

''வேணுமின்னா, அந்த ராமுப் பயலுக்கே கட்டிக் கொடுத்திருக்கலாமே!''

''இல்லே. அவளுக்கு வயத்திலே மூணுமாசமாமே!''

''அது வேறயா!''

கமலா அவர்கள் பேச்சையெல்லாம் கூர்ந்து கேட்டாள். அதைக் கேட்டவுடன் அவளுக்கு லலிதா ஏன் ஓடிப்போனாள்

என்று புரிந்துவிட்டது. 'லலிதா வயிற்றில் மூன்று மாசம்'— அதற்காகத்தான் ஓடினுள். அதை எண்ணும்போது, அவளுக்குத் தான் முன்னொரு தடவை குப்பைத் தொட்டியில் பார்த்த அந்தக் குழந்தையும் அதன் தாயும் ஞாபகத்துக்கு வந்தார்கள், 'ஆம். லலிதா கலியாணமாவதற்கு முன்பே குழந்தை உண்டாகி விட்டாள். அதுதான் அவள் செய்த தப்பு. ராமுவுக்கே கலியாணம் செய்து கொடுத்திருந்தால், அதன்பின் அந்தக் குழந்தை வந்திருந்தால், அப்போது குற்றமில்லை, அப்படித் தானு?'

கமலா மனசில் என்னென்னவோ எண்ணியெண்ணி அலைக்கழிந்தாள். லலிதா ஓடிப் போனது கூடப் பெரிதில்லை, அதைத் தன்னிடம்கூடச் சொல்லாமல் போய்விட்டாளே என்றிருந்தது.

லலிதாவின் அம்மா வந்துகூடக் கேட்டாள்: ''கமலா லல்லு உன்னிடம் ஏதாவது சொன்னுளா?''

''இல்லையே'' என்ருள் கமலா.

லலிதாவையும் ராமுவையும் தேடிப் பிடிக்க ஆட்கள் புறப்பட்டார்கள்; போலீசிலும் எழுதி வைத்தார்கள். இதெல்லாம் எதற்காக?

'லலிதாவையும் ராமுவையும் ஏன் தேடவேண்டும்? போலீசில் ஏன் எழுத வேண்டும்? அவர்கள் என்ன, திருடினுர்களா? எதைத் திருடினுர்கள்? காதலையா? அப்படியானுல் காதலைத் திருடுவது தான் குற்றமா? திருடாமல் எப்படிப் பெறுவது? கல்யாணமான பிறகா?'

ஆனுல், இதையெல்லாம் யோசித்தும்கூட, அவளுக்கு அந்த உடலுக்கும் உள்ளத்துக்கும் சம்பந்தா சம்பந்தம் புரியவில்லை.

பிறகு எப்போதோ ஒரு நாள் அவள் அகலிகையின் கதையைப் படித்துக் கொண்டிருந்தபோதுதான் அவளுக்கு

அந்தப் பாகுபாடு புரிந்து கொண்டதாகப் பட்டது. அகலிகையிடம் இந்திரன் எதை விரும்பி வந்தான்? காதலையா? காதலைத் திருட வந்தானு? இல்லை. அவன் அவளை அணைத்துச் சுகம் காண வந்தான். அது காதலா? இல்லை. அகலிகையின் கணவர் கௌதமன் இந்திரனைச் சபிக்கும் போது சொன்னுரே: 'கேவலம், அவள் உடலின்மீது ஆசை கொண்டா, இந்தப் பாபத்தைச் செய்தாய்? உடலிச்சைக்குக் காதல் என்ற புனிதமான சொல்லைச் சொல்லாதே. காமவெறி பிடித்த கயவா!'

'அப்படியானுல், உடல்மீது மட்டும் ஆசை கொள்வது பாவம்; அந்தப் பாவத்துக்குப் பெயர் காமம். உள்ளத்தின்மீது மட்டும் ஆசை கொள்வது காதல்; அது புண்ணியம்—அப்படித் தானு?'

கமலாவுக்கு உடலுக்கும் உள்ளத்துக்குமுள்ள வேறுபாடு தெரிந்தது. என்ருலும், உடலும் உள்ளமும் தனித்தனியான பொருள்களல்ல என்ற ஞானம் அவளுக்கு உதிக்கவில்லை; பல காலமாக உதிக்கவில்லை.

## 4

—காதலிப்பது பாவமா?

லலிதா ராமுவோடு ஓடிப்போய் விட்டாள். அதைப்பற்றி ஊரில் எப்படியெல்லாமோ பேசிக் கொள்கிருர்கள். லலிதா ஏதோ செய்யக் கூடாததைச் செய்து விட்டாள். உலகம் தவறு என்று சொல்லும் பழிக்கு ஆளாகிவிட்டாள். அந்தப் பழிக்குக் காரணம், அவள் காதல். அவள் காதலித்தது பாவமா?

—காதலிப்பது புண்ணியமா?

ஆண்டாளின் காதலே, அந்தக் காதல் பாட்டைப் பள்ளிக் கூடத்திலே சொல்லிக் கொடுக்கிறார்கள். பாரதியின் கண்ணன் பாட்டை பரதநாட்டியம் பிடிக்கிறார்கள். சுகுமாரனின் கவிதையைப் பத்திரிகையில் வெளியிடுகிறார்கள். இந்தக் காதலைப்பாராட்டுகிறார்கள். அப்படியானால் காதலிப்பது புண்ணியமா?

உலகம் எந்தக் காதலே வெறுக்கிறதோ அதே காதலே போற்றியும் புகழுமா? இருக்காது. அப்படியானால், லலிதா வின் காதலுக்கும், பாடல்களிலுள்ள காதலுக்கும் என்ன வித்தியாசம்? பாவத்துக்கும் புண்ணியத்துக்கும் எல்லே வகுக்கும் அந்த வரம்பு எது?

கமலாவுக்கு அந்த விஷயம் அவ்வளவு லகுவில் விளங்கி விடவில்லே. என்றாலும் ஒன்று மட்டும் லேசாகப் புரிந்தது. லலிதாவின் காதலேப்பற்றி எண்ணும்போதெல்லாம் அவளுக்கு லலிதா காட்டிய அந்தப் புத்தகத்திலுள்ள 'அசிங்கமான' காட்சிகளே ஞாபகத்துக்கு வந்தன. ஆனால் பாரதியின் பாடலேப் பார்க்கும்போது, நாட்டியராணி மனோரமாவின் அழகிய தோற்றம், அந்த முக பாவம், ஒளி விளக்குகளின் ஜாஜ்வல்யம், ரசிகர்களின் ஆரவாரம், பாராட்டு எல்லாம் ஞாபகத்துக்கு வந்தன.

அப்படியானால், அழகு நிறைந்த காதல் புண்ணிய காரியம்; அசிங்கம் நிறைந்த காதல் பாவ காரியம். அப்படித் தானா? அப்படியானால், அந்த இரு வேறுபாடுகளுக்கும் எது எல்லே? அதுவும் அவளுக்குப் புரியவில்லே.

இப்படியெல்லாம் கமலாவின் மனம் அலேக்கழிந்தாலும், அவள் மனசில் காதலேப் பற்றிய எண்ணமும், காதல் உணர்ச்சி யும் எழத்தான் செய்தன. அந்த வயசு அப்படி. அவள் விரும்பி னாலும் விரும்பா விட்டாலும் அவளே மிஞ்சி மனம் தறி கெட்டுத் தாவும் பருவம். தனிமை உணர்ச்சி பெருகி, ஏதாவது ஒரு பிடிப்பைத் தேடித் திரியும் மனத்தை, அவள் எதிலாவது மூழ்கடித்தாலன்றி அவள் மனத்தின் குரங்

காட்டம் நிற்காது. எனவே அவள் வெள்ளத்தில் இழுத்துச் செல்லப்படும் மனிதனைப்போல் தவித்தாள். அந்த மனிதனுக்கு ஒரு சிறு குச்சி கிடைத்தால் கூட, அதைத் தாவிப் பிடிக்கத் தோன்றும். கமலாவும் அப்படித்தான் தவித்தாள். தன் உணர்ச்சிக்குப் புகலிடமாக எதிலேனும் சாந்தி தேட முனைந்தாள்.

அந்தச் சாந்தி அவளுக்குப் புத்தக ரூபமாகக் காட்சி அளித்தது.

அவள் தன்னை மறக்க எண்ணிப் புத்தகங்களை நாடினாள். எதையெதையோ படித்தாள். கவிதைகளில் அவள் மனம் பெரிதும் ஈடுபட்டது. ஆனால் அவள் படித்த அத்தனைப் புத்தகங்களிலும் அவளையறியாமல், அவளது உள்மனம் தன் புதிருக்குவிடை தேடிக்கொண்டிருந்தது. புத்தகங்களிலே காதற் கதைகளைப் படித்தாள்; காதற் கவிதைகளைப் படித்தாள்; சோம்பேறிப் புலவர்கள் சொப்பனமாகப் பாடிவைத்த காதல்உலகில் சஞ்சரித்தாள்.

அந்தக் கவிதைகளில்தான் என்ன சுகம்? கமலா அந்தச் சுகத்தை அனுபவித்தாள். வசந்தத்தின் கோலாகலம்; மலரினங்களின் சிரிப்பு; தலையைக் கிறக்கும் போதைமணம்; அந்தி நேரத்தின் செக்கர் வெள்ளம்; தாரகை மண்டலத்தின் கோலப் புள்ளி; சந்திரனின் பொன்னூஞ்சல்; மேகத்திரளின் மைக்கொழுப்பு; மின்னல் சரட்டின் ஒளி ஜாலம்; வெண் ஜரிகை இழைத்த சாகரம்; வான வில்லின் வர்ணஜாலம்; மாங்குயிலின் சோக கீதம்; சிற்றோடையின் களகளப்பு; நாணல் புல்லின் சங்கோஜம்—எத்தனை எத்தனை இன்பங்கள்! கற்பனைகள்!

காதல் இன்பத்தை மனோகரமான காட்சிகளாகக் கற்பனை பண்ணிப் பாடிய அந்தப் பாடல்களில் அவள் ஆனந்தம் கண்டாள். அதில் மயக்கம் கொண்டாள்.

—இந்த இயற்கையின் சௌந்தர்ய மெல்லாம் காதலுக்காகவே இருக்கின்றனவா? காதலியின் முகத்தைக் கண்டு, சந்திரன் ஏன் வாட வேண்டும்? முகத்தை ஏன் மேகத் திரையில் மறைக்க வேண்டும்? பூக்கள் காதலிக்காகவே மலர்கின்றனவா? அவள் சூடவில்லையே என்று வாடுகின்றனவா? தாரகை ஏன் அந்தக் காதல் உள்ளத்தைப் போலவே துடி துடிக்க வேண்டும்? கடல் ஏன் காதலியைக் காணாத காதலனைப் போல் பொரும வேண்டும்? தென்றல், சந்திரன், மலர்க் கூட்டம் எல்லாம் காதலர்களோடு ஏன் பேச வேண்டும்?......

கமலா யோசித்தாள். மனித உள்ளத்தின் பிரதிபலிப்புத் தான் கவிதை என்பதையே மறந்து விட்டாள். தான் இன்பம் கண்டால், இயற்கையும் தன்னோடு சேர்ந்து இன்புறுவதாகவும், தான் துன்புறும்போது இயற்கையும் தன்னோடு துன்புற்றுக் கண்ணீர் வடிப்பதாகவும் மன மயக்கம் கொள்ளும் கற்பனைகளையெல்லாம் உண்மையென்றே கருதி மயங்கினாள்; ஆனால், இதற்கெல்லாம் காரணம் தன் மனசின் தனிமை உணர்ச்சிதான் என்று அவள் அறிந்துகொள்ளவில்லை. தனிமையிலே வாடும் தனக்காகப் பரிந்து பேச, ஆறுதல் சொல்ல, துணை நிற்க ஒரு மனிதராசி அகப்படாத காரணத்தால், அவள் இயற்கைதான் தன் சுக துக்கங்களோடு பங்கெடுக்கிறது என்று கருதி விட்டாள். இந்த உணர்ச்சிக்கு எப்படி ஆளானோம் என்பது அவளுக்குத் தெரியாது. அது ஒரு போதை மயக்கம்; புகலிடம்.

அவள் தன்னைத்தானே இயற்கையோடு கரைத்துவிட முயன்றாலும் அவளது உள் மனம் காதலைப்பற்றிய தன் பிரச்னையைக் கைவிட்டு விடவில்லை.

—'கவிஞர்களும், கதாசிரியர்களும் போற்றிப் புகழும் இந்தக் காதல் எது? இந்தக் கவிதைகளில் லலிதா காட்டிய அந்தக் காட்சிகளைப்பற்றியே பேச்சில்லையே. இவற்றிலெல்லாம் மனத்தின் பரிதவிப்பை, அதன் ஆசையை, அதன் கற்பனையைத்தானே மகத்தானதாகக் கூறுகிறார்கள்? ஒட்டும்

இரண்டு உளத்தின் தட்டைப் பற்றித்தானே பேசுகிறார்கள்? உள்ளங்கள் ஆத்மசங்கமம் பண்ணுவதைத்தானே காதல் என்கிறார்கள். அதைத்தானே லட்சியக் காதல், புனிதக் காதல், தெய்வீகக் காதல் என்றெல்லாம் பாடுகிறார்கள். அப்படியானால், மனசால் காதலிப்பது மட்டுமே லட்சியக் காதலா? அதுதான் உண்மைக் காதலா?

அவள் மனம் உடலைப் பற்றியும் சிந்தித்தது. அந்தக் கவி களிலும், கதைகளிலும் உடலாசையைப் பற்றிச் சொல்லப் பட்ட விவரங்களையும் அலசிப் பார்த்தது.

—காதல் என்பது மனத்தினால் மட்டும் ஏற்படாது. உடலாலும் ஏற்படும். ஆனால், கேவலம் அழிந்து சாகும், உரு மாறும் இந்த ஊத்தைச் சடலத்தின்மீதா ஆசை வைப்பது? அழியாத ஆன்மாக்கள் பவித்திரத்தோடு புனிதத்தோடு அத்வைதமாக ஒன்றோடொன்று கலந்து முயங்கி உருத் தேய்ந்து போகும் இன்பம் உடலில் இருக்கிறதா? என்ன இருந் தாலும், உடல் ஒரு ஜடம். ஆன்மா இல்லையேல், அதற்கு ஆசை எது? நடமாட்டம் ஏது? உடல் மூலமாகப் பெறும் ஒரு கணச் சுகத்தைவிட, உள்ளத்தின் மூலமாக நிரந்தரமான, அழியாத பேரின்பத்தைப் பெறலாமே. அதுதான் உண்மை யான காதல்; உடல் ஆசை மெய்க்காதல் அல்ல; அது காதலே அல்ல; காமம்! வெறும் மிருக இச்சை!......

காமத்தையும் மிருக இச்சையையும் பற்றி அவள் நினைத்த போது அவளுக்கு அந்த இலக்கிய கர்த்தாக்கள் சிருஷ்டித்த கதைகளும் ஞாபகத்துக்கு வந்தன. எத்தனைக் கதைகள்!......

ராவணன் சீதைமேல் காமம் கொண்டான்; அதனால் அழிவுற்றான். சூர்ப்பணகை ராமன்மேல் ஆசை கொண்டாள்; அதனால் மூக்கறுப்பட்டாள். கீசகன் சைரந்திரிமீது இச்சை வைத்தான்; பீமன் கையால் அறைபட்டு மாய்ந்தான்!......

இதற்கெல்லாம் காரணம்: காமம்! இந்தக் காமத்தை, அதாவது உடலிச்சையை மட்டும் கொண்டவர்கள் அழிவைத் தான் அடைந்தார்கள். அதாவது, பாவத்தைச் செய்து,

அதன் பழியைச் சுமந்தார்கள். எனவே, இந்தக் காதல் பாவம்! லலிதா இந்தப் பாவத்தைத்தான் செய்து விட்டாளா?.....

ஆனல், இதோ இவர்கள்—

| | | |
|---|---|---|
| ராமன் | : | சீதை |
| துஷ்யந்தன் | : | சகுந்தலை |
| ரோமியோ | : | ஜூலியத் |
| காயிஸ் | : | லைலா |
| சந்திராபீடன் | : | காதம்பரீ |
| பரந்தாமன் | : | ஆண்டாள் |

—இவர்களது காதலைப் பற்றிப் படிக்கும்போது எவ்வளவு குதூகலம் உண்டாகிறது! எத்தனை அழகு இருக்கிறது! இந்தக் காதலில் எள்ளளவேனும் பவித்திரத் தன்மை குறைபடுகிறதா? காமவெறி இருக்கிறதா? அப்படியானல், இதுதான் லட்சியக் காதல்; இதுதான் உண்மைக் காதல்! அப்படித்தானு?......

—இந்தக் காதல் வாழ்க்கையில் எல்லாம் ஆத்மக் கலப்புத் தானே இருக்கிறது? அதனுல்தான் அந்தக் காதலர்கள் இன்று வரை போற்றப்படுகிறுர்களா? மரணத்தின்போதுகூட அவர்கள் இணைபிரியாமல் இருந்திருக்கிறுர்களே. இந்த ஆத்மக் கலப்புக்கு என்ன பெயர்?...

ஆண்டாள் ஜீவாத்மா—பரந்தாமன் பரமாத்மா.

—ஜீவாத்மா கலக்க விரும்பும் பரமாத்மாதான் காதல் லட்சியமா? அப்படியானல் என் ஜீவனைக் கலக்க வரும் அந்தப் பரந்தாமன் யார்?......

கமலா தான் விழுந்து விழுந்து படித்த புத்தகங்களின் மூலம் இப்படியெல்லாம் யோசித்தாள். கவிகளும், கதைகளும் அவளுக்கு இதைத்தான் போதித்தன—இல்லை—அவள் அவற்றை இப்படித்தான் புரிந்து கொண்டாள்.

உடல் வேறு, உள்ளம் வேறு என்று அவள் துண்டு படுத்திப்பார்த்தாள். உடற் காதல் பாவம்; உள்ளத்தின் காதல் பவித்திரம்! உடற் காதல் அசிங்கம்: உள்ளத்தின் காதல் அழகு!—என்று பாகுபடுத்திப் பார்த்தாள்.

அதில்தான் அவள் தவறிவிட்டாள்.

—உண்மையில் உடல் வேறு. உள்ளம் வேரு? உடலில்லாமல் உள்ளம் எங்கிருந்து வந்தது? உடல் அழிந்தால், உள்ளம் அழியாதா? அப்படி அழியாத உள்ளத்தின் உருவம் எது? அது உருவிலியா? உண்மையில் அப்படி ஒன்று இருக்கிறதா?

இந்தத் தத்துவ சர்ச்சையில் அவள் இறங்கவில்லை. இறங்காதது மட்டும் அல்ல. உண்மைத் தத்துவத்தை உணரவும் தவறி விட்டாள்.

—உடலும் உள்ளமும் வேருனல், உடலின் துன்பம் உள்ளத்தை வருத்துவானேன்? உள்ளத்தின் துன்பம் உடலையும் பாதிப்பானேன்? காதல் ஏற்பட்டால், தென்றல் வீசினல், பூ மலர்ந்தால், உடல் கருகுவானேன்? உள்ளத்தின் துன்பத்துக்கு, உடல் கண்ணீர் விடுவானேன்? ஆத்மாவைக் காதலிப்பதானல், ரோமியோ ஏன் சுவரேறிக் குதித்து ஜூலியத்தைப் பார்க்கச் செல்லவேண்டும்? காயிஸ் ஏன் லைலாவைக் காணுது, பாலை மணற்பரப்பில் வேகவேண்டும்? ஆண்டாள் ஏன் பரந்தாமனின் செவ்வாய்க்கு உருகவேண்டும்?

—அப்படியானல், உடலுக்கும் உள்ளத்துக்கும் சம்பந்தம் இருக்கிறது. பிரிவு நேரும்போது காதலர்கள் ஒன்ருக உயிர் நீப்பதுபோல், உடல் சாகும்போது உள்ளமும் செத்து விடுகிறது. துன்பத்திலும் இன்பத்திலும் காதலர் ஒருவருக்கொருவர் பங்கு கொள்வதுபோல் உடலும் உள்ளமும் பங்கு கொள்கின்றன. உள்ளத்தின் காதல் கை கூடினல், உடலுக்குத் தென்றலும் நிலவும் தேனகின்றன; கூடாவிட்டால் தீயாகின்றன.

—எனவே, உடலும் உள்ளமுமே ஒருவருக்கொருவர் காதலர்களா? ஜீவாத்மாவும் பரமாத்மாவும் நம்முள்ளேயே இருக்கின்றனவா? லட்சியக் காதலர்களைப் போல், இவற்றை யும் பிரிக்க முடியாதா?

—முடியாது!

இந்த உண்மையைக் கமலா உணர்ந்து கொள்ளவே இல்லை. 'காதல் என்பது கேவலம் மிருக இச்சையும் அல்ல; அர்த்த மற்ற சொப்பனமும் அல்ல; உடலும் மனமும் ஒன்ருகி, துணை தேடும் முயற்சி; பருவத்தின் தன்மை; இயற்கையின் நியதி' என்ற உண்மை அவளுக்குப் புலப்படவில்லை. எனவே அவள் தான் கருதும் காதல்களுக்கு மேலாக, மூன்ருவது காதல் ஒன்றிருக்கிறது என்று எண்ணவில்லை.

கமலா காதல் என்ருல் இன்னதென்று முடிவு கட்டிக் கொண்டாள். 'நான் விரும்புவது லலிதாவின் காதல் அல்ல; ஆண்டாளின் காதல், ஜூலியத்தின் காதல், காதம்பரியின் காதல் . ' என்று அவள் முடிவு கட்டினுள்.

—'அப்படியானுல், என் காதலை ஏற்கத் தயாரா யிருக்கும் அந்தக் காவிய நாயகன் யார்?'

கமலாவின் மனத்தில் அந்தக் 'காவிய நாயகனை' கற்பனை பண்ணிக்கூடப் பார்க்க முடியவில்லை. உடலைத்தானே அவள் கற்பனை பண்ணலாம். அவள் எண்ணி யெண்ணிப் பார்க்கும் போதெல்லாம் அழகான ஒரு யுவன்தான் தோன்றுவதாகப் பட்டது. அவன் ஏன் யுவனுகத் தோன்றவேண்டும்? அழ காகத் தோன்றவேண்டும்?

அதைப்பற்றி அவள் சிந்திக்கவில்லை.

5

"பாலுவுக்கு இந்த வருஷத்தோடே படிப்பு முடியுது."

"அப்படியா? கமலீக்கும் இனிமே இந்தப் பள்ளிக்கூடத்திலே படிப்பில்லெ."

"மேலே படிக்கப் போறுளா என்ன?"

"மேலே படிப்பு என்ன? படிச்சுப் படிச்சு உடம்பைக் கெடுத்துக்கிட்டதுதான் கண்ட பலன்."

"அவள் என்ன சொல்ரு?"

"அவளுக்கு இன்னும் என்னென்னமோ படிக்கணுமாம். மேல்படிப்புக்குப் போகணும்னுதான் சொல்லிக்கிட்டிருக்கா."

"இல்லே. பாலுவுக்கும் இந்த வருஷம் கழிஞ்சா, ரெட்டிப்பு வயசு. அதுதான் அண்ணுவிடமும், உங்களிடமும் இந்தத் தடவை ஒரு வார்த்தை கேட்டுட்டுப் போகலாம்னு நினேச்சேன்."

"கேட்கிறதாவது? கமலு உங்க பொண்ணு, உங்கள் இஷ்டம்போலே எல்லாம் நடக்கவேண்டியதுதானே."

"இருந்தாலும் முறை இருக்கில்லா."

"பாலுவுக்கு ஏத்தவள்தான் கமலீ. நாம் நினேக்கிறபடி நடந்துட்டா, நமக்கும் திருப்தி."

"இருந்தாலும் அந்தப் புள்ளேகளிடமும் ஒரு வார்த்தை கேட்க வேண்டாமா?"

"இதென்ன கேள்வி? ரெண்டும் சின்னஞ் சிறுசுகளிலிருந்தே ஒண்ணு விளேயாடினது. கேட்பானேன்?"

"இந்தக் காலத்துப் புள்ளேங்க, நாமெ நினேக்கிறபடியா இருக்கு?"

ஊரிலிருந்து இந்தத் தடவை அத்தை வரும்போது பாலுவும்தான் கூட வந்திருந்தான். அவனும் வந்ததிலிருந்து மாடியை விட்டு இறங்கவே காணும். புது மாப்பிள்ளையாகப் போகிறோம் என்ற நினைப்போ என்னவோ? இல்லையெனில், கமலா கீழே இருக்கிறாள் என்ற நினைப்போ?

கமலா புத்தகத்தை மூடி வைத்துவிட்டு, அத்தையும் அம்மாவும் பேசிக்கொண்டதைக் காது கொடுத்துக் கேட்டுக் கொண்டாள். பாலு வந்ததிலிருந்து அவளும் தன் அறையை விட்டு அவ்வளவாக வெளி வருவதில்லை. ஏன் என்று அவளுக்குத் தெரியவில்லை. என்னவோ பாலு இருக்கும் வீட்டுக்குள் அவளால் கூச்சமில்லாமல் நடந்து திரிய முடிய வில்லை. இந்த வெட்க உணர்ச்சி ஏற்படுவானேன்? இந்தத் தடவை பாலுவை அவள் வாவென்றுகூடக் கேட்கவில்லை. அம்மாவும் அதைப் பற்றி ஒன்றும் சொல்லவில்லை. வயசு வந்த பின்னர் எப்படியெல்லாம் நடந்து கொள்ளவேண்டும் என்று சூழ்நிலையும் பருவமும் அவளுக்குச் சொல்லிக் கொடுத் திருந்தன.

புத்தகத்தை மூடிவைத்த கமலா அந்த நிமிஷம் முதற் கொண்டு கண்களை மூடி கனவு காண ஆரம்பித்தாள். அவள் மனசில் உருத்தெரியாமல் மங்கிப் புகை மண்டலமாயிருந்த லட்சிய உருவம் பாலுவை மாதிரித் தெளிவடைவதாக ஒரு கற்பனை. பாலு சிரிக்கிறான்; கமலாவும் சிரிக்கிறாள். மறுகணம் தலையைக் கவிழ்ந்து கொள்கிறாள். சகுந்தலை துஷ்யந்தனைப் பார்த்த அந்தப் பார்வை அவளுக்கு ஞாபகம் வருகிறது. ஓடி விடுகிறாள் ........

கமலாவுக்கு மனம் உற்சாகமாயிருந்தது. தன் மனசில் உருவம் தெரியாமலிருந்த காதலன் உருக் காட்டுவ தென்றால்—? அப்படியானால், பாலுதான் என் காதலனா?

கமலாவுக்கு அன்று முழுதுமே பாலுவைப் பற்றிய நினைப்புத் தான். மாலை நேரம் ஆக ஆக, அவளுக்கு அந்த நினைப்புப் பெருகியது. பாலுவைப் பார்க்க வேண்டும்

போலிருந்தது. இந்த நினைப்பு ஏன்? பாலுவின் கண்ணில் படக்கூடாது என்றுதானே அவள் அறையிலேயே அடை பட்டுக் கிடக்கிருள்? திடீரென்று இந்த எண்ணம் ஏன்? அவன் தான் தன் காதலனு என்ற எண்ணம் எழுந்தவுடனேயே வெட்கம் பறந்தோடி விட்டதா? உரிமை கொண்டாட ஆரம்பித்து விட்டாளா?

ஆனல், அன்று அவள் பாலுவைப் பார்க்கவில்லை. இரவு தான் அவளுக்குப் பெரும் வாதையாயிருந்தது. தூக்கமே பிடிக்கவில்லை. மனசில் என்னென்னவோ அசட்டுக் கற்பனை களையெல்லாம் பண்ணிக்கொண்டு அலைக்கழிந்தாள் கமலா. பொழுது எப்போதடா விடியும் என்றிருந்தது. இருந்தாலும், இருளோடு இருளாய்க் கிடப்பதிலும் ஒரு ஆனந்தம் இருந்தது. இந்த இன்ப வேதனை ஏன்? ஜன்னல் கதவை ஏன் மூடினுள்? வாடை தாங்கவில்லையா?......

பொழுது வழக்கம்போல் விடிந்தது.

கமலாவுக்கு அன்று எப்படியும் பாலுவை ரகசியமாக வாவது பார்த்து விடவேண்டும் என்று ஆசை. அப்பா வெளியே போன பின்பு, மாடியில் போய் ஏதோ புத்தகம் எடுக்கப் போகும் பாவனையில் சென்று, பாலுவுக்குத் தெரியாமல் அவனைப் பார்க்க எண்ணினுள்.

மாடிப்படியில் பூனைபோல் மெதுவாக நடந்தேறினுள். தான் வருவது அவனுக்குத் தெரிந்து விடக்கூடாது என்று பயம். இவ்வளவு பயந்துகொண்டு அவள் மாடிக்குப் போவானேன்? அதைப் பற்றி அவள் கவலை கொள்ளவில்லை. மாடிப் படிகளை ஏறி வராந்தாவுக்குச் சென்றதும், அவளுக்குக் கால்கள் குளிர்ந்து விட்டன.

"யாரது?"

கமலா பயந்தே போனுள். அது பாலுவின் குரல். அவனுக்கு எப்படித் தெரிந்தது? நடந்த சப்தம் கேட்டதோ? வளையல் குலுங்கிற்றோ?

கமலா கீழே திரும்பி விடலாம் என நினைத்தாள். ஆனால் பாலுவே அதற்குள் வராந்தாவுக்கு வந்து விட்டான். பாலுவைக் கண்டதும், கமலாவுக்கு உடம்பு குளிர்ந்து போயிற்று. மரமாய் நின்றாள்; அசையவில்லை.

''கமலீயா, வாம்மா வா'' என்று கேலியாகக் கூப்பிட்டான் பாலு.

கமலாவுக்கு வாயடைத்துப் போயிற்று.

''எங்கே வந்தே?''

''பூ...பூ...பூ...''

''என்ன பூப்பூப்பூ! பூப் பறிக்க வந்தயா?''

''இல்லெ, புஸ்தகம்!''

''நல்ல வேளை. எங்கே மாடிமேலேகூட பூப்பூக்கிறதோன்னு நினைச்சேன்!''

பாலு கடகட வென்று சிரித்தான்.

கமலாவுக்கு அதற்குமேல் நிற்கமுடியவில்லை. கீழே விழுந்து விடுவோமோ என்றிருந்தது. எப்படியோ சுதாரித்துக் கொண்டு கீழே ஓட எத்தனித்தாள். ஆனால் அவள் முதுகு திரும்புவதற்குள்ளாக, பாலு அவள் கையை எட்டிப் பிடித்தான்.

''எங்கே ஓடுறே?''

''ஐயோ! கையை விடுண்ணா.''

''ஓடலேன்னு சொல்லு, விட்டுருறேன்!''

மௌனம்.

''ம். சொல்லு!''

''ஓடலே'' என்று வாய்க்குள்ளாக முனகினாள் கமலா. பாலு கையை விடுவித்தான்.

''சரி, உள்ளே வாயேன்!'

கமலா பெரு விரலால் தரையைக் கீறினுள். பதில் பேச வில்லை.

''வர்ரயா? கையைப் பிடிக்கட்டுமா?''

பாலு சிரித்தான்.

கமலா ஒன்றும் பேசாமல் மாடிக்குள் சென்ருள். பிறகு தைரியத்தை வரவழைத்துக்கொண்டு பேசத் துணிந்தாள்.

''நான் வரேன்.''

''அதற்குள்ளாகவா?''

பாலு அவளைப் போகவிடவில்லை.

''என்னைப் பார்க்கணும்னுதானே வந்தே.''

''இல்லெ.''

''பொய் சொல்லாதே.''

கமலா அதையும் எதிர்த்துப் பேசவில்லை.

பாலு கமலாவையே வெறித்துப் பார்த்தான். பயத்தால் சிவந்து கனிந்து குறு வியர்வை அரும்பிய அவள் முகத்தைப் பார்த்தான்: மாதுளம்பூச் சிவப்பைப் போல் துடிக்கும் உதடுகள், மூடி மூடிப் படபடக்கும் கண்ணிமைகள், அந்தக் கண்கள், தங்கப் பிறையில் கெம்பு பதித்ததுபோல் விளங்கும் அந்த நெற்றி, அதன் திலகம், சிலையின் லாகவத்தோடு குழைந்து குனிந்து நிற்கும் அவள் திருக்கோலம், கண்ணையும் கருத்தையும் பம்பரமாய் ஆட்டி வைக்கும் அவளது எடுப்பும் மிடுக்கும் நிறைந்த பருவ எழில், அதன் பெருமிதம், ஏறியிறங்கிப் பெருமூச்செறியும் விம்மிய மார்பகம்........

பாலுவால் வைத்த கண்ணை வாங்கவே முடியவில்லை. அவன் முகம் சிவந்தது. கண்கள் துடித்தன. பெருமூச்சு வந்தது.

''கமலீ!''

அவன் தொண்டை கரகரத்தது. குரல் உடைந்து கீறல் விழுந்த வெண்கலத்தோசை போலக் கேட்டது.

மறுகணம் அவன் கமலாவின் இடையில் கை கொடுத்து இழுத்து அணைத்தான்; துடிதுடிக்கும் அந்த மாதுளை அதரத்தில் ஈரம் பரிமாறிவிட்டான்.

எல்லாம் ஒரு கண நேரத்துக்குள் நடந்த தடுமாற்றங்கள். கமலா இதை எதிர்பார்க்கவே இல்லை. திடுக்கிட்டுப் போனாள். அவளையும் அறியாமல் அவள் கை பாலுவின் கன்னத்தில் ஓங்கி அறைந்தது! அடைத்துக் கிடந்த வாயும் வெடித்தது!

''சீ!''

கமலா பாலுவை நெட்டித் தள்ளினாள். பாலு கால்கள் தடுமாறி விலகினான்.

''என்ன, சீ! நான் என்ன நாயா?''

''ஆமாம். வெறும் நாயல்ல; வெறி நாய்!''

மறுகணம் கமலா அங்கு நிற்கவில்லை. கீழே ஓடிவந்து விட்டாள். பாலு அவளைத் தடுக்கவில்லை; அவனும் இதை எதிர்பார்க்கவில்லை. திகைத்துப் போனான்; அயர்ந்து போய் உட்கார்ந்து விட்டான்.

கமலாவுக்கு ஏன்தான் மாடிக்குப் போனோம் என்றிருந்தது. போகாவிட்டால் இம்மாதிரி நடந்திருக்குமா? பாலு ஏன் இப்படி நடந்துகொண்டான்?.........

வேப்பம் பழத்தில் முதலில் இனிப்புத் தட்டத்தான் செய்யும்; ஆனால், அதன் குமட்டுக் கசப்பு தொண்டைக்குழியில் காறிக் கொண்டே இருக்கும். கமலா பாலுவிடம் பெற்ற அனுபவம் அப்படித்தானிருந்தது. அந்த ஒரு கணப் பரவசத்தில் இனிப்பு இருக்கத்தான் செய்தது. எனினும் அது அவளுக்கு உறைக்கவில்லை; நினைவும் இல்லை. ஆனால் அந்தக் கசப்பு—

கமலா அதை நினைத்து நினைத்து மனம் குமட்டினாள்: 'பாலுவைப் பற்றி என்னவெல்லாம் நினைத்தேன்? இப்படியா நடந்து கொள்வான்? அன்பாக, அழகாக ஒரு வார்த்தை சொன்னானா? அவனும் என்னிடம் உடலிச்சையைத்தானா விரும்பினான்? என் இதயத்தையே இழந்துவிட்டு அவன் முன் நின்றேனே. இதுவா பலன்? தெய்வம் பக்தனுக்கு அருள் செய்ய வேண்டும்; அவனையே பலி கேட்டால்—?'

'பாலு என் உடம்பைப் பலி கேட்டானா? அவனும் காமியா? வெறும் சதையாசைதானா அவனுக்கு? என் உடம்பைப் பலி கேட்டு, கடைசியில் ஏன் காதலைத்தான் பலி வாங்கிவிட்டான்!'

'பலி! பலி!'

கமலாவின் மனசில் நிலைத்திருந்த அந்தத் திவ்ய மூர்த்தம் மறைய ஆரம்பித்தது; அவள் மனத்தில் மீண்டும் தெளிவற்ற புகை மண்டலம் திரி திரித்தது.

மறுநாள் அவள் அம்மாவும், அத்தையும் முற்றத்தில் பேசிக்கொண்டிருந்தார்கள். கல்யாணப் பேச்சுத்தான். கமலா தன் அறையிலிருந்து அதைக் கேட்டாள். அவளால் தாங்க முடியவில்லை. விறுவிறென்று எழுந்து சென்று நடைவாசலில் நின்றுகொண்டாள்.

''இந்தா அம்மா. நான் ஒண்ணும் பாலுவைக் கட்டிக்கப் போறதில்லை!'' என்று சத்தமிட்டாள்.

''ஏண்டி, இதென்ன கெடுபுத்தி?'' என்றாள் அம்மா.

''அப்படித்தான்!''

கமலா மறுகணம் அறைக்குத் திரும்பி, கதவைத் தாளிட்டுக்கொண்டாள். அவளுக்கு அழுகை அழுகையாய் வந்தது. வாய்விட்டு அழாமல், கண்ணீரை வடித்துக் கொட்டினாள்.

மாலையில் அத்தை அம்மாவிடம் சொன்னாள்: ''இதென்னமோ தெரியலே, பாலுவும் இப்படித்தான் பேசறான்!'' என்றாள். அத்தையின் குரல் மங்கியிருந்தது; எனினும் இதனைக் கமலா கேட்டுக்கொண்டாள்.

அம்மா பதில் பேசவில்லை.

அந்தச் சம்பந்திமார் இருவர் ஆசையும் குலைந்து போயிற்று; கமலா நிம்மதியாய்ப் பெருமூச்சு விட்டாள்; கண்ணீரும் வற்றிப் போயிற்று.

## 6

அந்த வருஷம் கோடை மிகவும் மோசமாயிருந்தது. கமலாவுக்குப் பள்ளிக்கூடம் அடைத்தாயிற்று; கமலாவின் அப்பாவுக்கும் கோர்ட்டு திறக்கும் வரை வேலை கிடையாது. இந்த வெயிலுக்குப் பயந்து எங்கே ஓடுவது?

''இந்த வருஷம் குற்றாலம் போனால் என்ன?''

''அங்கும் வெயில்தானே. வேண்டுமின்னா கொடைக்கானல் போவோமே'' என்றாள் கமலாவின் அம்மா.

''அப்பா! நான் ஊட்டி பார்த்ததே இல்லை'' என்றான் கமலாவின் தம்பி.

அப்பா பார்த்தார், கமலா ஒருத்திதான் அபிப்பிராயம் சொல்லவில்லை; அவளையும் கேட்டு விட்டார்:

''என்ன கமலீ, நீயேன் சும்மா இருக்கிறாய்? நீ எங்கே போகவேண்டும்?''

கமலா பதில் சொல்லவே தயங்கவில்லை.

''எங்கேயாவது போனாத் தேவலை. இங்கே இருந்து புழுங்க முடியாது.''

கமலா உண்மையைத்தான் சொன்னுள். பள்ளிக்கூடம் இருக்கும் வரையிலும் பரீட்சை, பாடம் என்று தன்னை அதில் மூழ்கடித்துக்கொண்டாள். பரீட்சை முடிந்ததும், அவளுக்கு ஒரு இடத்தில் மனமும் உடலும் இருப்புக்கொள்ளாமல் தவித்தது. துணைக்கு ஆளே இல்லை. அக்கா புருஷன் வீடு போய் விட்டாள். லலிதா போன இடமே தெரியவில்லை. அவளுக்கு வீட்டுக்குள் அடைந்து கிடப்பது கஷ்டமாக இருந்தது. வீட்டிலிருந்தால் ஏதாவது படிக்கலாம் என்ருலோ, அம்மா வீட்டு வேலைக்கு முன்னூறு தடவை கூப்பிட்டு விடுகிருள். என்ன பண்ணுவது? 'ஏன்தான் பெண்ணுய்ப் பிறந்தோம்' என்றிருந்தது அவளுக்கு. மேலும் பாலுவின் கல்யாண விஷயமாய், அம்மா அடிக்கடி முகம் முறித்துப் பேசிக்கொண்டிருந்தாள். பாலுவை அவள் மறக்க எண்ணினுலும், அம்மா தினம் தினம் அந்தக் கெட்ட சம்பவத்தை நினைவூட்டிக் கொண்டே இருந்தாள்.

'பாலுவாம், பாலு! எனக்குக் காதம்பரீக்கு வாய்த்த தைப்போல், ஒரு சந்திரா பீடன் வரவேண்டும்; மகா கவேதைக்குக் கிடைத்த புண்டரீகன் அல்ல!'

கமலா பாலுவைக் காமம் தலைக்கேறிய பித்தனுகவே கருதினுள். அவள் விரும்பியது அசுரவெறி பிடித்த உடல் இச்சையல்ல; ஊது பத்திச் சுகந்தம் போல் இழையும் மென்மைப் பாசம்.

எனவேதான் அவள் தன் இதயத்தின் சூன்யத்தைத் தவிர்க்க முடியாமல் புழுங்கிக்கொண்டிருந்தாள்.

கடைசியில் அவர்கள் யாவரும் அந்த வாரம் குற்ருலத்துக்கே பயணமாயினர்.

குற்ருல வாழ்க்கை கமலாவுக்கு மனசுக்குக் குளுமையும் அமைதியையும் தந்தது. எங்கு பார்த்தாலும் காட்டுப் பூக்களின் மணவெறி; வித விதமான வண்டுகளின் ரீங்காரம்; பல வர்ணக் கோலத்தோடு பறந்து செல்லும் வண்ணுத்திப்

பூச்சி; காட்டுப் பறவைகளின் ஏக்கக்குரல்; தூங்கும் மாம்பழக் கொத்துக்கள்; எங்கு பார்த்தாலும் சிறு பரல்கள்மீது சிரித்துக் களகளக்கும் சிற்றோடைகள்; இளங்குமரி தலையை அவிழ்த்து உலவவிட்டது போல் தொங்கும் அலங்கார ஈச்சங் குலைகள்; மின்னலைச் சிக்கெடுத்து ஒன்று சேர்த்து ஒழுக விட்டது போல் விழும் வற்றிய வெள்ளருவி; பலாப்பழ வாடை சுமந்து வரும் பூங்காற்று; மஞ்சு தோய்ந்த மலை முடி—

கமலாவின் கற்பனை உள்ளத்துக்குக் குற்றாலத்தின் இயற்கைக் கொழுமையெல்லாம் வரப்பிரசாதமாகப் பட்டது. தினம் இரண்டு மூன்று தடவை அருவியில் உடல் குளிரக் குளிப்பாள். இரவில் நிலா அடித்தால், அருவிக் கரைத்தேக்கத் தில் அமர்ந்து, மலையிலிருந்து பொங்கி விழும் அருவியைக் கண்டு ஆனந்திப்பாள். கால்களைத் தண்ணீரில் விட்டுக் கொண்டு அளைவாள். மாலை நேரங்களில் அடிவாரத் தேக்கங் காடுகளிலாவது, செண்பக அடவிக்குச் செல்லும் பாதை யிலாவது காலாற நடந்து செல்வாள். ஏதாவது ஒரு பாறை மீது படுத்து வானைப் பார்ப்பாள்; பூக்களைப் பார்ப்பாள்; தூரத்தில் தெரியும் கிராமங்களை, தென்னஞ்சோலையைப் பார்ப்பாள்.

பொழுது ஆனந்தமாகக் கழிந்தது.

ஒரு நாள்—

மாலை மஞ்சள் வெயில் மலைப் பாறைகளையெல்லாம் தாமிரக் குன்றுகளாக மாற்றிக் கொண்டிருந்த சமயம். வெயில் தணிந்து, மலைக்காற்றில் அருவியின் வாடை கலந்து வீசிற்று. பறவைகள் ஆரவத்தைப் பற்றிக் கவலையின்றி மேலும் கீழும் பறந்து கீச்சிட்டன.

கமலா செண்பக அடவிக்குச் செல்லும் சிற்றருவிப் பாதையில் சென்று, அருவிக்கு மேலாக உள்ள ஒரு சமதளத் தில் உட்கார்ந்து கொண்டிருந்தாள். அவள் மனசில் தனிமை

உணர்ச்சி பெருகியது; என்றாலும் வதை செய்யவில்லை. இயற்கையின் மோஹனத்தில் மனத்தை லயிக்கவிட்டாள். அந்த இங்கித சுகத்தில், அவள் மனசில் காதல் சுரந்தது; 'இந்தக் காட்சிகள் எனக்காகத்தான் இருக்கின்றன. ஆனால், நான் இதை மட்டும் அனுபவித்தால் போதுமா? நானும், பக்கத்தில்—'

'அந்த இடத்தை எந்தப் பெயரால் நிரப்புவது?'

அதை நினைத்த அவள் உள்ளம் எதையோ இழந்து விட்டதுபோல் தவித்தது.

—இந்தச் சங்கடத்திலிருந்து எப்படித் தப்பிப்பது? மனசின் தனிமையை எங்கு சொல்வது? யாரிடம் சொல்வது? கதைகளில் வரும் காதலிகளைப் போல், இந்தப் பூவிடமா? பறவையிடமா? அருவியிடமா?...

அவள் தன் கவலையைத் தானே வாய்விட்டுச் சொல்லி ஆற்ற நினைத்தாள். இதயத்தின் சோகத்தைப் பாட நினைத்தாள். எதைப்பாட?...

சுற்றும் பாழ் வெளியாய்த்
தோற்றமிலாச் சூனியத்தில்

அவள் அந்தப் பாட்டைப் பாடிப் பார்த்தாள் :

சுற்றும் பாழ் வெளியாய்த்
தோற்றமிலாச் சூனியத்தில்
பற்றிப் படர வெணும்
பகற்கனவு மனக்கொடிதான்...

அவள் அதற்குமேல் பாட முடியவில்லை. அதற்கு மேலுள்ள வரிகள் ஞாபகத்துக்கே வரவில்லை. திருப்பித்திருப்பி முதலடிகளையே பாடிக்கொண்டிருந்தாள்.

அப்போது ஒரு மதுரமான குரல் கேட்டது:

வற்றி நினை வழிய
வாடி உணர்வொழிய
மற்று மொரு வழியின்றி
மயங்கி நிற்கும் என்துயரம்!

'யார் பாடியது? எனக்குத் தெரிந்த பாட்டை யார் பாடுவது?' கமலா எழுந்து பார்த்தாள்.

சிற்றருவிக் கரையேறி ஒரு இளம் வாலிபன் வந்து கொண்டிருந்தான். அவனைக் கண்டதும் கமலாவுக்கு உடம்பில் பழைய குளிர்ச்சி ஏற்பட்டது.

அவன் அவள் பக்கமே வந்து விட்டான்.

''நீங்கள்தான் பாடினீர்களா?'' என்று கேட்டாள் கமலா.

''ஆமாம்.''

''அந்தப் பாட்டு உங்களுக்கும் தெரியுமா?''

''ஆமாம்.''

''எனக்கு ரொம்பப் பிடித்த பாட்டு.''

அந்த இளைஞன் சிறிது நேரம் மௌனமாக இருந்தான்.

''எனக்கு அந்தப் பாட்டு பிடிக்கவில்லை'' என்றான்.

கமலா யோசித்தாள்.

''ஏன்?''

''ஒரே சோகமயம்.''

''பின் பாடம் பண்ணியிருக்கிறீர்களே!''

''வேறு வழி?''

''ஏனப்படி? எனக்குப் புரியவில்லை.''

''நான்தான் அதை எழுதியவன்.''

''தாங்கள் தான்—''

''சுகுமாரன்''

அந்தப் பெயரைக் கேட்டதுமே கமலாவுக்குப் பேச்சு ஓடவில்லை.

# மடந்தை

தடந்தெருவு தன்னிடையே சாரும் ஒருமாது
மடந்தைப் பிராயம்உற்ற மஞ்ஞை;—திடங்கொண்ட
ஆடவர்கள் தம் மனதை, ஆடுகின்ற பம்பரம்போல்
நாடிச்சுழல வைக்கும் நற்குழலாள்;—பீடுபெறு
சந்திரற்குத் தன்னேர் சிறிதும் தராதவனை
அந்தரத்தில் போகச்செய் யானனத்தாள்;—சந்ததமும்
கூற்றுவனை யாரும் குலவும் தருமன் எனச்
சாற்றிடச்செய்யும் தடங்கண்ணாள்;—ஆற்றலொடும்
நீண்டகொடும் சாபம் நிலவியிடு நெடுநாண்
பூண்டிடத் தோற்றும் புருவத்தாள்;—வேண்டும்
இனத்தின் உடன் ஆம்பல் எழில்போது தோற்று
வனத்திருக்க மன்னியசெவ் வாயாள்;—கனத்தபுகழ்
உண்ட கமல முகை ஓங்கலருற்று ஏக எழில்
கொண்டு வளரும் குவிமுலையாள்.

—தஞ்சைப் பெருவுடையார் உலா

# 20 - 25

"மலைச் சிகரத்தை மேகம் தழுவுகிறது!"

"ம்."

"பூவை நாடி வண்டு அலைகிறது!"

"ம்."

"சமுத்திர ராஜனைத் தேடி சித்ரா ஓடுகிருள்!"

"ம்."

"இந்தப் பூங்கொடி—"

"நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?"

சுகுமாரனின் பேச்சில் மயங்கியிருந்த கமலா சுய நினைவு வந்து இந்தக் கேள்வியைக் கேட்டுவிட்டாள்.

சுகுமாரன் நிலைமையைச் சமாளித்துக் கொண்டான். "கவிஞன் ஷெல்லியின் காதல் தத்துவக் கவிதையைப் பற்றித் தான் பேசினேன். பூவும் புனலும், வண்டும் மலையும்—உலகப் பொருள் எல்லாமே ஒன்றையொன்று தழுவித்தான் வாழ முடியும். தனித்திருக்க முடியாது—என்றுதான் ஷெல்லி சொல்கிருன், மேலும்..."

"மேலும் என்ன?"

"இந்தத் தத்துவத்தைச் சொல்லி, அவன் தன் காதலியைப் பார்த்து, 'கண்ணே! உலகத் தத்துவமே இப்படி இருக்கும்போது, நீ என்னைக் கலக்காவிட்டால், காதலால் என்ன பயன்?' என்று கேட்கிருன்."

இதைக் கேட்டவுடன் கமலா மௌனியாகிவிட்டாள். இந்தக் கேள்வியை ஷெலலிதான் கேட்டாளு, இல்லை, இது

சுகுமாரனின் கேள்வியா? அவள் மனசில் புரியாத குறுகுறுப் புணர்ச்சி எழுந்தது. என்ன செய்வதென்று தெரியாமல், ஒரு புல் கதிரைப் பிடுங்கி வாயில் வைத்துக் கடித்துக்கொண் டிருந்தாள்.

''கமலா....'' சுகுமாரன் ஒரு கணம் தயங்கினான். ''இதே கேள்வியைத்தான் உன்னிடம் இத்தனை நாள் கேட்பதற்காகத் துடிதுடித்தேன்.''

கமலா குனிந்த தலை நிமிரவில்லை.

சுகுமாரன் மெதுவாக அவள் கையைத் தொட்டு வளையல் களில் விளையாடினான். அவன் கை நடுங்கியது. இதற்கு முன் அவன் அவளை—எந்த யுவதியையுமே—தொட்டதில்லை.

கமலாவுக்கு அந்த ஸ்பரிச உணர்ச்சி உடம்பில் கிளுகிளுப் பைத் தந்தது. மயிர்க்காலெல்லாம் சிலிர்த்துச் சிணுங்கின. சொல்ல முடியாத ஜீவவேகம் உடம்பில் பரவுவது மாதிரி இருந்தது. அந்தச் சுகத்தில் தோய்ந்து கிடந்தாள்.

''கமலா!'' சுகுமாரன் அவள் முகத்தை நிமிர்த்தினான்.

அவள் கண்களில் ரத்தம் பாய்ந்திருந்தன. உதடுகள் உலர்ந்துபோய் துடி துடித்தன. முகத்தில் குறு வியர்வை அரும்பியிருந்தது. நோயிலிருந்து தப்பித்தவரின் முகத்தைப் போல, முகத்தில் ஒரு தெளிவும் சோர்ந்த தன்மையும் சேர்ந்து விளங்கின.

''கமலா!'' என்று மீண்டும் சொன்னான் சுகுமாரன். அவன் குரல் கரகரத்திருந்தது.

கமலா தன் சொப்பன சுகத்திலிருந்து விடுபெற்று எழுந் தாள். அவளுக்கு என்ன பதில் கூறுவதென்றே தெரியவில்லை. திகைத்தாள்.

''சரி, நான் வருகிறேன்''

''அதற்குள்ளாகவா?''

"ஆமாம். நேரம் கழித்துப்போனால், அம்மா ஏதாவது—"

இருவருக்கும் பேச்சு ஓடவில்லை. சுகுமாரன் தன் முகத்தை ஒரு தடவை துடைத்துக் கொண்டான்; கமலா நகத்தை ஒரு முறை கடித்துக் கொண்டாள்.

"நான் வரட்டுமா?"

"சரி. நாளைக்கு?"

"வருகிறேன்."

கமலா அந்தப் பாறையில் வெட்டி விடப்பட்ட படிகளின் வழியாக இறங்கிப்போனாள். சுகுமாரன் அவள் நடந்து செல்லும் அலங்காரத்தையே பார்த்துக் கொண்டு நின்றான்.

## 2

சுகுமாரன் இளைஞன்; பெயருக்கேற்றவாறு அழகாக இருந்தான். கையில் மட்டும் ஒரு கரும்பைக் கொடுத்து விட்டால், அசல் மன்மதனாகவே தோன்றுவான். பால்யத்தின் பேதைமை கழிந்து, வாலிபப் பருவத்தின் தலைவாசலில் புகுந்த இளைஞன். எனவே அவன் மனத்தில் ஏதோ புரிந்து கொள்ள முடியாத வெறுமை உணர்ச்சியும், குறுகுறுப்பும் ஏற்பட்டன. அதன் காரணமாக, அவன் தன்னை மறக்க இன்பக் கனவுகள் கண்டான். அந்தக் கனவுகளைச் சொல்லில் வடித்தான். அவனுக்கு இயற்கையாகவே கவித்துவ சக்தி இருந்தது. எனவே தன் மனத்தின் அங்கலாய்ப்புக்குப் புகலிடமாகக் கவிதையைக் கைக்கொண்டான்.

குற்றாலத்து வளத்தைப் பற்றி, அவன் கேட்டும் இருக்கிறான்; மேலும், 'குற்றாலக் குறவஞ்சி'யைப் படித்த அவனுக்கு குற்றாலத்தைக் கண்குளிரக் காணவேண்டுமென்ற ஆவல். தன் கவிதை உள்ளத்துக்கு ஏற்ற இடமெனக் கருதி,

கொஞ்ச நாள் அங்கிருந்து வரலாமெனக் கிளம்பினுன். குற்ரு லத்துக்கு வந்த இடத்தில் அவனுக்குக் கமலாவின் பரிசயம் கிடைத்தது. தான் இத்தனை நாள் எந்தெந்த அழகையெல்லாம் கற்பனைப் பெண்ணுகக் கருதிக் கவி பாடி வந்தானே, அந்த அழகையெல்லாம் அவன் கமலாவிடம் காண்பதாக மயங்கி ஞன். மேலும், அவன் இதற்கு முன் எந்தப் பெண்ணுடனும் பழகியதில்லை. எனவே கமலாவின் பரிசயத்தில் அவன் ஆனந்தம் கண்டான். அதாவது, பருவத்தின் ஆசையை அவன் புரிந்து கொள்ளமுடியாமல், அதன் ஆர்வத்தையெல்லாம் தன்னையறியாமல் கவிதையில் வெளியிட்டான். ஆனுல், பிரத்தியக்ஷப் பிரமாணமாக அவன் கமலாவைக் கண்டவுடன் அந்த ஆர்வம் அவனையும் அறியாமல் அவள்மீது திரும்பியது.

அவன் கமலாவைக் காதலித்தான்.

கமலாவும் குற்ருலத்துக்கு வந்ததிலிருந்தே மனம் பூரித்துப் போயிருந்தாள். குற்ருலத்தின் சௌந்தர்யச் சூழ்நிலை அவள் மனசுக்குக் குளுமை தந்தது; சுகுமாரனேடு அவளுக்கு ஏற்பட்ட நட்பு நிறைவையும் நிம்மதியையும் வழியப் பொழிந்தது.

சுகுமாரன் ஒரு கவிஞன், அதிலும் தனக்குப் பிடித்துப் போன கவிஞன் என்று அறிந்ததுமே அவள் மனம் சுயா தீனத்தை இழந்து அவன்பால் நாடியது. தான் எதிர்பார்க்கும் காவியக் காதலை அவன்தான் தரமுடியும் என்று கருதினுள். அவனேடு கவிதையைப் பற்றிப் பேசுவதில், சொப்பன சொர்க்கமான மன அவஸ்தைப் பிரதிபலிப்புகளில் அவள் ஆனந்தம் கண்டாள். மேலும், அந்த ஒருநாள் சம்பவத்துக்குப் பிறகு—

கமலா அன்றிரவு தூங்கவே இல்லை.

மனசில் எத்தனை எத்தனையோ இன்பக் கனவுகள். தான் எந்த ரகசியத்தை சுகுமாரனிடமிருந்து தெரிய விரும்பி ஞளோ அதைத் தெரிந்து கொண்டாள். சுகுமாரன் தன்

காதலைச் சொல்லிவிட்டான். 'என் காதல் வீண் போகவில்லை; சுகுமாரன்தான் என் சந்திராபீடன், என் ரோமியோ, என் காயிஸ்' என்று அவள் மனம் முனகிக்கொண்டது.

உடம்பில் அவன் தொட்ட இடத்தில் சுகம் இன்னும் தங்கியிருப்பதாக ஒரு பிரமை. அவள் உடம்பு புல்லரித்தது. உடல் சம்பந்தம் தவறு என்று கருதும் கமலா, தன் மயக்கத்தில் அந்த ஸ்பரிச உணர்ச்சியும், அதனால் ஏற்படும் புல்லரிப்பும், உடல் சம்பந்தம்தான் என்ற ஞானத்தையே பெறவில்லை.

—'நான் சுகுமாரனைத்தான் காதலிக்கிறேன்; அவரைத்தான் மணப்பேன். அவரை மணந்தால், நாங்கள் தனியாக வாழ்வோம். ஒரு தென்னந்தோப்பு, அதில் ஒரு பூந்தடாகம், நல்ல மலர்கள், வண்டின் ரீங்காரம்—இந்தச் சூழ்நிலையில் வாழ்வோம். நாங்கள் எங்கள் வீட்டைப் பூக்களால் அலங்கரிப்போம், கொடிகளைப் படரவிடுவோம். பட்டுத் துணிகளால் ஜன்னல் திரைகள் கட்டுவோம்'.....

அவள் மனசில் தங்கள் வாழ்க்கையின் சூழ்நிலையைப் பற்றி எத்தனை எத்தனையோ கனவுகள் தோன்றின. ஆனால், அவள் எப்படி உடலை மறந்து உள்ளத்தைப் பற்றி மட்டும் கவலை கொண்டாளோ அதுபோலவே அந்தச் சூழ்நிலையிலே தங்கள் வாழ்வு எப்படி இருக்கும் என நினைக்கவில்லை. அத்தனை எண்ணங்களிலும் அவள் தங்கள் படுக்கையறையைப் பற்றியே சிந்திக்கவில்லை.

அதை அவள் நினைக்கவே இல்லை.

அன்று முதல் கமலாவும் சுகுமாரனும் அடிக்கடி சந்தித்தார்கள். ஆனால், நண்பர்களாகச் சந்திக்கவில்லை; காதலர்களாகச் சந்தித்தார்கள். அருவிக் கரையில், அடவித் தோப்பில், மலைப் பாறைகளில்—எங்கெல்லாமோ அவர்கள் வானம்பாடிகளைப் போலத் திரிந்தார்கள்; இன்பமயமாகப் பேசிக்கொண்டார்கள். சொப்பன சொர்க்கத்தில், லட்சியக்காதல்

என்னும் மன மயக்கத்தில் இருவரும் ஆனந்தம் அனுபவித்தார்கள்.

அவர்கள் காதல் வளர்ந்து வந்தது.

## 3

"கமலா, ஒரு பாட்டுக் கேட்கிறாயா?"

"புதுசா?"

"ஆமாம்." சுகுமாரன் புல்லந்தரிசிலிருந்து நிமிர்ந்து உட்கார்ந்து கொண்டு பாட ஆரம்பித்தான்:

அந்தி மசக்கையிலே
செந்தூரப் பொட்டணிந்து
பாச வலை வீசி
வாசல் நடை வந்து
நிலையொட்டி நின்ற நிலை
நிலை குலையச் செய்யுதடி!

முத்தை நொறுக்கி
முன் வாசல் கோலமிட்டு
குத்து விளக்கேற்றிக்
கோலச் சரம் சூடி
கும்பிட்ட கோலத்தைக்
கும்பிடக் கை கூடுதடி!

"சரி. போதும். யார் இந்தக் கவிநாயகி?" என்று ஆர்வத்தோடு கேட்டாள், கமலா.

"நீயேதான்!"

"நானா? என்னை எப்போது இப்படிப் பார்த்தீர்கள்?"

''நேற்று மாலையில்.''

கமலா யோசித்துப் பார்த்தாள், நேற்று மாலையில் அவளால் சிற்றருவிக் கரைக்கு வர முடியவில்லை. அம்மாவுக்கு உடம்புக்குச் சரியில்லை. எனவே அவள் குடியிருக்கும் வீட்டைப் பெருக்கிக் கோலமிட்டாள்; விளக்கேற்றினுள். ஆனல், சுகுமாரனுக்கு இது எப்படித் தெரிந்தது?

''நேற்று மாலை, நீங்கள்—''

''கமலா, உன்னைக் காணுமல் ஒரு நாள்கூட என்னல் இருக்க முடியவில்லை. நீ வரக் காணேம் என்றவுடனேயே கீழிறங்கிவிட்டேன். ஓடோடி வந்து உன்னைப் பார்க்க வேண்டும் என்று ஆசை. ஆனல், உங்கள் வீட்டிலுள்ளவர்கள் ஏதாவது நினைத்துக்கொண்டால்—''

''அப்படியானல், இந்தப் பாட்டு?''

''நீ கோலமிட்டதையும், குத்துவிளக்கேற்றியதையும் தூரத்திலிருந்தே பார்த்தேன். நீ என்னைக் கண்டுகொண் டிருக்க முடியாது. நீ ஏன் அப்படி மலையை வெறிக்க வெறிக்கப் பார்த்தாய்?''

''உங்களுக்குத் தெரியாமல் உங்களையும் தூரத்திலிருந்தே பார்த்துவிடலாமென்றுதான்.''

இருவரும் சிரித்தார்கள். கமலாவுக்கு அந்தப் பாட்டைக் கேட்டு மனம் புளகம் அடைந்தது. 'நான் ஒரு பாட்டுக்குப் பொருளாகிவிட்டேனு?' என்று அவள் மனம் குதூகலித்தது. சுகுமாரனின் மனம் பூரித்தது. தன் ஆசையைச் சொல்லில் வடித்துவிட்டதில் அவனுக்குப் பெருமை. உண்மையில் இருவரும் தங்களைத் தாங்களே ஏமாற்றிக்கொண்டார்கள். கமலா சுகுமாரனின் கவிதையில் காதலின் புனிதத்துவத்தைக் கண்டாள்; மன ஏக்கத்தைக் கண்டாள். ஆனல், அந்த ஏக்கத்துக்குரிய காரணத்தை அவள் உணரவில்லை. சுகுமாரனும் தன் மன ஏக்கத்துக்கு ஒரு சாந்தியாகத்தான் கவிதையை எழுதி

ளுன். ஆனுல், அதே சமயம் கமலாவின் மீது தனக்கு ஏன் இந்த ஏக்கம் என்பதை உணரவில்லை.

இருவரும் தங்கள் பருவத்தையே மறந்துவிட்டார்கள்; தங்கள் உருவங்களேக் கவிதையில்தான் கண்டார்கள். காதவில் அல்ல.

''கமலா, என் நண்பன் சோமு சொன்ன விஷயம் பொய்யாகவில்லை'' என்று ஆரம்பித்தான் சுகுமாரன். அத்தனை நேரம் நிலவிய அமைதியை அவன் குலேத்தான்.

''என்ன சொன்ஞர்?''

''சொல்வதென்ன? குற்ருலத்துக்குப்போய் உன் கவிதைக்கு இரை தேடி, காடுகளில் சுற்ருதே. வனமோஹினிகள் உன்னைப் பிடித்துக் கொண்டுவிடுவார்கள் என்ருன்''

''அதற்கென்ன?''

''அவன் சொன்னது சரியாய்ப் போயிற்று. வனத்திலே மோஹினிபோல நீ வந்தாய். என்னைப் பிடித்துக் கொண்டுவிட்டாய். உன்னைவிட்டு என்னுல் பிரியவே முடியவில்லை.''

''பிரிய முடியவில்லையா? ஏன் பிரியவேண்டும்?''

''இல்லை .. சோமு என்னை அவசரமாக வரச்சொல்லிக் கடிதம் எழுதியிருக்கிருன்.''

கமலா உடனே மறு கேள்வியைக் கேட்கவில்லை. அவளுக்கும் மனம் என்னவோ செய்தது. என்ன சொல்வது?

''புறப்பட வேண்டுமா?''

''இரண்டு மாதமாயிற்று. நாளை மறுநாள் புறப்படலாமென உத்தேசம்.''

சுகுமாரனும் வார்த்தைகளைத் தட்டுத்தடுமாறித்தான் சொன்ஞன். அவனுக்கும் பேச நா எழவில்லை. கமலாவைப் பார்த்தான். கமலாவின் கண்களில் நீர் பெருகி நின்றது. அவள் உதடு படபடத்தது.

"கமலா........."

"இதற்குத்தானு நாம் சந்தித்தோம்?" கமலாவுக்குத் தன் காதலன் பிரிந்து செல்வதில் தாங்கமுடியாத வேதனை இருந்தது.

"பிரிவதா? நீதானே சொன்னுய். நமது ஆத்மாக்கள் கலந்தபின், நம்மை ஆண்டவனுலும் பிரிக்கமுடியாது என்ருயே. நான் எங்கிருந்தாலும், உன் நினைவாகவே இருப்பேன், என்னை நம்பு" என்று பரிதாபத்தொனியில் பேசினுன் சுகுமாரன்.

"இருந்தாலும், உங்களைக் காணுமல் எப்படி இருப்பது? இங்கிருக்கும்போதே அப்பாவிடம் உங்களைப்பற்றிச் சொல்லி நம் கல்யாணத்துக்கே ஏற்பாடு செய்யச் சொல்லலாம் என்று நினைத்தேனே" என்று தன் மனத்திலுள்ள அந்தரங்க ஆசையையும் வெளியிட்டுவிட்டாள்.

"கமலா, நம் காதல் கல்யாணத்தால்தான் கட்டுப்பட வேண்டுமா?"

"கட்டுப்பாடா?—கல்யாணம் கட்டுப்பாடாகுமா?"

சுகுமாரன் கல்யாணம் என்றதுமே மனத்துள் நடுங்கினுன். இத்தனை நாளும் அவன் அதைப்பற்றி யோசிக்காமலில்லை. யோசித்தான்; ஆனுல் கல்யாணம் பண்ணிய நண்பன் தேவன் எப்படி இருக்கிருன்? தினம்தினம் அவனுக்கு வீட்டுக் கவலை; பிள்ளைகள் தொல்லை; சம்சார பந்தம். அதை எண்ணிப் பார்க்கும் போது, சுகுமாரனுக்குக் கல்யாணம் பெரிய விலங்காகத் தோன்றியதில் ஆச்சரியமில்லை. மேலும், அவன் சொப்பனமய மான காதலை விரும்பினுன்; பெண்டு பிள்ளைகள் நிறைந்த சம்சார பந்தத்தை அல்ல. எனவே அவன் கமலாவை மணந்து கொள்ளும் விஷயமாக நினைக்கக்கூடப் பயந்தான்.

"என்ன பேசாமல் இருக்கிறீர்களே?" கமலா நடுங்கிப் போய்த்தான் கேட்டாள். எங்கே சுகுமாரன் தன் ஆசையைச் சிதற அடித்துவிடுவானே என்று பயந்தாள்.

''கமலா, மனிதனுய்ப் பிறந்தால் இந்தத் துயர்தான். அதோ வானம்பாடிகளைப் பார்; வண்டுகளைப் பார். அவை கல்யாணமா பண்ணுகின்றன? காதலை அனுபவிக்க அவற்றுக்குச் சுதந்தரமுண்டு; மனிதனுக்குக் கல்யாணம் பண்ணத்தான் சுதந்திரமுண்டு'' என்று ஏதோ பேச ஆரம்பித்தான் சுகுமாரன்.

''கல்யாணமும் காதல் வாழ்வுதானே'' என்ருள் கமலா.

''கல்யாணமானவுடன் காதல் செத்துவிட்டால்?''

சுகுமாரன் சொல்லும் புதிய விஷயம் கமலாவுக்குப் புரியவில்லை. இருந்தாலும், ''அதெல்லாம் சாகாது'' என்ருள்.

சுகுமாரன் பதில் பேசவில்லை.

''அப்படியாளுல், நீங்கள் என்னை மணந்துகொள்ள மாட்டீர்களா? மறந்து விடுவீர்களா?''

''இல்லையில்லை. உன்னை மறப்பதாவது?''

''கல்யாணம்?''

''ஊருக்குப் போனவுடன் நானே ஏற்பாடு செய்கிறேன்'' என்று சொன்னுன் சுகுமாரன்.

கமலாவின் முகம் மலர்ந்தது.

இருவரும் அருவிக்கரையிலிருந்து, பாறை முகட்டுக்கு ஏறிஞர்கள். அங்கு அமர்ந்து தூரத்தில் தெரியும் பயிர் பச்சைகளைக் கண்டார்கள். அருவியின் தமரத்தைக் கேட்டார்கள். அந்தி மயக்கின் மஞ்சளிலே மூழ்கியிருந்தார்கள்.

என்ருலும் இருவரிடையேயும் அமைதி நிலவியது.

குற்ருலத்துக்கு வருபவர்கள் தங்கள் விஜயத்தின் ஞாபகார்த்தமாக, தங்கள் பெயர்களைச் சிற்றருவிப் பாறையில் கல்லால் அடித்துப் பொறிப்பது வழக்கம். அந்தப் பாறையில் அப்படி எத்தனை யெத்தனையோ பெயர்கள் அடிக்கப்பட்டிருந்தன. அதை இருவரும் படித்தார்கள்.

கமலாவுக்கு அந்த அமைதியைக் குலைக்க வேண்டும் போலிருந்தது. என்ன பேசுவதென்று தெரியாமல் இருந்தாள். திடீரென்று ''என்ன, இந்தப் பெயர்களைப்போல் நமது பெயரையும் அடித்தால் என்ன?'' என்ருள்.

சுகுமாரனும் மனம் குழம்பித்தான் இருந்தான். கமலா பேசியதும் உடனே சம்மதித்து விட்டான்.

இருவரும் ஆளுக்கொரு கல்லை எடுத்துக் கொண்டு 'டங் டங்' கென்று பாறையில் அடித்தார்கள். ஒவ்வொரு எழுத் தாக அடித்து முடித்தார்கள்.

''சுகுமாரன்—கமலா''

இருவரும் தங்கள் பெயரைப் பார்த்து மகிழ்ந்தார்கள்.

சுகுமாரன் சொன்ஞன்: ''என்ன கமலா, அடுத்த வருஷம் நாம் இங்கு வரும்போது, உன் பெயரை அழித்து விடலாம்.''

''ஏன்?'' என்று புரியாமல் கேட்டாள் கமலா.

''இல்லை, அடுத்த வருஷம் நீ கமலாவாக இருக்க மாட் டாய். 'ஸ்ரீமதி சுகுமாரன்' ஆகிவிடுவாய். எனவே என் பெய ருக்கு முன்ஞல் ஒரு'ஸ்ரீமதி' வெட்டிஞல் போதும்'' என்று சொன்ஞன் சுகுமாரன்.

''ஏனப்படி? உங்கள் பெயரை வேண்டுமாஞல் அழியுங்க ளேன். வேண்டுமென்ருல் உங்கள் பெயரை ஸ்ரீமான் கமலா என்று மாற்றிக் கொள்ளுங்கள்'' என்ருள் கமலா.

''இது எதற்கு வீண் சண்டை? நாம் வந்து அழிப்பதற் குள் மழையும் வெயிலும் இரண்டையுமே அழித்து விட்டால்—''

அவர்கள் இருவரும் தங்கள் பிரிவாற்ருமையை மறக்க எண்ணி இப்படியெல்லாம் குதூகலமாய்ப் பேசிக் கொண்டார் கள். ஆஞல், சுகுமாரன் சொன்ன கடைசி வாக்கியம்—

'ஒரு வேளை எங்கள் பெயர்கள் அப்படி அழிந்து விடுமா? அழிந்தால் என்ன? எங்கள் காதலின் சின்னமல்லவா அது?

அது அழிந்தால், எங்கள் காதலும் அழிந்து விடுமா?...' கமலாவின் மனம் வேண்டாத எண்ணங்களை இழுத்துப் போட்டுக் கொண்டு அவஸ்தைப்பட்டது.

இருந்தாலும் மனப்பயத்தை மறைக்க எண்ணி, ''அதெல்லாம் ஒன்றும் அழியாது; கல்லாவது, அழிவதாவது?'' என்றாள்.

''அழியாமல் இருந்தால் சரி'' என்றான் சுகுமாரன்.

அதற்குள் பொழுது இறங்கி மலைமேல் இருள் படைபடையாகக் கவிய ஆரம்பித்தது.

இருவரும் மலையை விட்டுக் கீழிறங்கினார்கள்.

4

## "9753"

கமலாவின் நம்பர் அந்தப் பத்திரிகையிலே வந்திருந்தது. அவள் பாஸாகிவிட்டாள். இனிமேல் மேல்படிப்புக்குச் சென்னைக்குத்தான் செல்லவேண்டும். கமலாவின் ஆசையை அவள் தந்தை கெடுக்க விரும்பவில்லை. மறு வாரமே அவளைச் சென்னைக்குக் கூட்டிக்கொண்டு வந்து, கல்லூரியில் இடமும் பிடித்துக் கொடுத்துவிட்டார்.

கமலாவின் வாழ்வில் புது அத்தியாயமே ஆரம்பமாயிற்று. அவள் சென்னை வாசியானாள்.

சென்னைக்கு வந்தபின்னர் பட்டணத்து நவநாகரீக மோஸ்தரையெல்லாம் கண்டாள். தன்னுடன் படிக்கும் பெண்கள் வெறும் வெளிப்பூச்சுப் பகட்டிலேயே அதிக கவனம் செலுத்துவதைக் கண்டாள். இவர்கள் ஏன் இப்படிச் சிங்காரித்துக் கொள்கிறார்கள்? யாரை மயக்க? இல்லையென்றால் தங்களைத் தாங்களே இவர்கள் மயக்கிக்கொள்கிறார்களா? ஏனப்படி?

அப்படி அவர்கள் தங்களிடமிருந்து இந்த அழகு அலங்காரங்களால் எதை மறைக்க விரும்புகிறுர்கள்?..........

இந்த மாதிரியெல்லாம் அவளுக்குச் சிந்தனை ஓடியது. ஆனுல் பதில்தான் கிடைக்கவில்லை. கடைசியில் அவள் ஒரு முடிவுக்கு வந்தாள். 'இவர்களெல்லாம் உடலையே பிரதானமாகக் கருதுகிறுர்கள், நானே ஆத்மாவை—உள்ளத்தைப் பிரதானமாகக் கருதுகிறேன்.'

அப்படித்தானு?

கமலாவுக்கு மனசில் அந்தச் சந்தேகமும் எழுந்தது. காரணம் சுகுமாரனின் நினைவுதான். சுகுமாரனை, அவனது மோஹனவடிவை அவள் மனசில் கற்பனை பண்ணிப்பண்ணிப் பார்த்து மகிழ்ந்தாள்; என்ருலும், திருப்தியில்லை. அவனைச் சதையுந்தோலுமாக, மனிதப்பிண்டமாக, ஸ்தூல உருவில் கண்ட திருப்தி அவளுக்கு வரவில்லை.

'அப்படியானுல் நானும் சுகுமாரனின் உடலைத்தான் காண விரும்புகிறேனு?'

'இல்லையில்லை; உடலிச்சை மகா பாவம்' என்று உடனேயே தனக்குப் பதில் சொல்லிக்கொண்டாள்.

"நான் காதலிக்கத்தான் செய்கிறேன். ஆனுல், கேவலம் உடல் இச்சைக்காக அல்ல. என் இதய விளக்கில் நந்தாச் சுடராக விளங்கும் ஆத்ம ஒட்டுறவை அணையவிடாமல் காப்பதற்குத்தான். சுகுமாரனின் நினைவு அதைத்தான் என்னில் உண்டாக்குகிறது. ஆனுல், அந்தக் குளுமையான சுடர் என்னைத் தகிப்பானேன்? தன் வீட்டு விளக்கானுலும் முத்தமிட முடியுமா? சுடரானுலும், வடவைத் தீயானுலும் நெருப்பு நெருப்புத்தானே!......"

அவள் மனம் நிலையற்று அல்லாடிற்று. என்ருலும் அவள் அந்தக் காதலை வெறுக்கவில்லை. தீக்குள் விரலை வைத்தாலும் நந்தலாலனைத் தீண்டும் இன்பம் காணும் வேதாந்தியைப்போல தன் ஆத்மஜோதி தன் உடம்பைத் தகித்தாலும் அதில் ஆனந்

தம் காண முயன்றாள். அதாவது தன் உடம்பில் தோன்றும் உணர்ச்சிகளை உள்ளத்தினோடு முயங்கவிட முயன்றாள்.

அவளுக்கு ஒரேயொரு பயம்தான் இருந்தது. 'சுகுமாரன் அவளைக் கைவிட்டு விட்டால்?'

அவன் கல்யாணப்பேச்சை எடுத்தபோதே இரண்டுபட்ட மனசோடுதான் பேசினான். அப்படியானால், உண்மையில் அவளைக் கல்யாணம் செய்ய விரும்பவில்லையா? கல்யாணமான வுடன் காதல் செத்துவிடும் என்றானே; அதற்கு என்ன அர்த் தம்? ஆனால், அவன் அவளை ஏன் காதலித்தான்? க்ஷணநேர இன்பத்துக்காகவா? இல்லை; அந்த இன்பத்தை அவன் அடைய நினைத்திருந்தால், எத்தனை சந்தர்ப்பங்கள் வாய்த்தன. அதைப் பற்றி அவன் பேசவே இல்லையே; அல்லது அவள்தான் அவ னுக்கு இடம் கொடுக்கவில்லையா?.........

கமலாவின் மனசில் இந்த மாதிரியான எண்ணங்கள் எல் லாம் கிளைப்பதற்குக் காரணம் இல்லாமல் இல்லை. அவன் வாக்களித்தபடி அவர்கள் கல்யாணத்துக்காக எந்த முயற்சி யும் செய்யவில்லை; அது மட்டும் அல்ல. கமலாவுக்கு ஒரு கடிதம்கூட எழுதவில்லை. 'அவர் கடிதம் எழுதினால், எவ்வளவு கவிதை நயம் பொருந்தியதாக இருக்கும். கண்ணில் ஒற்றிப் பூஜிப்பேனே. ஆனால் அவர் ஏன் கடிதமே எழுதவில்லை? என்னை மறந்துவிட்டாரா?'

'மறந்துவிட்டார்' என்று நினைக்கும்போதே அவளுக்கு நெஞ்சு துணுக்கென்றது.

'இல்லை; அவர் மறந்தாலும் அவர் உள்ளம் மறக்காது.'

அவள் மீண்டும் உள்ளத்தைத்தான் பெரிதாகக் கருதினாள். அவன் வேறு, அவன் உள்ளம் வேறா?

அன்று ஒரு நாள் தர்க்க சாஸ்திர வகுப்பு நடந்து கொண்டிருந்தது. முந்தின நாள் அவள் தோழியரோடு கடற் கரைக்குச் சென்று வந்தாள். என்றாலும் அவளுக்கு அன்றிரவு

தூக்கமே பிடிக்கவில்லை. தெளிவில்லாத பயமும் இன்பமும் கலந்த எத்தனை எத்தனையோ கனவுகள். அவற்றை அவளால் நினைவுக்குக் கொண்டுவரக்கூட முடியவில்லை. இருந்தாலும். அவள் மனசில் ஏனோ ஒரு பய உணர்ச்சி உண்டாயிற்று, சுகுமாரன் தன்னை மறந்தே விட்டதாக எண்ணம். அந்த நினைப்பினால் அவளுக்கு வகுப்பில்கூடக் கவனம் செலுத்த முடியவில்லை.

'உண்மையில் அவர் என்னை மறந்துவிடுவாரா? ஏன் மறக்க வேண்டும்? உண்மைக் காதல் மறையுமா?'

அவள் மனம் தடுமாறிக்கொண்டே இருந்தது.

புரொபசர் தர்க்க சூத்திரத்தின் ஆறு விதிகளையும் ஞாபகப் படுத்தி, தர்க்க முறைமையை, அதன் தன்மையை விளக்கிக்கொண்டிருந்தார். கமலா வகுப்பில் கவனம் செலுத்தா விட்டாலும், மனசுக்குள் தர்க்க நியாயம்தான் பண்ணிக் கொண்டிருந்தாள்.

—'சுகுமார் கவிஞன்; நான் கவிதையைக் காதலிக்கிறேன்; எனவே சுகுமாரைக் காதலிக்கிறேன்.'

—'நான் சுகுமாரைக் காதலிக்கிறேன்: காதல் ஒரு தலைப் பட்டதல்ல; எனவே சுகுமாரும் என்னைக் காதலிக்கவேண்டும்.'

—'உண்மைக் காதல் தோல்வியுறாது; சுகுமாரை உண்மையாகக் காதலிக்கிறேன்; என் காதல் தோல்வியுறாது.'

கமலா மனதில் இது போன்று எண்ணற்ற நியாய விசாரங்களைப் போட்டுப் போட்டு அழித்துக்கொண்டிருந்தாள். தன் நியாய விசாரணை சரியானதுதானா என்று தெரிந்து கொள்ள அவள் தர்க்க வாய்ப்பாடுகளையும் பிரயோகித்துப் பார்த்தாள்.

'பார்பாரா, ஸிலாரெண்ட், டேரியை, பெரியோ...'

அத்தனை வாய்ப்பாடுகளையும் சொல்லிப் பார்த்தாள். என்றாலும் அவளுக்கு நியாயம் கிடைக்கவில்லை. 'ஒரு வேளை

தன் தர்க்க சூத்திரத்திலேயே தவறு இருக்குமோ?' என்று சந்தேகம். உண்மையில் அவள் மனசில் தர்க்க நியதியே பிடிபட்டு வரவில்லை. 'சுகுமாரனை நான் சரியாய்ப் புரிந்து கொண்டேனா? இல்லை. காதலைத்தான் புரிந்துகொண்டேனா? உண்மைக் காதல் எது? சுகுமார் காதலைப் பற்றி என்ன நினைக்கிறான்?' இதெல்லாம் அவளுக்குப் புரியவில்லை; எனவே அவளால் விடையும் காணமுடியவில்லை.

அவளது தர்க்க ஞானம் அவளையே ஏமாற்றியது.

கடைசியில் அவளுக்குத் தன் சந்தேகத்தைத் தெளிவுபடுத்திக் கொள்ள ஒரே ஒரு வழிதான் தென்பட்டது. சுகுமாரனுக்கே ஒரு கடிதம் எழுதினால்—? அவன் சொன்ன விலாசம் அவளுக்கு மறந்து விடவில்லை. எனவே ஒரு நாள் அவள் தன் மனச் சங்கடத்தை யெல்லாம் தெரிவித்து, அவனுக்கு ஒரு கடிதம் எழுதினாள். கடிதம் எழுதிய பின், தினம் தினம் தபால்காரன் வரும்போதெல்லாம் கடிதத்துக்காகக் காத்திருந்து கேட்டாள். அவனோ நிர்விசாரமாய்க் கை விரித்தான். அவளுக்கு நம்பிக்கை குறையவே இல்லை. சுகுமாரன் தன் கடிதத்துக்கு நிச்சயம் பதில் எழுதுவான் என்று திடமாக இருந்தாள்.

ஒருநாள் மட்டும் தபால்காரன் கருணை வைத்து அவளுக்கு ஒரு கடிதம் கொண்டுவந்து கொடுத்தான். பரபரப்போடு கடிதத்தை வாங்கிப் பார்த்தாள்; பார்த்தவுடனேயே அவள் முகம் சுண்டியது.

அது அவள் எழுதிய கடிதமேதான்: 'விலாசதார் தெரியவில்லை.'

கமலா அப்படியே அயர்ந்துபோனாள்.

## 5

—'சுகுமாரனுக்கு ஏன் கடிதம் போய்ச் சேரவில்லை? அவர் தவறான விலாசம் கொடுத்தாரா? ஏன் கொடுக்கவேண்டும்? இல்லை. வேறு இடத்துக்கு மாற்றிப் போய்விட்டாரா?

அப்படிப் போனால் எனக்குத் தெரிவிக்க மாட்டாரா? தெரிவித்த கடிதம் எனக்குக் கிடைக்கவில்லையா?'

—'இல்லை. அவர் என்னை ஏமாற்றிவிட்டாரா? ஆசை காட்டி மோசம் செய்தாரா? அவருக்கு மட்டும் ஆசை இல்லையா? காதல் இல்லையா? அவரைப் பார்த்தால், அந்த முகத்தைப் பார்த்தால் அப்படித் தோன்றவில்லையே.'

—'இல்லை. உண்மைக் காதலின் கதியெல்லாம் இப்படித் தானா? சுகுமாரனைப் போன்ற கவிஞர்கள்தானே உண்மைக் காதலின் பெருமையை, ஆத்மக் கலப்பின் புனிதத்துவத்தைப் பாடுகிறார்கள்; சிரஞ்சீவிக் காவியம் இயற்றுகிறார்கள்.'

—'காவியம் சிரஞ்சீவியாய் இருக்கலாம். காதல் இருக்குமா? லைலா-காயிஸ், ஜூலியட்-ரோமியோ—இவர்கள் காவியத்தில் சாகாமலிருக்கலாம்; ஆனால் வாழ்வில் செத்துத்தானே போனார்கள். லட்சியக் காதலர்களுக்கு இதுதான் முடிவா? லட்சியமும், காதலும் உண்மையில் சோக நாடகங்கள் தானா?'

கமலாவுக்கு மனம் குலைந்து போயிற்று. சுகுமாரனை அவளால் மறக்க முடியவில்லை. நாளெல்லாம் அவன் நினைவாகவே இருந்தாள். தன் தோழியர் யாருக்கும் தெரியாமல் இரவெல்லாம் கண்ணீர் சிந்தினாள். தூக்கம் என்பதே அவளிடமிருந்து குடியோடிப் போய் விட்டது.

'சுகுமாரனை நான் மறந்து விட்டால் என்ன?'

அவள் அப்படியும் நினைத்துப் பார்த்தாள். ஆனால், அவள் தன் லட்சிய உருவாகவே அவனைக் கண்டாள்; காதலித்தாள், அவனை மறக்க வேண்டுமென்றால், அவளது காதல் லட்சியத்தையே மறக்கவேண்டும். ஆனால், அவள் மனசிலோ சுகுமாரனின் நினைவைவிட, அந்த லட்சியமே வலுப்பெற்றிருந்தது. எனவே அவளால் சுகுமாரனின் திருவுருவைத் தன் இதய பீடத்திலிருந்து அகற்ற முடியவில்லை.

'சுகுமாரனை மறக்க வேண்டுமென்றால், அந்த நினைப்பை அழிக்க வேண்டுமென்றால், நான் என்னையே அழித்துக்கொள்ள வேண்டுமா?'

அவளுக்குத் தற்கொலையைப் பற்றிய எண்ணம்கூட எழுந்தது. அன்றிரவு அவள் தான் தற்கொலை செய்து கொள்வதாகவும், பிறர் தன்னைச் சுற்றிக் கண்ணீர் விடுவதாகவும் கற்பனை பண்ணிப் பார்த்தாள். ஆனால், அந்த எண்ணம் கற்பனையுடனேயே நின்றுவிட்டது. 'நான் ஏன் தற்கொலை செய்ய வேண்டும்? தற்கொலை செய்தால், என் உடலைத்தானே அழிக்க முடியும்! உள்ளம்? ஆத்மா அழிவற்றது. அதை என்னால் அழிக்க முடியுமா? என் ஆத்மா தானே அவரை விரும்புகிறது!' —கமலா இப்படியாகச் சமாதானம் கூறிக்கொண்டாள்.

உண்மையில் அவள் சாக விரும்பவில்லை; உள்ளத்தின் ஆசை என்று எதைக் கருதினாளோ, அந்தப் பருவத்தின் ஆசைக் கனவுகளே அவளைத் தடுத்து விட்டது. அது அவளுக்கே தெரியாது.

'அப்படியானால் நான் என்னதான் செய்வது?'

கமலா யோசித்து யோசித்துப் பார்த்தாள். சுகுமாரன் மீது அவள் கொண்ட காதல் உணர்ச்சியைத் தவிர்க்கவே முடியவில்லை. எனவே அவள் தனக்குள்ளாக ஒரு முடிவுக்கு வந்தாள்.

'சுகுமாரனை நான் மறக்கமாட்டேன்; மறக்க முடியாது. எனவே அவரைக் காதலிக்கத்தான் செய்வேன். அவர் எங்கிருந்தாலும் சரி, அவரைக் காதலிப்பேன். கேவலம், அவர் உடலையா காதலிக்கிறேன். இல்லையே! அவரை உள்ளத்தால் காதலிப்பேன்; அவரது உள்ளத்தைக் காதலிப்பேன்......'

'பிரத்தியக்ஷ மூர்த்தமாகக் காதலன் இருந்தால்தான் காதலிக்க முடியுமா? ஆண்டவனைக் காணாமலேயே ஆண்டாள் காதலிக்க வில்லையா? மீரா காதலிக்கவில்லையா? அதுபோல் நானும் அவரை பூஜிப்பேன்......'

''என்றாவது ஒருநாள் அவர் வராமலா போய்விடுவார்? வருவார். நிச்சயம் வருவார். அப்போது அவரை மனமுவந்து ஏற்பதற்காக, என் இதய கமலத்தைப் பாதுகாத்து வருவேன். அவரைத் தவிர என் உள்ளத்தில் யாருக்குமே இடம் கிடையாது; இடம் கொடுக்க மாட்டேன்.''

''அப்படி அவர் என்றுமே வராமல் போய் விட்டால்? சுகுமாரனைக் கண்ட கண்கள் பிறரை ஏறெடுத்தும் பார்க்காது. அவர் வராவிட்டால், நான் மனம் சோர்ந்துவிட மாட்டேன். அவர் வரும் வரை கன்னியாகவே இருப்பேன். இந்த ஜென்மத்திலே அவரைச் சந்திக்க முடியாமல் போனால்?—சாகும் வரைக் கன்னிகையாகவே காலம் கழிப்பேன்.''

'என் ஆத்மா அழிவற்றது; என் காதல் அழிவற்றது. எனவே எந்த ஜென்மத்திலேனும் அவரை நான் அடைந்தே தீருவேன். அதுவரை நான் கன்னி .......'

கமலா தன் மனச் சஞ்சலத்துக்கு இதுதான் மார்க்கம் என்று முடிவு கட்டினாள். தன் மனசிலுள்ள காதலை அவளால் ஒதுக்க முடியவில்லை. எனவே தன் போக்கைத் தன்னையறியாமல் அதன் வழியிலேயே திருப்பிவிட்டு விட்டாள்.

இருந்தாலும், வெறும் கனவுருவை எத்தனை நாள் காதலிக்க முடியும்?

கமலா தீக்கோழியைப் போல் மணலுக்குள் தலையைப் புதைத்துக் கொண்டாள். தன் தலையை மறைத்தால், உலகம் மறைந்து விடுமா? அது வெறும் மன மயக்கம். கமலா தன் இதய சாம்ராஜ்யத்துக்குள்ளேயே உலவுவதாகத்தான் கருதினாள்; உண்மையில் அதன் ஒவ்வொரு நிமிஷமும் உடலோடு தான் போராடிக் கொண்டிருந்தாள்.

எனவே நாளுக்கு நாள் அவள் தேகம் வாட்டம் கண்டது. அவள் அழகிதான். ஆனால் அவள் மலர்; எனவே வாடினாள். ஆனால் அவள் வெறும் மல்லிகை மலர் அல்ல; வாடா மல்லிகை. வாடா மல்லிகை பூத்து ஈரப் பசை உலர்ந்த

பிறகும் வாடாதது மாதிரித் தோற்றமளிக்கும். அதுபோல், கமலாவின் உடம்பின் யௌவனத்தின் ஈரப்பசை வற்றியது. எனினும் அந்த வெளி அழகு குன்றவில்லை.

என்றாலும் கல்லூரி வாழ்க்கையில் பல வாலிபர்கள் அவளைச் சோதித்தார்கள்; அந்த அழகியை எவனும் கண்டால் சோதனைக்கு ஆளாகத்தான் செய்வான். ஆனால், கமலாவோ அந்தச் சோதனைக்கு ஆளாகாமல் தன்னைத்தானே சோதித்துக் கொண்டிருந்தாள்.

அவள் வாழ்க்கையில் பல சோதனைகள்—இல்லை—அவள் வாழ்க்கையே பெரிய சோதனை; அக்கினிப் பரீட்சை.

அதில் அவள் பொசுங்குவாளா, புடம் போடப்படுவாளா என்பது அவளுக்கே தெரியாது.

## 6

அன்புள்ள கமலிக்கு,

''இங்கு நல்ல சுகம். உன் சுகத்துக்கு எழுது. உனக்கு இந்த மாசத்தோடு பரீட்சை முடிந்துவிடுமே. முடிந்தவுடன் இங்கு உடனே வந்து சேர். அம்மா இதுவரை படித்ததே போதும் என்கிறாள். உன் விஷயமாய்த்தான் தினம் தினம் பேசுகிறாள். நீ எப்போது வருவாய் என்று காத்துக் கொண்டிருக்கிறாள்.........''

அப்பாவிடமிருந்து வந்த கடிதத்தைக் கமலா முழுவதும் படிக்கவில்லை. 'அம்மா என்னைப் பற்றி என்ன பேசுகிறாள்? கல்யாண விஷயமா? பாலுவுக்குத்தான் கல்யாணமாகி விட்டதே. வேறு வரன் பார்த்திருக்கிறாளா? இல்லையென்றால் படிப்புப் போதும் என்பானேன்?......'

அவளுக்கு அந்த வருஷத்தோடு கல்லூரிப் படிப்பு முடிகிறது என்றவுடனேயே அவள் இந்த விஷயமாய்ப் பயந்தாள். படிப்பு முடிந்து வீடு சென்று என்ன செய்வது? இங்காவது

படிப்பில் என்னை ஓரளவு மறக்க முடிந்ததே. ஊருக்குப் போனால்—

என்றாலும், அவள் ஊருக்குப் போகாமலிருக்கவில்லை. பரீட்சை முடிந்ததும் புறப்பட்டுச் சென்றாள்.

அவள் எதிர்பார்த்த பயம் வீண் போகவில்லை. போன அன்றே அம்மா கல்யாணப் பேச்சை எடுத்து விட்டாள். ஒன்றுக்கு மூன்று வரன் இருக்கிறதாம். கமலாவுக்கு என்ன பண்ணுவதென்றே தெரியவில்லை. தினம் தினம் மருகினாள். ஒருநாள் அப்பாவும் அம்மாவும் கல்யாணப் பேச்சு பேசிக் கொண்டிருக்கும்போது, கமலா ஆவேசத்தோடு சென்றாள்.

''அப்பா, எனக்குக் கல்யாணமே வேண்டாம்!''

பெற்றோர்கள் திகைத்துப்போயினர்.

''இதென்ன இது, இப்படிச் சொன்னவர்களையெல்லாம் நானும் பார்த்திருக்கேண்டி'' என்றாள் அம்மா.

''அதென்னமோ, கலியாணத்துக்கு ஏதாவது ஏற்பாடு செய்தால் நான் எதையாவது தின்றுச் செத்துப் போவேன்''. கமலா இதைச் சொல்லும்போது, தொண்டை அடைத்தது. உடனே உள்ளே ஓடிவிட்டாள்.

உள்ளேயிருந்து அவள் அழும் சப்தம் கேட்டது.

''இதென்ன கெடு புத்தி? பட்டணத்துக்குப் படிக்கப் போய் இப்படிக் கெடு புத்தியா வரவேண்டும்?'' என்றாள் அம்மா.

''பட்டணத்துக்குப் படிக்கச் செல்லும் பெண்கள் வேறு மாதிரிதான் கெட்டுப் போகிறார்கள். உன் மகள் இப்படிக் கெட்டாளே. அதைச் சொல்லு. அந்த மட்டில் திருப்திதான்'' என்றார் அப்பா.

கமலாவின் விம்மல் சப்தம் அப்போதும் கேட்டது.

# அரிவை

ஏனை அரிவை ஒருத்தி இகன்மாரன்
சேனை திரண்டனைய செவ்வியாள்;—வானில்
விடுசுடர்ச் செக்கர் வியாழமும் தோற்கும்
படிசுடர்ப் பைம்பொன் படியாள்;—வடிவு
நெடிதோர்க்கில் ஒக்கு நிறைமதியம்; நேரே
படி நோக்கும் முத்தின் படியாள்;—முடிவில்
குலபதும ராகம் அதி குதிகொள்ளும்
பல பதும ராகப் படியாள்;—அலைகடலின்
முற்றாமரையாள்; முகத்தாமரையாள்; அப்
பொற்றாமரையாள் அப்போதுவாள் !

—ராஜ ராஜ சோழன் உலா

# 25 - 30

க மலா வெற்றியடைந்து விட்டாள்.

அவள் அப்பாவும் அம்மாவும் அவளைக் கல்யாண விஷய மாய் எவ்வளவுதான் வழிக்குக் கொண்டுவர முயன்றும் பய னில்லை. மேலும், கமலாவின் பிடிவாதத்தைக்கண்டு அவர் களே விட்டுக் கொடுத்தார்கள். கமலாவின் அக்காவைக் கட்டிக்கொடுத்த இடத்தில் அவள் சுகப்பட்டு வாழவில்லை. அவள்புருஷன் தன் வீட்டாரின் நிர்ப்பந்தத்தினுல்தான் கல்யாணம் பண்ணிக்கொண்டான். ஆணுக்கோ பெண் ணுக்கோ இஷ்டமில்லாத கல்யாணம் சுகப்படாது என்று தம் மூத்த மகளின் வாழ்க்கை அவர்களுக்குக் கற்றுக்கொடுத் திருந்தது. எனவே கமலாவையும் நிர்ப்பந்தப்படுத்தி மணக்கச் செய்ய விரும்பவில்லை. ஆனுல், கமலா கல்யாணமே வேண்டாம் என்று சொல்வதன் மர்மம் அவர்களுக்குத் தெரியாமலே போயிற்று.

கமலா அதைப் பெரும் வெற்றியாகவே கருதினுள். தன் னுடைய ஆத்மபலத்தினுல்தான் பெற்றோர்கள் தன் இஷ்டப் படி விட்டு விட்டார்கள் என்று நினைத்தாள். அதனுல், அந்த ஆத்மபலத்தின் மூலமே தன் வாழ்வையும் வெற்றிகரமாகக் கொண்டு செலுத்த முடியும் என்று முடிவு கட்டினுள். ஆனுல், மனத்திலோ நிம்மதியே இல்லை. எந்த ஆத்மபலத்தால் அவள் பிறரை வெற்றி கொண்டாளோ, அதே ஆத்மபலம் அவளை உலுக்கி எடுத்தது.

'காரண காரியமற்று என் உள்ளம் இப்படிக் கொந்தளிப் பானேன்?'

அவள் தன் உள்ளத்தின் நச்சரிப்பை மறக்க எண்ணி மீண் டும் புத்தகங்களை நாடினுள். கவலையை மறக்கச் செய்யும் போதைப் பொருளாகப் புத்தகத்தைக் கருதினுள்.

ஒருநாள் அவள் ஹரீந்திரநாத் சட்டோபாத்யாயா எழுதிய 'அந்தி விளக்கு' என்ற நாடகத்தைப் படித்துப் பார்த்தாள்: ஒரு இளைஞன். அவன் நிழலைக் காதலிக்கிறான். ஒரு இளம் பெண் விளக்கோடு வருகிறாள். அவளுக்கு நிழலின் மீதுள்ள தன் காதலைக் கூறுகிறான். அவளைப் பிடிக்கிறான். சுவரில் அவர்களது நிழல்கள் சங்கமிப்பதைக் காட்டுகிறான்: 'அதோ நம் நிழல்கள் எப்படிக் கலக்கின்றன! அவை மணப்பதற்குப் புரோகிதன் வேண்டாம்; முகூர்த்தம் வேண்டாம். நிழல்களுக்குள் இனபேதம் கிடையாது. பொய்யும் புலையும் கிடையாது' என்கிறான் . . . .

அந்த நாடகம் அவளுக்குப் படிக்கச் சுகமாயிருந்தது. அவன் காதலிக்கும் அந்த நிழல் எது? அவள் அந்தக் கதையைத் தன்வழியில் அர்த்தப் படுத்திக்கொண்டாள்.

—அந்த நிழல்தான் ஆத்மா! அதற்குத்தான் இனபேதம் கிடையாது. ஆண் பெண் என்ற பாகுபாடு கிடையாது; சம்பிரதாயம் கிடையாது. ஆன்மக் கலப்பும் அப்படித்தான். நான் அந்த ஆன்மக் கலப்பைத்தான் விரும்புகிறேன். சூடும் குளிர்ச்சியும், பிறப்பும் இறப்பும், நேற்றும் இன்றும் அற்ற ஆன்ம முயக்கத்தைத்தான் நான் நாடுகிறேன்

கமலா தன் மனத்துக்கு அந்த நாடகத்தின் மூலம் சமாதானம் தேட முயன்றாள். ஆனால், தேகங்கள் சங்கமித்தால் தானே நிழலும் கலக்கும்: உடல் கலந்தால்தானே உள்ளமும் கலக்கும் என்ற உண்மை அவளுக்குப் புலப்படவில்லை. எப்படிக் கதையில் அந்த வாலிபன் அந்தப் பெண்ணை இழுத்து அணைத்ததை விட்டு விட்டு, நிழல்களைப் பற்றி மட்டும் பேசினானோ, அது போலவே வாழ்விலும் அவள் உடற் கலப்பை மறந்து விட்டாள்.

'ஆனால் எங்கள் இதயங்கள் சங்கமித்த பின்னும் என் உள்ளம் தவிப்பானேன்?'

அவளுக்கு அந்தக் கேள்விக்கு ஒரே ஒரு விடைதான் கிடைத்தது: 'நான் பெண். பெண் என்ற ஞாபகத்தால், என்னில் இன உணர்ச்சி ஏற்பட்டுவிடுகிறது. என் பெண்மைதான்

என்னை அலட்டுகிறது. எனவே நான் என் பெண்மையை மறக்கடித்துவிட்டால்? அதை எப்படி மறக்கடிப்பது? நானும் என் பெண்மையை மறந்து ஆண்களைப்போலவே பணியாற்றத் துணிந்தால்? அப்போது என் பெண்மைக்குணம் மறைந்து விடுமல்லவா? அப்போது இந்த வாதை இருக்காது.'

கமலா தன்னை மறக்கடிக்க மிகவும் முயன்றாள். தன் உள்ளத்தை வெற்றி கொள்ள விரும்பும் உடலை வேலையில் ஈடுபடுத்தி விட்டால், ஓரளவு நிம்மதி பிறக்கும் என்று தோன்றியது.

என்ன வேலை பார்ப்பது?

அதை அவள் உடனே தீர்மானித்து விடவில்லை. அதற்கிடையில் அவளுக்கு ஒரு நப்பாசை. தன் அக்கா எப்படிக் குடும்பம் நடத்துகிறாள், அவளைப்பற்றி அம்மா ஏன் வருத்தப்படுகிறாள்—இதையெல்லாம் தெரிந்து கொள்ள வேண்டுமென்று மனம் சொல்லிற்று. மேலும் அவளுக்குத் தன் உடன்பிறந்தாள் வீட்டுக்குச் சென்றாலாவது உள்ளத்துக்கு ஆறுதல் கிட்டாதா என்று சின்ன ஆசை.

மறுவாரமே அவள் அக்கா வீட்டுக்குச் சென்றாள்.

அக்கா இப்போது இரண்டு குழந்தைகளுக்குத் தாய். கமலாவுக்கு அக்காவின் குழந்தைகளைத் தூக்கிவைத்துக் கொஞ்சுவதில் அபார ஆசை இருந்தது. எப்போது பார்த்தாலும் அந்தக் குழந்தைகளோடேயே பொழுதைக் கழித்தாள். மூத்த பையன் இப்போதுதான் நன்றாகப் பேசப் பழகுகிறான். அவனது மழலை மொழியில் ஆனந்தம் கண்டாள். பிஞ்சுக் கால்கள், இத்தினி விரல்கள் சின்னஞ்சிறு மூக்கு, பயந்த கண்கள், நீர் வடியும் வாய்—அந்தக் குழந்தைகளின் மோஹனத்தில் கமலா தன் கவலையை ஓரளவு மறந்திருந்தாள். 'உண்மையில் குழந்தைதான் வீட்டின் திருவிளக்கு, செல்வம்' என்று நினைத்தாள். மறு கணமே அவளுக்கு 'எனக்கும் இப்படி ஒரு குழந்தை இருந்தால்—' என்ற எண்ணமும் உண்டாயிற்று.

ஆனால், அக்காவைப் பார்த்தால்—?

கமலாவின் அத்தான் படித்தவர்தான்; என்றாலும் குடிகாரர். வீட்டில் கமலா ஒரு விருந்தாளியாக வந்திருக்கிறாளே என்ற எண்ணம்கூட இல்லாமல், நன்றாகக் குடித்துவிட்டு வந்து அக்காளை உதைப்பார். அக்காவுக்கு அடி விழுவதைப் பார்த்து கமலா நடுங்குவாள். 'இந்த ஆண்களே இப்படித் தானா? பெண்களை வதைப்பவர்களா?' என்ற எண்ணம் அவளுக்கு உண்டாகும். ஆனால், அக்காவோ அத்தானை அடி வாங்கி, கண்ணீர் சிந்தி அழுதாலும், மீண்டும் உற்சாகத் தோடுதான் இருப்பதாக அவளுக்குப்பட்டது.

இது ஏன்? அவள் மன ஆறுதல் கொள்வது இந்தக் குழந்தைகளாலா? இல்லை. அத்தானிடமேதானா?

அவளுக்கு அக்காவின் வாழ்க்கை ஒரு புதிராக இருந்தது. இருந்தாலும் அவளாக எதுவும் கேட்கவில்லை. கேட்கத் துணியவில்லை.

ஒருநாள் அக்காவாகவே கமலாவிடம் பேச்செடுத்தாள். ''என்ன கமலா, நீ கல்யாணமே வேண்டாம் என்கிறாயாமே. ஏன் இந்தப் புத்தி?'' என்று கேட்டாள்.

''அக்கா, கல்யாணம் பண்ணி நீ என்ன சுகத்தைக் கண்டாய்? அத்தானிடம் தினம் அடி வாங்குவதுதான் உனக்கு மிச்சம்'' என்றாள் கமலா.

''நானும் எவ்வளவோ சொல்லித்தான் பார்க்கிறேன். அவர் சுயபுத்தியில் இருந்தால் இப்படி அடிப்பாரா?''

''எப்படியும் அடி அடிதானே!''

''போடி, அடிக்கிற கைதான் அணைக்கவும் செய்யும்.''

கமலா அக்காவைப் புரிந்துகொள்ள முடியவில்லை. என்ன பேசுவதென்று தெரியாமல் மௌனமாயிருந்தாள்.

''புருஷனுக்குப் பயந்து கல்யாணமே வேண்டாம் என்பார்களோ?'' என்று அக்காவே ஆரம்பித்தாள்.

''அதற்காக, கஷ்டப்படச் சொல்கிருயா?''

''கமலா, இப்போது தெரியாது. பின்னுல் நீதான் கஷ்டப் படுவாய். இதோ பார், கல்யாணம் பண்ணினுல் கஷ்டநஷ்டம் இருக்கத்தான் செய்யும். ஆனுல், கல்யாணம் பண்ணுவிட்டால், கஷ்டமாகவேதான் இருக்கும்'' என்ருள்.

கமலாவுக்கு உண்மையில் வாழ்க்கை கஷ்ட மயமாகத் தான் இருந்தது. ஆனுல், அது வேறு கஷ்டம். இருந்தாலும் அவள் அக்கா சொன்னதை ஒப்புக்கொள்ளவே இல்லே, ஆனுல் அதே சமயம் கமலாவுக்கு 'கல்யாணத்தால் எனக்குக் குழந்தை கிடைக்கும்' என்ற நினைப்பும் எழுந்தது. 'ஆனுல் குழந்தைக்காக என் லட்சியத்தையே விட்டுவிடுவதா?' அவள் மனம் அதற்குத் துணியவில்லே.

என்ருலும், அவளுக்கு அக்கா வீட்டுக்கு வந்ததிலிருந்து குழந்தைப் பைத்தியம் மனசில் குடிகொண்டது. அந்தப் பைத்தியத்துக்குக் காரணம் தன்னுள் குமுறிக்கொண்டிருக்கும் தாய்மை உணர்ச்சியின் போராட்டம்தான் என்பதை அவள் உணரவில்லே.

'எனக்குக் குழந்தை வேண்டும். அதற்கு வழி? ஒரு வேலே பள்ளி உபாத்தியாயினியாகப் போனுல்—? அப்போது பள்ளிக் குழந்தைகளின் சகவாசத்தில் எனக்கு ஆறுதல் கிடைக்காதா?'

அன்றே அவள் உபாத்திமைத் தொழிலே மேற் கொள்வதாகத் தீர்மானித்து விட்டாள்.

## 2

''த்திரிகையில் ஒரு விளம்பரம் வந்திருந்தது:

பள்ளி உபாத்தியாயினி தேவை—வயது 20—30; நல்ல அழகிய பெண்கள் விண்ணப்பிக்கவும்; சம்பளம் ரூ. 100. அனுதைச் சிறுவர் ஆசிரமம், தேவபுரம்.

கமலா சிறிதும் தாமதியாமல் அந்த வேலைக்கு மனுப் போட்டாள். மறு வாரமே அவளுக்கு நேரில் வரச்சொல்லிக் கடிதம் வந்தது.

புறப்பட்டுச் சென்றாள்.

அந்த அனாதை ஆசிரமத்தில் ஐம்பது பிள்ளைகள் இருந்தார்கள். எல்லாம் பத்து வயதுக்கு உட்பட்டவர்கள் தான். ஆசிரமத்துக்குள் நுழைந்ததுமே குழந்தைகளின் கோலாகலம் கமலாவின் மனசுக்கு இனிமை தந்தது. நேரே ஆசிரம ஆபீசுக்குச் சென்றாள். அங்கு ஒருவர் உட்கார்ந் திருந்தார். அவருக்குச் சுமார் ஐம்பத்தைந்து வயதிருக்கும். தலையில் சிறு வழுக்கை. உதடு வெற்றிலையை ஒதுக்கி ஒதுக்கி மூன் தொங்கிப்போயிருந்தது.

''நமஸ்காரம்.''

''வாங்க, நீங்கதான்......''

''கமலா.''

''உட்காருங்கள்.''

அவர் தம் நாற்காலியைக் கொஞ்சம் நெருக்கி இழுத்துப் போட்டுக்கொண்டார். ஏதேதோ விசாரித்தார். கமலா சுருக்கமாகப் பதில் சொன்னாள்.

''சரி உங்களுக்குக் கல்யாணமாகியிருக்கிறதா?''

இந்தக் கேள்வியை அவர் ஏன்தான் கேட்டார் என்றி ருந்தது. இங்குமா அந்தப் பேச்சு?

''இல்லை, ஏன்?''

''இல்லை. கல்யாணமாயிருந்தா ஆசிரமப் பிள்ளைகளைக் கவனிப்பதைவிட, சொந்தப் பிள்ளைகளைக் கவனிப்பதில்தான் அதிகக் கவனமிருக்கும். அதற்காகக் கேட்டேன்'' என்றார் அவர்,

கமலா அங்கு வேலை ஒப்புக்கொண்டாள்.

குழந்தைகளோடு அவள் ஆனந்தமாகப் பொழுதைக் கழித்தாள். ஆனால், ஆசிரமத் தலைவர் அடிக்கடி அவளிடம் வந்து பேச்சுக் கொடுத்து நிம்மதியைக் குலைப்பதுதான் அவளுக்குப் பிடிக்கவில்லை. அவர் அவளிடம் தாராளமாகப் பழகினார். அவர் நடத்தைக்கு என்ன அர்த்தம்? அந்தக் குழந்தைகளோடு அவர் அவளையும் குழந்தையாகக் கருதினாரா? அது தந்தையின் பாசமா? இல்லை . ...

அதற்கு விடை அவளுக்கு ஒருநாள் இரவு நடுச்சாமத்தில் கிடைத்தது.

கமலா தன் விடுதியில் தூங்கிக்கொண்டிருந்தாள். கதவு தட்டும் ஓசை கேட்டது. 'யாராயிருக்கும்?' அவள் கதவைத் திறந்தாள். வெற்றிலை குதப்பிய வாயோடு சிரித்துக் கொண்டே தலைவர் உள்ளே வந்தார்.

''என்ன விஷயம் ? இந்நேரத்தில்''

''தூக்கம் பிடிக்கலெ. அதுதான் வந்தேன், ஏன் நிக்கிறே? இப்படி உக்காரு.''

அவர் அவள் கையை எட்டிப்பிடித்தார்; அவள் கையை உதறிப் பிடுங்கினாள். அவர் முகத்தை ஏறிட்டுப் பார்த்தாள். கண்கள் சிவுசிவென்றிருந்தன—இரையை நெருங்கும் புலியின் பார்வைமாதிரி. கமலாவுக்கு சைரந்திரியை நெருங்கும் கீசகன் கதை ஞாபகத்துக்கு வந்தது.

மறுகணம் எல்லாம் உணர்ந்துவிட்டாள்.

''தயை செய்து வெளியே போங்கள்''—கமலா கத்தினாள்.

''எங்கே போவது? லட்டு மாதிரி நீ நிக்கிறே. திங்காமப் போகலாமா, தங்கம்!'' அவர் விகாரமாகச் சிரித்தார். மறுகணம் அவளை இழுத்துப் பிடித்து அணைக்க முற்பட்டார். கமலா திக்கு முக்காடினாள்; சத்தம் போட்டாள். ஆனால் மறுகணமே அவள் கையில் மேஜை மீது இருந்த பின்னல்

ஊசி அகப்பட்டது. தப்பிப்பதற்காக அவள் தன் பலம் கொண்ட மட்டும் அவரைக் குத்தினுள். வலி தாங்க மாட்டாமல் அவர் பிடியை விட்டு விலகினுர்.

''குத்தினு, உட்டுடுவேன்னு பாத்தியா?''

அவர் அவளை நெருங்குமுன் அவள் அவரைத் தாக்கு வதற்குத் தயாராகிவிட்டாள். அவள் கையில் தான் உட்கார்ந் திருந்த நாற்காலியையே கண்டதும் அவர் பின் வாங்கினுர்.

''இங்கேதானே இருக்கே; பாத்துக்கிறேன்''

அவர் வெளியே போய்விட்டார்.

கமலா கதவைச் சாத்திவிட்டு அழுதாள். பிறகு எதையோ தீர்மானித்ததுபோல் மூட்டை முடிச்சுகளைக் கட்டி எடுத்துக் கொண்டு இரவோடு இரவாய்ப் புறப்பட்டுப் போனுள்.

ரயில்வே ஸ்டேஷனில் அவளை ஒரு வண்டிக்காரன் அடை யாளம் கண்டு கொண்டான். ''ஏம்மா, நீங்கதானே அனுதை ஆசிரமத்துக்கு வாத்திச்சியம்மா?'' என்ருன்.

''ஆமாம்'' என்று யோசித்துப் பதில் சொன்னுள்.

''இப்ப எங்க ஊருக்கா? லீவா?''

''இல்லை வேலையை விட்டுவிட்டேன்.''

''சரிதாம்மா, இந்த ஆசிரமத்துக்கு வேலைக்கு வந்த வங்க இப்படித்தான். இருக்கதே கிடையாது. அந்தக் கிழவன் ஆசிரமமா நடத்துருரு? அங்கே இருக்கிற அனுதைப் புள்ளை களுக்கெல்லாம் அவன்தான் தகப்பனே என்னமோ?''

''இதற்கெல்லாம் கேள்விமுறை கிடையாதா?'' என்று ஆத்திரத்தில் கேட்டாள் கமலா.

''கேள்வி முறையாவது? ஆசிரமம் நடத்துறேன்னு ஊரிலெ பணத்தைப் பிரிச்சி ஏப்பம் விடுறதுதான் நடக்குது. பணம் இருந்தா, இந்தக் காலத்திலே யாரம்மா தட்டிக் கேக்கிரு?''

கமலா பெருமூச்சு விட்டாள்.

## 3

'ஆண்கள் என்றாலே பெண்களைக் கெடுப்பவர்கள்தானா? ஆனால் சுகுமாரன்? அத்தனை நாள் பழகியும் அவர் என் கன்னிமையைக் களவாட விரும்பினாரா? இல்லையே. அது ஏன்? அந்த மாதிரி மனோபாவம் படைத்த ஆண்களே கிடையாதா?'...

கமலாவின் மனம் ஊருக்கு வந்த பின்னும் நிம்மதியடைய வில்லை. மீண்டும் தன்னை மறக்கச் செய்ய ஏதாவது வேலை செய்ய வேண்டும் போலிருந்தது. அந்தப் பரபரப்பில் அவள் என்ன செய்வதென்று தெரியாமல் திகைத்தாள். அந்தச் சமயம் அவளோடு படித்த தோழி ஒருத்தி சென்னையில் சமூக சேவை செய்து வந்தாள்; கமலாவுக்கு அவளோடு சேர்ந்து தானும் சமூகசேவை செய்தால் என்ன என்று பட்டது.

மறு நாளே அவள் சென்னைக்குப் புறப்பட்டு வந்து சேர்ந்தாள்.

சென்னையில் தன் தோழி சுசீலாவுடன் கமலாவும் பொது ஜன சேவையில் ஈடுபட்டாள். அப்போதுதான் அவளுக்குத் தியாகி சோம சுந்தரத்தின் பரிசயம் ஏற்பட்டது. ஒரு பஞ்ச நிவாரண நிதிக்காகக் கமலாவும் சுசீலாவும் ஒரு நாடகம் நடத்த ஏற்பாடு செய்தார்கள். அந்தச் சமயம்தான் சோமசுந்தரம் அவர்கள் குழுவில் கலந்து கொண்டான்.

சோமசுந்தரம் பார்வைக்கு அழகானவன்; தூய வெள்ளை கதராடை அவன் முக சாந்தியை எடுத்துக் காட்டும் பின்னணி போல விளங்கும். நெற்றியில் விழுந்து புரளும் கருமயிர்ச் சுருள்கள் அழகு காட்டும். நல்ல இளைஞன். வயது முப்பதுக்குள் இருக்கும்.

சோமசுந்தரம் யாரிடமும் சிரித்துச் சிரித்துப் பேசுவான். கமலா அவன் சகவாசத்தில் தன்னையும் அறியாமல் ஆனந்தம் கண்டாள். அவனோடு பழகும்போது அவள் சுகுமாரனின்

நினைவைக்கூட மறந்திருந்தாள். ஆனால் சோமசுந்தரமே ஒரு நாள் சுகுமாரனை நினைவுக்கிழுத்துவிட்டான்.

இருவரும் கவிதையைப் பற்றி ஏதோ பேசும் போது சுகுமாரன் பெயர் வந்தது.

"சுகுமாரின் கவிதைகளை நானும் படித்திருக்கிறேன். நல்ல கற்பனை, நல்ல கவித்துவம்" என்றாள் கமலா.

"இதோ பாருங்கள் கமலா, உங்களுக்குச் சுகுமாரின் கவிதையைத்தானே தெரியும். எனக்கு அவனையே தெரியும்."

"அப்படியா?" என்று பிரமித்தாள் கமலா. அவளுக்குப் பழைய ஞாபகங்களெல்லாம் வந்தன. சுகுமாரன் சொன்ன சோமு இந்தச் சோமசுந்தரம்தானா?

"அவன் என்னோடுதான் படித்தான். நன்றாகத்தான் கவிதை எழுதினான். இப்போதென்னடா என்றால்—"

"என்ன?"

"காளிதாசன் கெட்டது கேடு. உமார் கய்யாமின் கவிதையைப் போலவே வாழ்கிறானும். கூத்தி, குடி!....."

கமலாவுக்குக் காதில் நாராசம் பாய்ந்தது போலிருந்தது. அவளையும் அறியாமல் வார்த்தை பிறந்தது.

"இருக்காது!"

"இருக்காதா? அவன் மட்டும் அல்ல. அவன் கவிதையும் அப்படிப் போயிற்று. எனக்குப் பாட்டு ஞாபகமில்லை. கடைசியாக அவன் எழுதியுள்ள ஒரு பாட்டின் கருத்து மட்டும் ஞாபகமிருக்கிறது. சொல்லக்கூடக் கூசுகிறது. இன்பம் எதுவாம் தெரியுமா? குடிபோதையில் இருக்கும்போதோ, கூத்தியாள் மடியில் படுத்திருக்கும்போதோ, அருமையான கவிதையை வாசிக்கும் போதோ உயிர் போய்விட வேண்டுமாம்.

அந்த மரணவேளைதான் இன்பமாம். இதுதான் அவனது மணிக் கருத்து!"

கமலாவுக்கு அதற்குமேல் பேச ஓடவில்லை. பேச்சைச் சுருக்கி விட்டாள்.

அன்றிரவு தூக்கமே வரவில்லை. சுகுமாரனைப் பற்றிக் கேள்விப்பட்ட தெல்லாம் மனசில் உறுத்திக் கொண்டிருந்தன: 'உண்மையில் சுகுமாரன் இப்படி மாறியிருப்பாரா? அவர் என்னிடம் காட்டிய காதல் இதுதானு? இல்லையெனில் பின்னுல் அவர் மனம் மாறி விட்டாரா?... ஆனுல் அவர் காதலுக்குக் கட்டுப்பாடு கூடாதென்ருரே. அதனுல்தான் அவர் வாழ்க்கையே கட்டுப்பாடற்றுப் போய் விட்டதா? இதற்குத்தானு அவரை நான் காதலித்தேன்?...'

கமலா மௌனமாகக் கண்ணீர் விட்டாள், அவள் மனசில் சுகுமாரனின் அழகிய உருவம் நிறைந்து நின்றது. ஆனுல் அதே சுகுமாரன் இப்போது எப்படியாகி விட்டான்? ஆனுல் அவள் காதலிப்பது இந்தச் சுகுமாரன் அல்ல; தன் ரோமியோ, தன் காயிஸ், தன் சந்திரா பீடன்! அந்தக் காவிய நாயகன் செத்துப் போய் விட்டானு?

கமலா கடைச்சாமத்தில்தான் தூங்கினுள். அதுவும் அயர்ந்த தூக்கம் அல்ல. கோவையற்ற, தெளிவற்ற எத்தனையோ கனவுகள்.

—குழந்தைகள் அவளைச் சுற்றி ஆடுகின்றன; திடீரென அதே குழந்தைகள் வளர்ந்து பெரியவர்களாகி, பேய்கள் போல ஆடுகின்றன; அவளை பலாத்காரம் செய்ய முனைகின்றன! ... சுகுமாரன் செங்குத்தான மலை மீதேறி, கமலாவைப் பார்க்க ஓடி வருகிருன். திடீரென பாறை வழுக்குகிறது. கால் தவறிச் சாய்கிருன். உருண்டோடுகிருன். கமலா 'ஐயோ!' என்று கத்துகிருள். ஓடிப்போய்ப் பார்க்கிருள். சுகுமாரன் பிணமாகி விட்டான்!.....

கமலா திடுக்கிட்டு விழித்தெழுந்தாள். அவள் உடம்பெல்லாம் நனைந்திருந்தது. கழுத்தில் வியர்வை பிசுபிசுத்தது.

'நான் ஏன் இந்தக் கனவு கண்டேன்? சுகுமாரனின் மரணத்தையா நான் விரும்புகிறேன்? இல்லையெனில் என்னைப் பொறுத்தவரையில் அவர் செத்தாக வேண்டும் என்று விரும்புகிறேனா! அவரை நான் மறக்க விரும்புகிறேனா? சுகுமாரன் எங்கே, சோமு எங்கே?...'

அவள் கண்முன் சோமுவின் உருவம் தோன்றியது. 'சோமு, சோமு' என்று அவள் வாய் முனகியது. அவளுக்கு ஏனோ சோமுவை அப்போதே பார்க்க வேண்டும் போலிருந்தது. எதற்காக அவரை நான்—' கமலா அந்த எண்ணத்தை மனசுக்குள்ளாகவே மென்று விழுங்கப் பார்த்தாள். ஆனால் மீண்டும் மீண்டும் அவள் மனம் சோமுவை நாடியது.

'நான் அவரைக் காதலிக்கிறேனா?'

அதை அவள் எண்ணியபோதே அவளுக்குச் சிரிப்பு வந்தது. இத்தனை நாள் கழித்து இது ஒரு சோதனையா?

அன்று பொழுது விடிந்ததுமே அவள் தங்கள் சங்கக் கட்டிடத்துக்கு வந்து விட்டாள். பத்து மணிக்கு சுசீலா சோமுவோடு வந்து சேர்ந்தாள்.

''என்ன கமலா, ஏது காலமே வந்துட்டே?''

''இன்னைக்கு நாடகமில்லே! அதுதான்''

கமலா பொய்தான் சொன்னாள். அவள் மனம் 'உண்மையில் நீ தான் நாடகம் ஆடுகிறாய்' என்றது.

அன்று முழுதும் கமலா சோமுவுடன் சுமுகமாகப் பழகினாள். சோமுவுடன் பேசுவதில், பார்வை பரிமாறுவதில், சிரிப்பதில் குதூகலம் கண்டாள். அவள் அன்றைக்கு ஓடியாடி உழைத்த உழைப்பைக் கண்டு சுசீலாகூட அதிசயித்தாள். கமலாவுக்கு உடம்பில் புதுவேகம் குடிகொண்ட மாதிரி இருந்தது.

இரவு நாடகமும் ஆரம்பமான வேளை.

கமலாவுக்கு கிரீன் ரூம் டிபார்ட்மென்டின் பொறுப்பு விடப் பட்டிருந்தது. பெண் நடிகர்களுக்கெல்லாம் அவள் தான் 'மேக்அப்' செய்து கொண்டிருந்தாள். சுசீலா நாடகத்தில் ஒரு நடிகை. ஆனுல், அவள் இன்னும் பவுடர் போட்டுக் கொள்ளவில்லை. அவளுடைய பாகம் கடைசியில் தான். இருந்தாலும், வேலை முடிய வேண்டுமல்லவா?

கமலா சுசீலாவைத் தேடிச் சென்ருள்.

நாடகம் நடந்து கொண்டிருந்ததால், மேடை விளக்குகள் தவிர மற்ற விளக்குகள் அணைந்திருந்தன. கிரீன் ரூமுக்கு அடுத்த அறையிலும் விளக்குகள் அணைந்திருந்தது. கமலா அந்த அறைக்குள் தன் கையிலிருந்த டார்ச் ஒளியைத் திருப்பினுள்.

அங்கு அவள் கண்ட காட்சி—

சோமுவும் சுசீலாவும் அலங்கோலமான நிலையில், சில வருஷங்களுக்கு முன்னுல் லலிதா காட்டிய 'அசிங்கமான' சித்திரத்தில் இருந்தது போல் ஒருவரையொருவர் கட்டி அணைத்துக்கிடந்தார்கள்!

கமலா திடுக்கிட்டுப் போனுள். உடனே டார்ச்சை அணைத்து விட்டுத் திரும்பினுள். நாடக மேடையில் இருக்கக் கூட அவளுக்குப் பிடிக்கவில்லை. வெளிக்கிளம்பி விட்டாள்.

அவள் மனம் குமுறியது: 'இதுதான் சமூக சேவையா? சமூக சேவை என்ற போர்வையில் இந்த அக்கிரமங்கள்தான் நடக்கின்றனவா? சோமுவைப் பற்றி நான் என்னவெல்லாம் நினைத்தேன்? அவரும் அந்த ஆசிரமத் தலைவரைப் போலத் தானு? இதுதான் தியாகமா? சுசீலா மட்டும் என்ன? கல்யாணமானவள்—ஒரு குழந்தைக்குத் தாய்—அவளுமா இப்படி?

கமலாவுக்கு மனித குலத்திலேயே நம்பிக்கை இழப்பது போலத்தோன்றியது.

# 4

மறுநாள் காலை கமலா மனநிம்மதியை நாடி கடற்கரைக்குச் சென்றாள். கடற்கரைக் காற்று அவளுக்கு ஓரளவு ஹிதம் தந்தது. படுத்துக் கிடந்து தன் நினைவை எங்கெங்கோ திரிய விட்டாள்: 'என் வாழ்க்கை ஏன் இப்படி ஒரே சோதனை மயமாயிருக்கிறது? இல்லை. நான்தான் என்னைச் சோதிக்கிறேனா?'

அவள் தன்னையே ஆராய்ந்து கொண்டிருந்தாள். அவளுக்கு மன நிம்மதியே இல்லை. எனவே யாராவது பேச்சுத் துணைக்குக் கிடைத்தால் நல்லது எனக் கருதினாள். ஆனால், அங்கு யாரிடம் போய்ப் பேசுவது?

அப்போது காற்றில் சுகந்தமான மணமும் பட்டாடையின் பரபரப்பும் மிதந்து வந்தன. கமலா திரும்பிப் பார்த்தாள். யாரோ ஒரு நவநாகரிக யுவதி நடந்து சென்றாள். அவளை எங்கோ பார்த்த மாதிரி இருந்தது. 'அவளும் என்னைப்போல் ஏன் இப்படி ஒதுக்கமான இடமாகப் பார்த்து உலவ வருகிறாள்? கமலா அந்தப் பெண்ணின் முகத்தைக் கூர்ந்து பார்த்தாள்.

''லல்லு!''

அந்தப் பெண் திரும்பினாள்.

சிநேகிதிகள் இருவரும் ஒருவரை யொருவர் சந்தித்த பரவசத்தில் ஒருவரை யொருவர் கட்டித் தழுவிக் கொண்டனர். சிறிது நேரம் எதுவுமே பேசவில்லை. பரவசம் தெளிந்த பின்னர்தான் இருவரும் வாய் திறந்தார்கள்.

''என்ன லல்லூ.! இப்போதென்ன செய்து கொண்டிருக்கிறாய்?''

''சினிமாவில் நடிக்கிறேன்.''

''சினிமாவா? ராமு?''

''அவன் பேச்சை எடுக்காதே. பாவி! ஏதோ எனக்குக் கெடுபுத்தி. என்னை அவன்தான் இந்தக் கோலத்துக்கு ஆளாக்கி விட்டுவிட்டான்!''

இருவரும் ஒரு நிமிஷம் மௌனமாயிருந்தனர்.

''சரி. கமலீ! உனக்குக் கல்யாணமாகி விட்டதா? குழந்தை இருக்கா?''

''இல்லேடி,''

''ஏன்?''

''பண்ணிக்கலே. எனக்குக் கல்யாணம் பண்ணிக்கவே பிடிக்கலே.''

''கமலா நான் சொல்றேன்னு நினைக்காதே. இந்த உலகில் எந்தப் பெண்ணும் தனித்திருந்தால் யோக்யமாகவே வாழ முடியாது. ஆண்கள் நம்மைக் கெடுத்து விடுவார்கள். இது என் அனுபவம்.''

''கெடுக்காமல் பார்த்துக் கொண்டால்?''

''நம்மையறியாமலேயே நாம் கெட்டு விடுவோம், கமலா உன்னிடம் என்ன வெட்கம்? என் வாழ்க்கையே கெட்டு விட்டதடி? சினிமாவில் சேர்ந்தால் சுகமாக வாழலாம் என்று நான் பட்டினி கிடந்தபோது நினைத்தேன்: இன்று என்பசி ஆறிவிட்டது. அதற்காக எத்தனையோ பேரின் ஆசைப்பசிக்கு நான் இரை கொடுத்தேன்—கொடுக்க நேர்ந்தது!''

கமலா லலிதாவின் குரூரமான வாழ்க்கையைக் கண்டு நடுங்கினாள். பிறகு தனக்கும் அந்தக் கதிதானோ என்று பயந்தாள். அதை மறைப்பதற்காக, ''நாமும் ஆண்களைப் போலவே நடந்து கொண்டால்—'' என்றாள்.

''அது எப்படி முடியும்? சினிமாவில் நடிக்கும் பெண்கள் ஆண் வேஷம் போட்டாலும் பார்ப்பவர்களுக்குப் பெண்ணாகத் தான் தோன்றுவார்கள். நான்கூட ஒரு தடவை போட்டு

விட்டு, பெயரைக் கெடுத்துக் கொண்டேன். நாம் ஆணாக நடப்பதென்பது வெறும் பிரமை. உடலிலும் சரி, உள்ளத்திலும் சரி'' என்றாள் லலிதா.

லலிதாவுக்கு எவ்வளவு அனுபவம் வந்து விட்டது? ஆனால், அவள் தன் வாழ்க்கையையே பலியிட்டல்லவா அந்த அனுபவம் பெற்றாள்; கமலா என்ன பேசுவதென்று தெரியாமல் இருந்தாள்.

''கமலா கோவிச்சுக்காதே. உனக்கு வயசு ஒண்ணும் அப்படி அதிகமாகலெ. யாராவது ஒருத்தரைக் கல்யாணம் பண்ணிக்கோ.''

''இன்றுவரை கன்னியாகவே இருந்து விட்டேன். இனி மேல் இருக்க முடியாதா, லல்லு!''

''வரப்போவதை யார் கண்டார்கள்?''

லலிதாவைச் சந்தித்தது கமலாவுக்கு உண்மையிலேயே மிகவும் குதூகலம் தருவதாக இருந்தது. 'ஆனால் லலிதா சொன்ன அந்த விஷயம்? நான் கல்யாணம் பண்ணிக் கொள்ள வேண்டுமா? யாரை?......இல்லை. யாரையும் இல்லை. நான் கல்யாணமே பண்ண மாட்டேன்!'

கமலா தனக்குத்தானே பேசிக்கொண்டாள்.

# தெரிவை

...ஓர் அணங்கு

கோது விரவாக் கொழும்பாகு ; கொய்தளிரின்
போது புலராப் பொலங்கொம்பு ;—மீது
முயலால் அழுங்கா முழுத் திங்கள் ; வானில்
புயலால் அழுங்காப் புதுமின் ;—இயல் கொண்டு
எழுதாத ஓவம் ; எழுசிறைய வண்டு ;
கொழுதாத கற்பகத்தின் கொந்து ;—முழுதும்
இருளாக் கலாபத்து இளந்தோகை ; என்றும்
தெருளாக் களியளிக்கும் தேறல் ;—பொருளால்
வருந்தக் கிடையாத மாணிக்கம் ; யார்க்கும்
அருந்தத் தெவிட்டா அமுதம்!

—விக்கிரம சோழன் உலா.

## 30 · 35

கமலா இன்னும் கன்னிதான்; ஆனல் யுவதியல்ல.

புதுப் பாத்திரமானுலும் உபயோகிக்கா விட்டால் களிம்பேறி விடும். கமலாவும் அந்தப் பாத்திரத்தைப் போலத் தான் இருந்தாள், அவள் மேனி மினுமினுப்பு இழந்து வாடிப் போயிருந்தது. முகத்தில் பருவத்தின் கீறல்கள் பதிய ஆரம்பித்தன. கன்னக் கதுப்புகள் பூரிப்பும் வழவழப்பும் இழந்து ஒடுங்கியிருந்தன. உடம்பும் முன் மாதிரி இல்லை; ஓரளவு வற்றி நெட்டுவிட்டு வளர்ந்தாற்போல் தோன்றியது. இருந்தாலும் அழகின் கவர்ச்சி இல்லாமலில்லை. களை இருந்தது. சோகை பிடித்தது போன்ற பசலைக் கவர்ச்சி. அந்தப் பசலையை மறைக்க, மற்றப் பெண்களைப் போல் அவள் எந்த அலங்கார சாதனங்களையும் தேடவில்லை; அவளுக்கு அது தேவையும் இல்லை.

கண்ணுடியின் முன் நின்று தன் தோற்றத்தைத் தானே பார்த்து அதில் நிகழ்ந்து போன மாறுதலை ஆராய்ந்து கொண்டிருந்தாள் கமலா. காரைக்காலம்மை ஆண்டவனிடம் பேயுருவம் வேண்டிப் பெற்றதுபோல், கமலாவும் தன் உடம்பின் கவர்ச்சி எப்போது அழியும் என்றே எதிர்பார்த்துக் கொண்டிருந்தாள்.

'அழகு இருக்கும்வரை என்னுல் இந்தச் சமூகத்தில் பயமின்றி நடமாட முடியாது; என் சோதனைகளும் வெற்றி பெருது. என் அழகைக் கண்டுதானே பாலு முத்தமிட்டான்; ஆசிரமத் தலைவர் வெறி கொண்டார். இந்த அழகு இல்லா விட்டால்—'

அவள் இந்த ஆராய்ச்சி செய்வதற்குக் காரணம் இருந்தது. சில மாதங்களுக்கு முன்னுல் அவள் ஒரு சர்க்கார் விளம்பரத் தைக் கண்டு ஒரு மனுப் போட்டு வைத்திருந்தாள். அவன்

மனு ஏற்கப்பட்டு வேலைக்கு உத்தரவு வந்திருந்தது. ஒரு செகண்டரிக் கல்லூரியில் லெக்சரர் உத்யோகம்.

'உத்யோகத்தை ஏற்பதா, வேண்டாமா?'

இந்தக் கவலைதான் அவளை நாலு நாட்களாய் வாட்டிக் கொண்டிருந்தது. ஒப்புக் கொள்வதென்றால், இன்றிரவே புறப்பட்டாக வேண்டும்.

கமலா தன் மனத்தின் உறுதியை பரிசீலனை செய்து பார்த்தாள்: 'என் உடம்பிலே பழைய மோஹனம் இல்லை; என்னைக் கண்டு யாரும் மோகிக்க மாட்டார்கள், நானும் எத்தனையோ சோதனைகளைக் கடந்து விட்டேன். என் உள்ளம் இறுகி விட்டது. இனி ஆண்கள் மட்டுமல்ல; என் உடலே என்னைச் சோதிக்காது.'

கமலாவுக்கு மனசில் தைரியம் பிறந்தது: அன்றிரவு மெயிலில் புறப்பட்டு விட்டாள்.

2

முதல் நாள்.

ஜூனியர் இண்டர் வகுப்பில் கமலா பாடம் நடத்தச் சென்றாள். வகுப்பிலுள்ள மாணவர்களை அறிமுகப்படுத்திக் கொள்வதற்காக, ஒவ்வொரு பையனையும் எழுந்து நின்று தன் பெயரைச் சொல்லச்சொன்னாள். பையன்கள் ஒவ்வொருவராக எழுந்து நின்று பெயர்களைச் சொல்ல ஆரம்பித்தனர்.

ராமசாமி—கோவிந்தன்—நடராஜ்—பாலன் ....

பாலன் என்ற பையன் தன் பெயரைச் சொல்லி முடித்ததும், கமலா 'நிறுத்துங்கள்' என்றாள். பையன்கள் விஷயம் புரியாமல் விழித்தனர்; பாலன் மட்டும் உட்காராமல் அப்படியே நின்று கொண்டிருந்தான்.

கமலா பாலனைப் பார்த்தாள்; அந்தப் பையனின் முகத்தைப் பார்த்ததும் அவளுக்கு நெஞ்சுக்குள் சுளுக்குவது

போலிருந்தது. அதோ நிற்பது பாலனா? இல்லை சுகுமாரனா? அவள் ஒரு கணம் திகைத்து விட்டாள்.

பாலன்—இந்தப் பையன் அப்படியே சுகுமாரனை உரித்து வைத்தாற் போலிருக்கிறான். அதே கண்கள். அதே முகச் சாடை. குவிந்து நின்று எப்போதும் புன்னகை பூப்பதுபோல் தோன்றும் அதே உதடுகள். கண்ணின் பாய்ச்சலை அளந்து காட்ட உதவும் அளவுகோலைப்போல் முன் நீண்டு அழகாக வளைந்த அதே மூக்கு .....

கமலாவுக்கு அந்த நிமிஷமே சுகுமாரனின் எண்ணம் நெஞ்சில் கிளர்ந்தது. எந்தத் திருவுருவத்துக்காக அவள் கண்கள் பூத்து, ஏங்கிக் கொண்டிருந்தாளோ அதே திவ்ய மூர்த்தம் அவள் கண் முன்னே நின்றது. ஆனால், அவள் காண விரும்பியது சுகுமாரன்; பாலனையல்ல.

என்றாலும் அவளால் வைத்த கண்ணைத் திருப்பி வாங்க முடியவில்லை. 'ஒருவேளை பாலன் சுகுமாரனுக்குப் பிறந்த பிள்ளையா? இருக்க முடியாது, இவ்வளவு வயதுக்கு அவருக்கு ஒரு மகன் இருக்க முடியாதா?......'

அவள் தனக்குத்தானே மிகவும் யோசித்துக் கொண் டிருக்கவில்லை.

''உன் பெயர் பாலனா?''

''ஆம்''

''உன் தந்தையின் பெயர்?''

''ராஜகோபால்.''

கமலா ஒரு கணம் யோசித்தாள். ''என்ன பாலன்? உனக்குச் சகோதரர் யாராவது இருக்கிறார்களா?''

''ஆம்?''

''பெயர்?''

''சுகுமாரன்.''

''சுகுமாரன் தம்பியா? அதுதான் கேட்டேன்.''

''அண்ணுவை உங்களுக்குத் தெரியுமா?''

''இல்லே. தெரியாது. படம் பார்த்திருக்கிறேன்—பத்திரிகையில்'' என்று சம்பந்தா சம்பந்தமற்ற வார்த்தைகளைச் சொல்லி மழுப்பிஞள் கமலா.

அன்று கமலாவுக்குப் பாடம் சொல்லித் தரவே முடியவில்லே. 'எங்கே வாத்தியாரம்மா சக்தி இவ்வளவுதாஞ' என்று பையன்கள் கருதிவிடக் கூடாதே என்று பயந்தாள். எனவே அன்று முதல் நாளாதலால் வகுப்பைக் கலேத்து விடுவதாகச் சொல்லி அவள் எழுந்து சென்ருள்.

பையன்களுக்கு வகுப்பைக் கலேத்தவுடனேயே உபாத்தியாரம்மாமீது அளவற்ற பிரியம் உண்டாகிவிட்டது.

3

அன்றுமாலே அவளுக்கு வீட்டில் இருக்கவே நிலே கொள்ளவில்லே. புனுகுப்பூனே போல மேலும் கீழும் நடந்தாள். அன்று காலே வகுப்பில் தான் கண்ட காட்சி கண்ணுக்குள்ளேநின்றது. 'நான் எந்த உருவைக் காதலித்தேனே, அதே உருவமே என் மாணவஞக வந்தால்—' அந்தக் கற்பனேயால் அவள் மனம் சிரித்துக் கொண்டது. என்ருலும் மனம் நிலே கொள்ளவில்லே. எங்காவது சுற்றித் திரிந்துவிட்டு வந்தாலாவது மனமும் உடலும் அலுத்துவிடாதா என்று நினேத்தாள்.

பஜாருக்கு வந்தாள். அங்கு சுவரெல்லாம் சினிமா விளம்பரங்கள் ஒட்டப் பட்டிருந்தன. அவள் கண்கள் அவளேயும் மீறி அந்தத் திசையில் திரும்பின. அலங்கோலமான நிலேயில் உள்ள ஒரு பெண்ணேடு எவனே சரசமாடுவதாகத் தீட்டப்பட்ட சித்திரம். இப்படியுமா ஒரு பெண் இருப்பாள்? கமலா அந்தச் சித்திரத்தைக் கூர்ந்து கவனித்தாள். அந்தக்

காமாதூரமான நிலையில் மல்லாந்து கிடந்த பெண் வேறு யாருமில்லை—லல்லூ!

கமலா மறுகணமே கண்களை மூடிக் கொண்டாள்; 'லலிதா இப்படித்தான் பிழைக்கிறுளா? கல்யாணமாகாமல் தனித்துவாழ விரும்பும் பெண்ணின் கதி இதுதானு?'

கமலா தன் மனத்தில் எழுந்த கசப்புணர்ச்சியை மாற்றுவதற்காகக் கண்ணை வேறுதிசையில் திருப்பினுள். ஆனுல், எங்கும் நிறைந்த ஆண்டவனைப் போல அங்கும் ஒரு சினிமா விளம்பரம்தான் காணப்பட்டது. அது ஒரு ஆங்கிலப்பட விளம்பரம், அதில் ஒரு பெண் அரை நிர்வாண உடையில் பகட்டாக அலங்கரித்துக் கொண்டு சிரித்தாள்.

'நேரம் போகாததற்கு எந்தப் படத்துக்குப் போனுல் என்ன?' என்று நினைத்தாள்; உண்மையில் அவள் தனக்குத் தானே சமாதானம் தேடிக்கொண்டாள்.

அது 'காரிருளில் ஒரு கன்னிகை' என்ற ஆங்கிலப் படம். ஜிஞ்சர் ரோஜர்ஸூம் ரே மிலாண்டும் நடித்த படம். எனவே கூட்டத்துக்குக் குறைவில்லை. கொட்டகை முழுதும் நிரம்பி வியர்வை மணம் காற்றில் இழைய ஆரம்பித்திருந்தது.

படம் ஆரம்பிக்கும் வரையிலும் கமலா நிலைகொள்ளாமல் இருந்தாள். சூழ் நிலையும், சிகரெட் புகையும், ஆங்கிலத் தியேட்டரின் பின்னணி சங்கீதத்தின் கோரமும் அவளுக்கு எரிச்சலைத்தான் தந்தன.

விளக்குகள் அணைந்தன.

ஒரு பெண்; பெயர் லிஸா எலியட். அவள் ஒரு பத்திரிகை ஆசிரியை. கன்னியாக வாழ்வதில் அவள் பெருமை கொண்டாள். ஆனுல், அவள் உள்ளமோ அவளையும் அறியாமல் ஏதேதோ கனவுகள் கண்டது. உண்மையில் அவளது நிஜ சொரூபம் அவள் கனவுகளின் உருவம்தான்; வாழ்க்கையிலோ அவள் வாழ்வதெல்லாம் வெறும்பொய்; மாயை. வாழ்க்கையில் அவள் உடம்பை

மூடித்துணிகள் அணிந்து கொள்கிருள்; சொப்பனத்திலோ அரை நிர்வாணமாகக் காட்சி அளிக்கிருள். வாழ்க்கையில் ஒரு பெண்ணுக வாழத் தெரியாமல், அவள் பெண்மை தோற்று விட்டதால், அவள் ஆணைப் போலவே வாழ்கிருள். அவளது பத்திரிகையின் விளம்பர மானேஜர் ஒரு யுவன்; அழகன்; கெட்டிக்காரன். அவனைக் காணும் போதெல்லாம் அவளுக்கு ஒரு புரியாத உணர்ச்சி. அந்தப் பத்திரிகையை நடத்தும் முதலாளியும் அவளைக் காதலிக்கிருன். அவனது காதலையும் அவள் புறக்கணிக்கவுமில்லை. எனவே அவளை நம்பி அந்த முதலாளி தன் முதல் மனைவியிடமிருந்து விவாக ரத்து வாங்குகிருன்; வாங்கிய பின்னரோ லிஸா அவனை மணக்க மறுத்து விடுகிருள். அந்தச் சமயம் அவளுக்கு விளம்பர மானேஜரின் எண்ணம் வந்து விடுகிறது. இப்படியாக அவள் மனம் இரண்டுங் கெட்ட நிலையில் திரிகிறது. பத்திரிகை அட்டைப் படத்துக்கு ஈஸ்டர் படம் போடுவதா, கிறிஸ்துமஸ் படம் போடுவதா? இது அவளுக்குப் பெரிய சந்தேகம். கனவில் சர்க்கஸ், ஈஸ்டர் காட்சிகள் எல்லாம் காண்கிருள், அதில் தானும் பங்கெடுக்கிருள். ஏதோ பொறுப்பற்ற குழந்தை மாதிரி நடந்து கொள்கிருள். கடைசியில் அவள் வாழ்க்கை காதல் எவ்வளவு முக்கியமானது என்று உணர்த்தியது. முடிவில் விளம்பர மானேஜரை மணந்து கொள்கிருள்: அவள் மனமும் சாந்தி பெறுகிறது...

பிராய்டின் மனேதத்துவக் கனவாராய்ச்சிகளின் அடிப்படையில் எழுதப்பட்ட கதை.

படம் முடிந்து வெளிவரும் வரையிலும் கமலா அந்தக் கதையிலும், அதன் காட்சியிலுமே மூழ்கியிருந்தாள், வெளியில் வந்ததும், அவளுக்கு அந்தப் படத்தின்மீது வெறுப்புணர்ச்சி தலை தூக்கியது. அவள் தன் பிரதிபிம்பத்தையே அந்தப்படத்தில் கண்டாள். 'நான் இப்படியா கனவு காண்கிறேன்? இல்லை, என் மனப்போராட்டம் இதுவா? அது வேறு. என்ன நேர்ந்தாலும் நான் கல்யாணம் செய்து கொள்ள மாட்டேன். இந்த ஆண்கள் கதை எழுதினுல்,

எப்போதுமே பெண்மைக்குத் தோல்வி கற்பித்தே எழுதுகிறார்கள். இதுதப்பு' என்று அவள் தனக்குத்தானே முடிவு கட்டிக் கொண்டாள்.

ஆனால் அதே சமயம் அவள் மனத்தில் மறு கேள்வியும் எழுந்தது: 'நீ பெண்ணாயிருந்து என்ன வெற்றி கண்டு விட்டாய்?'

'நான் வெற்றி கண்டேனோ இல்லையோ, தோற்கவில்லை' என்று பதில் சொல்லிக் கொண்டாள் கமலா.

ஊரெல்லாம் சுற்றி, சினிமாவும் பார்த்துவிட்டு வந்த பின்னும் கமலாவுக்குத் தூக்கம் வரவில்லை. அந்தப் படத்துக்கு ஏன் போனோம் என்றிருந்தது அவளுக்கு. சுகமான காற்றடித்தது; என்றாலும் அவள் புழுங்கிக் கொண்டிருந்தாள்.

கமலா ஜன்னலுக்கு வெளியே பார்த்தாள்.

வானத்தில் சந்திரன் இல்லை; நட்சத்திரங்கள் மட்டும் வேனிற் கொதிப்பைத் தாங்காது பொக்குளித்திருந்தன. அந்த அந்தகாரத்தில் கமலா தன் சிந்தனையைத் திரியவிட்டாள். ஆனால் அவள் மனமோ சுற்றிச் சுற்றி மீண்டும் அந்தச் சினிமாக் கதையிலேயே வந்து நின்றது. 'அப்படியானால் நானும் என் விரதத்தில் தோற்று விடுவேனோ?' அவள் பயந்தாள். 'தோற்றாலும் சுகுமாரனுக்காகத்தான் தோற்பேன்' என்று தைரியம் கூறிக்கொண்டாள். சுகுமாரனை எண்ணியதும் அவன் முகம் அவள் முகத்துக்கு நேராய்க் குனிந்து நெருங்குவது போன்ற ஒரு பிரமை. பக்கத்தில் வந்ததும், அவள் முகத்தைத் திருப்பிக் கொண்டாள். 'இது சுகுமாரனா, பாலனா?'

அவள் மனம் அலைக்கழிந்து கொண்டே இருந்தது; 'சுகுமாரனாய் இருந்தால்கூட இப்போது இப்படி இருக்க மாட்டார்; வயதும் வளர்ச்சியும் நான் காதலித்த மோஹன ரூபத்தைக் கொன்றிருக்கும். மேலும் சோமு சொன்னமாதிரி அவர் நடந்திருந்தால்......' அந்தச் சுகுமாரனை அவளால் நினைக்கக் கூட முடியவில்லை. 'அப்படியானால் பாலன் தான்

எனக்காக. என் இதயத்தில் வீற்றிருக்கும் சுகுமாரனுக அவதரித்து வந்தானு?'

அவளையும் அறியாமல் அவள் உள்ளம் சுகுமாரனின் மோஹன ரூபத்தின் மீதே லயித்தது. ஆத்மக் கலப்பென்ருல், சுகுமாரன் எந்த ரூபத்திலிருந்தாலும் அவனைத்தானே அவள் காதலிக்க வேண்டும்! ஆனுல் சுகுமாரனின் உருவமென்று நம்பி பாலனைக் காதலிப்பானேன்?

அவளையும் அறியாமல் அவள் உள்ளம் தடுமாறுவதை அவளால் உணரமுடியவில்லை. தன் உள்ளத்தையும் உடலையும் சேர்த்து வாட்டும் அன்றைய இரவின் புது அனுபவத்தை அர்த்தப்படுத்தத் தெரியவில்லை.

குழம்பிய மனத்தோடேயே கண்ணயர்ந்தாள்.

நல்ல தூக்கம் .....

—கமலா ஒரு கட்டிலில் படுத்திருக்கிருள். அயர்ந்த தூக்கம். திடீரென்று அவள் மீது ஏதோ பாய்ந்தமாதிரி இருந்தது. திடுக்கிட்டு விழித்தாள். ஒரு ஓநாய் அவள்மீது பாய்ந்து கடித்துக் கொண்டிருந்தது. அவள் அதைத் தூரத் தள்ளினுள். அது போகவில்லை. பாய்ந்து பாய்ந்து கடித்தது. சேலை, துணிமணிகளையெல்லாம் குதறிக் கிழித்தெறிந்தது. ரத்தப்பசி கொண்ட நாக்கையும் பல்லையும் காட்டிக்கொண்டு அவள் மார்பில் சீறிப்பாய்ந்தது. அவளைப் பிறந்த கோலத்தில் நிற்கவிட்டு, அந்த மார்பின் சதையை, ரத்தத்தைக் கடித்துக் குடித்தது. அந்த ரத்தம் வெளிப் பாயும்போது அவளுக்கு வேதனை மட்டுமில்லை; சுகமும் இருந்தது. அதன் வெறிப் பற்களின் குத்தலில் ஒரு நிவர்த்தி இருந்தது. கமலா அந்த ஓநாயின் பசிக்கு இடம் கொடுத்தாள். பொன்னிறமான அவள் மேனியில் குங்குமச் சாறுபோல் ரத்தம் பொழிந்தது........

கமலா திடுக்கிட்டு விழித்தெழுந்தாள். தன் ஆடை கலைந்து, தான் அலங்கோலமான நிலையில் கிடப்பதை உணர்ந் தாள். இருளில் கூட அவளால் அப்படி இருக்க முடியவில்லை.

அவள் தேகம் பட படத்தது; மேல் காலெல்லாம் தாங்க முடியாத வலி யெடுப்பது போலிருந்தது.

அந்தக் கனவு—

'எவ்வளவு பயங்கரமாயிருந்தது?' அவள் நெஞ்சு பந்தயக் குதிரையைப் போல் துடித்து மோதியது. 'இதென்ன கனவு? என் மேல் ஏன் ஓநாய் பாய்ந்தது? அது கடிக்கக் கடிக்க நான் ஏன் அதை விட்டுக்கொண்டிருந்தேன்? அந்த ஓநாய்—என்னைப் பிய்த்துப் பிடுங்கும் ஏதாவது ஒரு உணர்ச்சியின் உருவக ரூபம் தானா? ஆனால், என்னில் அந்த மாதிரியான மிருக உணர்ச்சிக்கு இடமேது? ரத்தப்பசி ஏது? இல்லையென்றால், லிஸா எலி யட்டைப் போல், நானும் என்னை அறியாமலேயே எதற்காவது இரையாகி வருகிறேனா?......'

கமலா அந்தச் சொப்பனத்தின் தாத்பரியத்தைப் புரிந்து கொள்ள முடியவில்லை. அவளைக் கடித்த அந்த மிருகம் அவளை வருத்தும் உணர்ச்சியாகவே இருக்கவேண்டும் என்று என்ன நிச்சயம்? அவள் உடம்பின் உணர்ச்சிதான் அந்த ஓநாய் என்றால், அதன் வெறிக்கு அவளே இடம் கொடுப்பாளா? எனவே, அந்த ஓநாய் அவள் உடம்பினுள்ளிருந்தே பிறந்த பிறவியல்ல. அது தனிப் பிறவி. அப்படி அவளை வதைக்கும் அந்த வாதனைக்கு அவள் இடமும் கொடுக்கும் அந்த ஓநாய் எந்தப் பொருளின் உருவகம்? ஒருவேளை பாலனா? பாலனின் உருவமே அவளை அப்படி வதைத்தால்? அவனே அந்த் ஓநாயானால்?......

கமலாவுக்கு மனசின் பித்தலாட்டத்தைச் சரியாக உணரத் தெரியவில்லை. கனவு என்பது தானறியாமல் தன்னுள் கட்டுண்டு கிடக்கும் உணர்ச்சிகள் தூக்கத்தில் வலுப் பெற்று கட்டிழந்து துள்ளி விளையாடுவதுதான் என்று அவள் தெரிந்து கொள்ளவில்லை.

அப்படி அவளறியாமல் அவளை வருத்தும் உணர்ச்சி எது?

கமலாவுக்கு மனசில் போராட்டம் வலுப்பெற்று ஓங்குவதற்குக் காரணம் பாலனின் வரவு மட்டும் அல்ல; அவள் பருவமும் ஒரு காரணம்; முக்கியக் காரணம். அதை அவள் உணரவே இல்லை.

அவள் மனசில் தன் பெதும்பைப் பருவத்தில் ஏற்பட்டது போலவே இன்றும் உடற்பார உணர்ச்சியும் ஆத்ம நிராசையும் தலை தூக்கிக்கொண்டிருந்தன. அதன் காரண மாகத்தான் அவளது மனம் பாலனை நாடிச் செல்வதை அவளால் தடுக்க முடியவில்லை; பாலனின் தோற்றத்தைச் சுகுமாரனுடையது என்று அவள் சமாதானம் கொள்வதற்கும் அதுவே காரணம். அவள் தன் மனத்தை எதன் மீதாவது படரவிடத் துடித்தாள்.

இப்போது அவள் தெரிவைப் பருவத்தின் அந்திம தசையில் நாட்களைக் கழிக்கும் பெண். தெரிவைப் பருவம் கழிந்து பேரிளம் பெண் பருவம் வந்துவிட்டால், அவள் உடம்பிலிருந்து தாய்மைப் பருவம் கழன்றோடிவிடும். அவள் பெண்ணாக இல்லாமல், தாயாக வேண்டுமென்றால் இதுதான் சந்தர்ப்பம். இந்தப் பருவத்தில் அவள் வெற்றிகரமாகப் போராடிவிட்டால் இயற்கை தோற்றுவிடும். எனவே இயற்கை தன் கடைசிப் போரை அவள் மீது தொடங்கி யிருந்தது.

'மலரும்போதும் வேதனை; கூம்பும்போதும் வேதனையா?' அவளிடம் தாய்மைத் தன்மை மலர்ந்து எத்தனையோ ஆண்டுகள் ஆகிவிட்டன. என்றாலும் அவள் தாயாக மறுத்து விட்டாள். எனவே தாய்மைக்கு அவள் இழைத்த துரோகத்தின் கோபத்தையெல்லாம் மனசில் வைத்துக் கொண்டு இயற்கை அவளைத் தோற்கடிக்க முயன்றது.

இதைத்தான் கமலா புரிந்துகொள்ளவில்லை. இத்தனை நாளும் தான் அனுபவியாத அளவு வேகத்தோடு தன் உடல்

தன்மீது ஆதிக்கம் செலுத்துவானேன் என்று நினைத்தாள். முன்பெல்லாம் அவள் உடம்பில் இதுபோன்ற நமைச்சல் வெறி தோன்றினால் அதை எதிர்த்து போராடியிருக்கிறாள்; இத்தனை நாளும் வெற்றியும் கண்டுவிட்டாள். ஆனால், இன்றைக்கோ அவள் இதயத்தில் போராடவே சக்தியில்லை. அது மட்டுமல்ல. அந்த உணர்ச்சி வேகத்தை எதிர்த்து நில்லாமல், அதன் போக்கிலேயே மிதந்து செல்வதில் அவளுக்கு ஏதோ திருப்தி இருப்பது போலவும் தோன்றியது. இருந்தாலும், அவள் தன் லட்சியத்தைக் கைவிடவில்லை. எனவேதான் இந்த அவஸ்தை; இந்த மன விகாரக் கனவுகள்; மயக்கம்—எல்லாம்.

அப்போதுதான் அவள் மனசில் லலிதா சொன்ன விஷயம் ஞாபகத்துக்கு வந்தது: 'கமலா, உனக்கு ஒன்றும் அப்படி வயதாகி விடவில்லை; யாரையாவது கல்யாணம் செய்து கொள்.'

'என்ன' நான் கல்யாணம் பண்ணிக்கொள்வதா?'

கமலாவின் மனம் நங்கூரமற்ற கப்பலைப் போல் அல்லாடியது; அவள் உள்ளம் தன் இரும்புப் பிடிப்பை இழந்து விட்டதை அவள் உணரவில்லை.

மேலும் பாலனைத் தினம் தினம் வகுப்பில் காணும் போதெல்லாம் அவள் கண்கள் தன்னையும் அறியாமல் அவன் பக்கம் திரும்பின. கண்களை அவளால் இழுத்து நிறுத்த முடியவில்லை.

—இது ஏன்? நான் பாலனைக் காதலிக்க விரும்புகிறேனா? சே! மிஞ்சிப்போனால் அவனுக்கு இருபது வயதிருக்கும். அவனை நான் காதலிப்பதாவது? வயதுக்கு மூத்த பெண் ஒரு இளைஞனை-இப்போதுதான் வாலிபம் எய்திவிட்ட இளைஞனைக் காதலித்ததாகக் கதைகளில் கூடப் படித்ததில்லையே! ஆல்பிரெட். எச். மைல்ஸ் எழுதிய 'காதலும் பிராயமும்' என்ற கதையைக் கூடப் படித்திருக்கிறேன். ஐம்பது வயதுக்கு

மேலான கிழவன் பதினெட்டு வயதுக்குமரியை மணக்கிறன். ஆசிரியர் கூறும் காரணம் கூட, புரிவது போலத் தோன்றியது.

—ஆனால் வயதுக்கிளைய இளைஞனை முப்பத்தி நாலு வயதாகி விட்ட பெண் காதலிக்கிறளா? ஷேக்ஸ்பியர் தம்மை விட எட்டு வயது மூத்த பெண்ணை மணந்தார். எனக்கும் பாலனுக்கும் உள்ள வயது வித்தியாசமோ? மலையும் மடுவும் போல் அல்லவா தோன்றுகிறது? இந்தக் காதல்—உண்மை யில் இது காதல் என்றல், அதற்கு நான் என்ன விளக்கம் கூறுவது? இல்லையென்றல், வயது பேதம் தெரியாத என் லட்சியக் காதல் அவனை விரும்புகிறதா? ஆனல், நான் ஏன் அதை உணரவில்லை? ஏன் எதிர்த்துப் போராடிப் பார்க்கிறேன்?

—உண்மையில், நான் என் லட்சியத்தைத்தான் எதிர்த்துப் போராடுகிறேன?

கமலாவுக்கு ஒன்றும் புரியவில்லை.

## 5

ஒரு நாள் மாலை.

யாரோ கதவைத் தட்டும் ஓசை கேட்டது; கமலா கத வைத் திறந்தாள். பாலன்தான் வந்திருந்தான்.

'அவன் ஏன் வந்தான்? என் உள்ளத்தின் அலைக்கழிப்பை அவன் உணர்ந்து கொண்டான? உணர்ந்து என் காதலை நிறைவேற்ற வந்தான? அவ்வளவுக்கு அவன் அனுபவம் பெற்றவன?'

''எங்கே வந்தே?''

''உங்களிடம் ட்யூஷன் சொல்லிக் கொள்ள விருப்பம்.''

கமலா உடனே பதில் சொல்லவில்லை. ஏதோ யோசித் தாள். பிறகு ''நான் ட்யூஷன் சொல்லுவதில்லையே!'' என்றாள்.

''இல்லை. நீங்கள் கட்டாயம்—'' அவன் வார்த்தைகளை விழுங்கினான்.

கமலா யோசித்தாள்: 'பாலனோடு நெருங்கிப் பழக இது ஒரு சந்தர்ப்பம். ஆனால், நெருங்கிப் பழகுவதன் மூலம் என் சுகுமாரனை அவனில் கண்டு, அவன் மீதுள்ள என் நப்பாசையைக் களைந்தெறிய முடியுமா? அல்லது பாலனுக்கே நான் அடிமையாகி விடுவேனா? இருந்தாலும், பாலன் வந்தால் அவன் உருவத்தில் நான் என் லட்சியக் காதலனைக் காணமுடியும். அதை வேண்டாம் என்பானேன்?

கமலா ஒப்புக்கொண்டுவிட்டாள்.

அன்று மாலை அவள் நிலைக்கண்ணாடி முன் நின்று அழகு பார்த்து அலங்கரித்துக்கொண்டாள்.

''நான் ஏன் அலங்கரிக்கிறேன்? கிழடாகி வருகிறேன் என்பதை மறைக்கவா? எதற்காக மறைக்க வேண்டும்? இல்லை. நான் என் இளமையைத் திரும்பப்பெற எண்ணுகிறேனா? எதற்காக? யாருக்காக?''

இந்தக் கேள்விகளுக்கெல்லாம் அவளுக்கு ஒரே பதில் தான் கிடைத்தது: பாலன்!

அன்றிரவு அவள் படுக்கப் போகுமுன் மேஜையில் கிடந்த பத்திரிகையை எடுத்துப் புரட்டினாள். அதில் ஹாவ்லக் எல்லிஸ் உடற்கலப்பின் தத்துவத்தைப் பற்றி எழுதிய கட்டுரை பிரசுரமாகியிருந்தது. உடல் விஷயம் என்றாலே பக்கத்தைத் தள்ளும் கமலாவுக்கு அன்று அதைப் படிப்பதற்குத் தடுக்கமுடியாத ஆசை எழுந்தது. படித்தாள். 'என்ன இருந்தாலும், ஆத்மார்த்தக் காதலுக்கு வருமா? அது தெய்வீகமானது; கடவுளுக்குச் சமானமானது; ஜீவ-பர ஆத்மாக்களின் சிரஞ்சீவிச் சங்கமம் அது' என்று நினைத்தாள்.

ஆனால் அந்தக் கட்டுரையின் இறுதி வாசகம்—

—And if in the end - as may or may not be—they attain the climax of free and complete union, then their human play has become one with that divine play of creation in which old poets fabled that, out of the dust of the ground and in his own image, some God of Chaos once created Man.

—முடிவில், அவர்கள் (காதலர்கள்) பூர்ணமான, சுதந்திரமான சுகானந்த சிகரத்தை அடைந்தால், பண்டைக் கவிஞர் பெருமக்கள் கற்பித்துப் பாடிய சிருஷ்டியின் தெய்வ சித்தோடு, பூமிப் புழுதியை அள்ளி, தன் சொந்த ரூபத்திலேயே மானுடத்தைப் படைத்ததாகச் சொல்லும் அந்தத் தெய்வதத்தோடு, அந்தக் காதலர்களின் காதல் லீலையும் ஒன்றி முயங்கி விடுகிறது......

''அப்படியானால் சரீரக் கலப்பின் மூலமாகவும் நான் கருதும் அந்தத் தெய்வீகப் பதவியை அடைய முடியுமா? மனிதனின் படைப்புத் தொழில் ஆண்டவன் சிருஷ்டியின் பிரதிபிம்பம்தானா? ஜீவாத்மாவும் பரமாத்மாவும் கலக்கும் பேதாபேத மற்ற சங்கமத்தை உடற் கலப்பிலும் காணலாமா? ஆமாம். உடற் கலப்பில்லை யென்றால், நான் ஏது? சுகுமாரன் ஏது? பாலன்தான் ஏது? நாங்கள் மனித சிருஷ்டிகள்! அப்படியானால் உடற்கலப்பு பாவமில்லையா? பாவமில்லை யென்றால் அதில் ஆத்மக் கலப்பும் இருக்க வேண்டுமா?''

கமலாவின் மனசில் இத்தனை வருஷங்களுக்குப் பிறகு உண்மையின் ஒளி மங்கலாகத் தெரிந்தது. உடனேயே அவளுக்குத் தான் படித்த 'அந்தி விளக்கு' நாடகத்தின் ஞாபகமும் வந்தது: 'ஆம், அந்த இளைஞன் அவள் உடலைத் தழுவாவிட்டால், அந்த நிழல்கள் எப்படி ஒன்று சேரும்? உடல் ஒருமித்துக் கலந்தால், உள்ளமும் கலந்துவிடாதா?'

இந்த உண்மையை உணர்ந்த பின்னர்தான் அவளுக்கு ஏன் ரோமியோ சுவரேறிக் குதித்தான், ஆண்டாள் தித்திப்பை விரும்பினாள் என்ற உண்மை விளங்கியது.

—'பூ அழகாக இருக்கிறது; கண்ணுக்குக் குளிர்ச்சி தருகிறது. அதன் மணம் சுகந்தம்; சுவாசத்துக்குச் சுகம் தருகிறது. குயிலின் கீதம் செவிக்குத் தேன் பெய்கிறது. கனி நாவுக்கு இனிமை ஊட்டுகிறது. தென்றல் உடலுக்குக் குதூகலம் அளிக்கிறது—ஆம், இயற்கையின் சௌந்தர்யப் பொருள்களெல்லாம் ஐம்புலனுக்கும் இன்பம் தருகிறது. உடலால் அனுபவிக்கும் இன்பங்களைத்தானே கவிஞர்கள் காதலோடு சம்பந்தப்படுத்தினர்கள். உடலின் இன்பம் தான் உள்ளத்தின் இன்பமா? அப்படியானல், காதல் இன்பத்தில் இந்த ஐம்புலனுக்குமே ஆனந்தம் உண்டாகிறதா? ஆம், உண்டாக வேண்டும். அதுதான் உண்மையான இன்பம்.'

அவள் உள்ளம் தோல்வியை ஒப்புக் கொண்டது; உடலுடன் ஒத்துழைக்க இசைந்தது.

அவள் பாலனைக் காதலிப்பதை வெறுக்கவில்லை.

## 6

பாலனுக்கும் கடந்த இரண்டு மாத காலமாக இதே போல் போராட்டம். தன் ஆசிரியை கமலா தன்னிடம் ஏன் இவ்வளவு சகஜமாகப் பழகுகிறள்; அது தாயன்பா? இல்லை; குருவின் அன்பா?

அவன் மனசில் கேள்விகள் உறுத்தின. காரணம், அவனும் இயற்கையின் சோதனைக்கு ஆளாகிக் கொண்டிருந்தான். கமலா கூம்பிக்கொண்டிருந்தாள்; அவன் மலர்ந்து கொண்டிருந்தான்.

அவன் இப்போது பருவகால யுவன். இயற்கை அவன் உடம்பில் தளதளப்பு ஊட்டியது; குரலில் ஆண்மை ஏற்றியது, முகத்தில் மீசை அரும்பியது. தன் உடம்பிலே ஏற்பட்டு வரும் மாறுதலை அவனும் உணர்ந்தான். முன்னெல்லாம் பாலன் டிரைவரைப் போட்டுக்கொண்டு ஊர்க்காடு எல்லாம் சுற்றி

வந்து விடுவான். இப்போதோ பாதம் வரையிலும் மறையும் படி வேட்டி கட்டாமல், வெளியில் செல்லவே கூசினுன். தன் கிராப் உலேந்து விடாமலும் முகத்தில் அழுக்குப் படியாமலும் இருப்பதில் அதிக கவனம் செலுத்தினுன்.

'நான் அலங்கோலமாய்ப் போனுல் யாருக்கென்ன? இல்லே எதற்காக அலங்கரிக்கிறேன்? யாருக்காக?' இதை ஆராயும் போது அவன் மனத்தில் ஏதோ காலியிடம் விழுந்திருப்பதாகப் பிரமை தட்டியது; 'நான் ஏன் இந்த உலகில் தனியாய் இருக்கிறேன்? ஏன் என் பெற்ருேர்கள்மீது உடன்பிறந்தார்மீது என் பாச உணர்ச்சி தேய்ந்து வருகிறது? அப்படியானுல் நான் யாருடைய பாசத்துக்காக, ஆசைக்காகத் திரிகிறேன்?'

அவன் தேடித் திரியும் அந்த மோஹினி மாயை அவனுக்கு எத்தனேயோ தடவை சொப்பன அவஸ்தை தந்திருக்கிருள். ''அவள் யார்? அவள் எங்கிருக்கிருள்? அவளுக்கும் எனக்கும் என்ன சம்பந்தம்?'' இதற்கு அவன் விடை காணவில்லே. என்ருலும், அவன் தான் ஆண் மகனுன உண்மையை அறிந்தான். 'நான் ஆண். அவளேத் தேடி அடைவேன். அவள் என் இதயராணி' என்று சொல்லிக் கொண்டான். அது அந்தப் பருவத்தில் இயற்கை நிகழ்த்தும் மன வளர்ச்சி அது.

''இந்த உண்மை அவனுக்குப் புலனுனவுடனேயே அவனுக்குத் தன் ஆசிரியை கமலாவைப் பற்றியும் ஞாபகம் வந்து விட்டது.

அன்ருெரு நாள்—

கமலா வீட்டு மாடியில் மின்சார விளக்கு அணேந்து போய் விட்டது. இருளில் கமலாவும் பாலனும் மறைந்து விட்டனர். அப்போது கமலாவின் குளிர்ந்த கரம் தன்மீது படுவதாக உணர்ந்தான். அவன் உடம்பு புல்லரித்தது.

''பாலா!''

பாலன் பேச நினைத்தான்; நாக்கு வளையவில்லை.

"உன் கையா? பரவாயில்லை. மேஜையில் தீப்பெட்டி இருக்கிறதா பார்" என்றாள் கமலா.

அவன் தடவிப் பார்த்தான்.

அப்போதும் அவன் கை கமலாவின் மீது பட்டது அவன் உடல் மீண்டும் புல்லரித்தது.

இதுமாதிரி எத்தனையோ சம்பவங்கள்: 'கமலா வேண்டுமென்றுதான் என்னைத் தொடுகிறாளா? அவளுக்கு என்மீது ஆசையா? இல்லை. நானும் அவளை விரும்புகிறேனா? அவள் என்னை விட மூத்தவள் அல்லவா? குரு...' அவன் ஆண்மை அவனை இடித்தது: "இல்லையடா, நீ ஆண்; அவள் பெண்."

—"கமலாவை நான் விரும்புகிறேனா? நான் தேடித் திரியும் பாசத்தை அவள்தான் வழங்குகிறாளா? அதுதான் காதலா? அவள்தான் என் இதயராணியா?"

அன்று பாலன் சீக்கிரமாகவே ட்யூஷனுக்குக் கிளம்பினான். அவன் உடம்பில் ஒரே பரபரப்பும் துடிப்பும் காணப்பட்டது.

கமலா அன்று அவனுக்கு ஜெர்மன் மகாகவி கதேயின் வாழ்க்கை வரலாற்றைப் பாடம் சொன்னாள். கதேயின் வாழ்வே ஒரே காதல் நாடகம். தம் வயோதிகக் காலத்திலும் அவர் உல்ரிக் என்ற இளம் பெண்ணைக் காதலித்தார். கமலா அந்தப் பகுதியைச் சொல்லிக் கொடுத்தாள்.

பரபரப்புடன் கேட்டுக்கொண்டிருந்த பாலன் "அந்தக் காதல் நிறைவேறிற்றா?" என்றான்.

"இல்லை."

பாலன் பதில் பேசவில்லை. சிறிது நேரம் கழித்துப் பாலன் லேசாகக் கனைத்துக்கொண்டு, "இதுமாதிரி வயதுக்கு மூத்த

பெண் இளைஞனைக் காதலித்ததாக எங்கேனும் இருக்கிறதா?'' என்று கேட்டான்.

''தெரியவில்லை.'' கமலா தன் வாய்க்குள்ளாகவே பேசிக் கொண்டாள். ஆனால் மறுகணமே அவள் உள்ளம் தன் தவறுதலை உணர்ந்தது. 'இல்லையாவது? இதோ நீ இருக்கிறாயே. உன் காதலனிடம் உண்மையைச் சொல்ல என்ன வெட்கம்? சந்தர்ப்பத்தை நழுவ விடாதடி, கமலா!' என்று இடித்தது.

பதில் சொல்லிவிட்டுப் பேசாதிருந்த கமலா மறுகணமே பாலன் கேட்டதன் அர்த்தத்தையும் புரிந்துகொண்டாள்; 'அப்படியானால் அவனும் என்னைக் காதலிக்கிறான்!'

அவள் கண்கள் சிவந்தன. உதடுகள் துடித்தன. கைகள் குறுகுறுத்தன.

மறுகணம், ''இல்லை, பாலா! இதோ நான் இருக்கிறேன்! நான் இருக்கிறேன்'' என்று சத்தமிட்டுக் கொண்டே பாலனைத் தாவி அணைத்தாள். இத்தனை நாள் காணாத சுகம் அவளுக்கு உடம்பில் தென்பட்டது.

பாலன் இதை எதிர் பார்க்கவில்லை; எனவே திக்கு முக்காடினான். ஆனால் மறுகணமே அவன் ஆண்மை விழித்துக் கொண்டது.

★